ஸ்ரீ துர்க்கை அம்மன் துணை

✆ Res : 6430076 ✆ Shop : 8281327



# தனலக்ஷ்மி சாரீஸ்

## உயர்தர சுங்குடி தயாரிப்பாளர்

### உயர்ந்த தரத்துடன் குறைந்த விலையில் கிடைக்கும்.

நாங்கள் 100's ordinary quality, 100's special, 120 Superior quality ஆகியவை அதிக கெட்டி சாயத்துடன் தயார் செய்கின்றோம். இதனால் குறைந்த விலையுள்ள புடவையும் நீடித்து உழைப்பதற்கு உத்தரவாதம் தருகிறோம். காட்டன் புடவை நிறம் மங்கி விடுவதற்கு முக்கிய காரணம்:

சாயம் குறைவாக கொடுப்பதால் . அதனால் நாங்கள் கெட்டி சாயத்துடன் மதுரை சுங்கிடி புடவைகள், பேன்ஸி பத்திக் பிரிண்ட்ஸ் ஆகியவை தயார் செய்கிறோம். 120 Superior quality நல்ல தரத்துடன் குறைவான விலையில் விற்பனை செய்கிறோம்.

எங்களிடம் 6 கெஜம், 7 கெஜம், 9 கெஜம், 10 கெஜம் அதிக அளவில் தயார் செய்வதால் அதிக varities கிடைக்கும். தனலட்சுமி தேவேந்திரா சாரீஸ், *High quality with blows Bathik Sarees, Mercerised Cotton with Jari and thread work and with rich pallu also avilable.* மற்றும் *Banthini prints, Gold print, Latest Screen printing designs, Block prints, Chudithar sets, Apoorva printed polycot, Screen printed polycot, Block printed polycot, Chettynadu Sarees, Fancy Pollachi Cotton, Negamam Cotton, Mangalagiri Cotton, Bengal Cotton, Silk Cotton, Guntur Sarees, Rasipuram Cotton, Bangalore printed Silks and Polysilk Latest arrival Periya palayam cotton Karishma Sarees, Surat Synthetic Sarees, Printed Bengal Cotton Sarees are available. Latest arrival Gayathri Sarees (pure silk and cotton mixed).*

புதிதாக குறைந்த எடையுள்ள 6 கெஜம், 9 கெஜம் புடவைகள் தயார் செய்கிறோம். இது விலையும் மிகக் குறைவாகவும் நல்ல தரத்துடனும் இருக்கும். மற்றும் சேலம் வேஷ்டிகள், டவல்கள், மேட்சிங் ப்ளவுஸ்கள், உயர்தர ஈரோடு காட்டன், Semi Gadwal கிடைக்கும். பட்டுப் புடவை போன்ற தோற்றம் கொண்ட உயர்ரக கைத்தறி காட்டன் புடவை with rich pallu மற்றும் ordinary Pallu. உயர்தர காட்டன் நூலால் தயாரிக்கப்படுகிறது.

அமைதியான சூழல், திருப்தியான வாடிக்கையாளர் சேவை, car parking வசதி. நியாயமான விலையில் எல்லா புடவைகளுக்கும் உத்திரவாதம் உண்டு. கம்பெனியில் தயாராகும் பொழுது ஏற்படும் சிறிய கோளாறு உள்ள புடவைகள் Discountல் கிடைக்கும்.

நெ. 1, கோபாலகிருஷ்ண ரோடு (பாண்டி பஜாரிலிருந்து டாக்டர் நாயர் ரோடுக்கு திரும்பியவுடன் இரண்டாவது இடதுபுற சாலை, தி.நகர், சென்னை– 17)

*Bus No - 9A,10,47A, 47D (Power office Bus stop. Dr. Nair road)*

**Our Coimbatore branch**

P.R. Shanthi, No.15, Siva Sakthi Colony,
Thondamuthur Road, Vadavalli, Coimbatore 641 041. ✆ 424981

# அமெரிக்கப் போலீஸுக்கு தொப்பை உண்டா?



• ரஜினி குமாரி

• எரிக் குக்

• தாமஸ் எல்ஸ்வொர்த்

"ஆச்சரியமாக இருக்கிறது உங்கள் போலீஸ் துறையினரைப் பார்க்கிறபோது. கீழ் மட்டத்திலுள்ள கான்ஸ்டபிளாகட்டும் மேல் மட்டத்தில் உள்ள கமிஷனர் போன்ற உயரதிகாரிகளாகட்டும், தினம் பன்னிரண்டு அல்லது பதினாலு மணி நேரம் பணிபுரிகிறார்கள். அமெரிக்காவில், போலீஸ் அதிகாரிகளுக்குக் கூட வாரம் நாற்பது மணி நேர வேலைதான்!'' என்கிறார் அமெரிக்காவின் இல்லினாய்ஸ் மாநிலத்தைச் சேர்ந்த எரிக் குக் என்கிற போலீஸ் அதிகாரி.

''இந்தியாவின் மக்கள் தொகையை ஒப்பிடுகிறபோது, போலீஸ் துறையின் பலம் குறைவு. அமெரிக்கா போல, போதிய வசதிகளும் இங்கு இல்லை. ஆனாலும் போலீஸ் திறமையுடன் செயல்படுவதைப் பார்க்கிறபோது, சந்தோஷமாக இருக்கிறது!'' என்கிறார் தாமஸ் எல்ஸ்வொர்த். இல்லினாய்ஸ் மாநில பல்கலைக் கழகத்தின் குற்றவியல் நீதித் துறையின் தலைவர் இவர்.

அண்மையில் இல்லினாய்ஸ் பல்கலைக் கழகத்தின் குற்றவியல் நீதித் துறையின் மாணவ - மாணவிகள், பேராசிரியர்கள் அடங்கிய குழு ஒன்று, சென்னைப் பல்கலைக் கழகத்தின் கிரிமினாலஜி துறையுடன் செய்து கொண்டுள்ள ஒப்பந்தத்தின்படி, சென்னை வந்திருந்தது. போலீஸ் அதிகாரியாகப் பணி

யாற்றிக் கொண்டே படிக்கும் எரிக் குக்கும் இந்தக் குழுவில் இடம் பெற்றிருந்தார். அவர்களைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது தான், இப்படி நமது காக்கி சட்டைக்காரர்களுக்குப் பாராட்டுப் பூங்கொத்து வழங்கினார்கள்!

**"அமெரிக்காவில், பொதுவாக, எந்த மாதிரியான குற்றங்கள் அதிகம் நிகழ்கின்றன?" – எரிக் குக்கிடம் கேட்டோம்.**

"இந்தியாவில், பெரும்பாலானவை சிறு குற்றங்கள்தான். சொத்துத் தகராறு, வகையானவையும் கணிசம். கொலை, கொள்ளைகள் குறைவுதான். ஆனால் அமெரிக்காவில் நிலைமை மோசம். போதைப் பொருள்கள் சம்பந்தப்பட்ட குற்றங்கள், வழிப்பறிகள், கொலைகள் இவை அதிகம். இதுபோன்ற குற்றங்களில் ஈடுபடுகிறவர்கள் அநேகமாக பதினெட்டு வயது முதல் இருபத்தாறு வயதுக்குட்பட்டவர்களாகவே இருக்கிறார்கள். சிறுவர் குற்றங்களும் நிகழ்கின்றன. ஒரு விஷயம் சொன்னால் நம்புவது கஷ்டமாக இருக்கும். பதின்மூன்று வயதுப் பையன் ஒருவன், பெரியவர்கள் செய்யும் போதை மருந்து, திட்டமிட்ட கொலை, கொள்ளை போன்ற குற்றங்களைச் செய்தால், அவனை சிறுவனாகக் கருதாமல், வயது வந்தவனாகக் கருதி, அதற்குரிய கடுமையான தண்டனை வழங்க அமெரிக்கச் சட்டத்தில் வழி இருக்கிறது!"

**"சமீபகாலமாக, பள்ளிக் கூடத்தில் படிக்கிற சிறுவர்கள் மத்தியில் துப்பாக்கிக் கலாசாரம் அதிகரித்திருப்பது போலத் தெரிகிறதே?"**

"இளம் சிறுவர்கள், பெரியவர்கள் போல துப்பாக்கிகளைப் பயன்படுத்தி, குற்றங்கள் புரிவது என்பது அமெரிக்காவில் கொஞ்சம் அதிகரித்திருப்பது உண்மைதான். என்றாலும், இதை ஒரு பரபரப்பான விஷயமாக்கி, திரும்பத் திரும்ப அதன் மீது வெளிச்சம் பாய்ச்சி, சென்சேஷனல் ஆக்கும் பணியை பத்திரிகைகளும், மீடியாவும் செம்மையாகவே செய்து வருகின்றன. துப்பாக்கியுடன், பள்ளிக் கூடத்துக்குப் போகிற ஒரு சிறுவன், ஐந்து பேரைச் சுட்டுக் கொல்லுகிறான் என்றால், அந்தச் செய்தியை டெலிவிஷனில் அன்றைய தினம் மட்டும் குறைந்தது நூறு தடவையாவது காட்டிக் கொண்டே இருப்பார்கள். பத்திரிகைகளும் அப்படியே. இதனால், உலகம் முழுக்க அந்த விஷயம் தெரிகிறது; பரபரப்பு ஏற்படுகிறது!"

**"பொதுவாகவே, அமெரிக்காவில் குற்றங்கள் அதிகமாக நிகழ என்ன காரணம்?"**

"பணம்தான் வாழ்க்கை என்றாகிவிட்டது அமெரிக்காவில். ஒரு குறிப்பிட்ட வயதுக்கு மேல், குழந்தைகள், பெற்றோரை நம்பியிருக்காமல், சொந்தக் காலில் நிற்கிற வாழ்க்கை முறை, மிக எளிதாக துப்பாக்கி வாங்கும் சௌகரியத்தைக் கொடுக்கிறது. கூடவே போதைப் பொருள்களும் சுலபமாகக் கிடைக்கின்றன. விவாகரத்தான பின் ஒற்றைப் பெற்றோருடனான வாழ்க்கை (தாய் அல்லது தந்தையுடன்) பேட்டை தாதாக் குழுக்களுடனான தொடர்பைச் சுலபமாக்குகிறது. ஆனாலும் புள்ளி விவரங்கள், குற்றங்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டு வருவதைத்தான் காட்டுகின்றன. மீடியா பப்ளிசிடிதான், குற்றங்கள் அதிகரித்து வருவதாக ஒரு தோற்றத்தை ஏற்படுத்துகிறது!"

**"எங்கள் ஊரில், விசாரணை என்கிற பெயரில் உண்மைகளை வரவழைக்க, அடித்துத் துவைத்து விடுவது போலீஸாரின் வழக்கம். நீங்களும் நாலாம் தர முறைகளைப் பயன்படுத்துவது உண்டா?"**

"முடியாது. அப்படிச் செய்தால், அந்த அதிகாரிக்கு தண்டனை நிச்சயம். அமெரிக்க சுப்ரீம் கோர்ட் வழங்கிய 'மிராண்டா உரிமை வழக்கு' மிகப் பிரபலம். அந்த தீர்ப்பின்படி, ஒருவரைக் கைது செய்து, காவல் நிலையத்துக்கு அழைத்துப் போனால், அவருக்கென்று சில உரிமைகள் உண்டு. அந்த உரிமைகளின் பட்டியலை, அவருக்குப் படித்துக் காட்ட வேண்டும். அவருடைய வழக்கறிஞருடன் தொடர்பு கொள்ள அனுமதி தர வேண்டும். ஒரு விஷயம் தெரியுமா? உங்களுக்கு விசாரணையில் ஒத்துழைப்புத் தராமல் இருக்கவும் அவருக்கு உரிமை



**"அந்த கோவில் குருக்கள் பக்தர்களை ரொம்பத்தான் காக்கா பிடிக்கறார்!"**

**"எப்படிச் சொல்றே?"**

**"கற்பூரத் தட்டில் 50 ரூபாய் போட்டால் சாமிக்குப் பதிலாக பணம் போட்டவருக்கே அர்ச்சனை பண்ணிடறார்!"**

**– புளியரை கணேசன்**

உண்டு. அவர் வாயையே திறக்க வில்லை என்றாலும் கூட, போலீஸ் அவரைப் பேசும்படி கட்டாயப் படுத்த முடியாது; அவர் மீது கைவைக்க முடியாது!"

**"அப்புறம் எப்படித்தான் உண்மையை வரவழைப்பது?"**

"அந்தக் குற்றத்தில் பாதிக்கப்பட்டவர், அவர் தரப்பினர், மற்ற சாட்சிகள் என்று விசாரிக்க வேண்டியது தான்...!"

**"விசாரணை, கோர்ட், கேஸ் என்று அதற்குப் பின்னால் இழுத்துக் கொண்டே போகுமா?"**

"அதற்கும் சாத்தியமில்லை. எந்த வழக்கு - விசாரணை, என்றாலும், ஆறு மாதம் அல்லது ஒரு வருடத்துக்குள்ளாக முடிந்து தீர்ப்பாகி விடும். நீதிபதியின் தீர்ப்பு இல்லாமல், இரு தரப்பு வக்கீல்களும் ஒன்று கூடிப் பேசி, ஒரு தண்டனைக்கு ஒப்புக் கொண்டு விட்டால், நீதிபதி, வழக்கை விசாரித்துத் தீர்ப்பு வழங்கும் வரை காத்திருக்காமல், தண்டனையை அனுபவிக்க ஆரம்பித்து விடலாம். ஆனால், பெரும்பாலும் போலீஸ் தரப்பில் வலுவான ஆதாரங்கள் இல்லை என்கிற போதுதான், அரசுத் தரப்பு வக்கீல் இந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொள்ளுவார். திரும்பத் திரும்ப குற்றம் புரிந்து, கைதாகிறவர்களுக்கு இது பொருந்தாது."

**"உங்கள் ஊர் ஜெயில்கள் எப்படி இருக்கும்?"**

"உங்கள் ஊர் ஜெயில்கள் போல அல்ல. (போன தடவை வந்திருந்தபோது, வேலூர் ஜெயிலைப் பார்த்தோம்) அநேகமாக அனைவரும் தனித்தனி செல்களில்தான் இருப்பார்கள். அவர்கள் ஜெயிலுக்குள் இருக்கிற நாட்களில் உடலுழைப்புக்கு அவசியமே இல்லை. சோம்பேறித்தனமாக, வேளாவேளைக்குச் சாப்பிட்டுவிட்டு படுத்துத் தூங்கிக் கொண்டிருப்பதுதான் பலருக்கு முக்கிய வேலை. ஜெயிலில் இருக்கிற நாட்களில், வயிறு புடைக்கச் சாப்பிட்டு, உடற்பயிற்சிகள் செய்து, உடலை திடகாத்திரமாக வைத்துக் கொள்ளுவார்கள்! அப்போதுதானே, ஜெயிலிலிருந்து வெளியில வந்தவுடன் கன ஜோராக 'தொழிலை' மறுபடி ஆரம்பிக்கலாம். இன்னொரு புள்ளி விவரம் என்ன வென்றால், புதிய குற்றவாளிகளை விட, பழைய ஆசாமிகள் திரும்பத் திரும்ப குற்றம் புரிந்து, தண்டனை பெற்று ஜெயிலுக்கு வருவதுதான் அதிகம்."



• பயிற்சிக்கு வந்தவர்கள்

சேஷ ரஜனி குமாரி என்ற இந்தியப் பெண்மணி, இல்லினாய்ஸ் பல்கலைக் கழக குற்றவியல் நீதித் துறையின் இணைப் பேராசிரியர். இவர், 'குடும்பத்தில் வன்முறை' என்ற சப்ஜெக்ட்டில் ஆராய்ச்சியாளர். "அமெரிக்காவில் கணவன் - மனைவிக்கிடையில், பெற்றோர் குழந்தைகளுக்கிடையில் வன்முறை நிகழ்வது அதிகரித்து வருகிறது. இது போன்ற குடும்பத்தில் நிகழும் வன்முறைகளில், பாதிக்கப்படுகிறவர்களில் எண்பத்து ஐந்து சதவீதம் பேர் பெண்கள்தான். பெண்களால் உடல் ரீதியிலும், மன ரீதியிலும் வன்முறைக்கு பலியாகும் ஆண்களின் நிலைமையும் பரிதாபத்துக்குரியது தான். குழந்தைகள், பெற்றோரின் வன்முறைக்கு ஆளாவது கொடுமையிலும் கொடுமை!" என்கிறார் ரஜனி குமாரி.

"கணவனுக்கு வேலை கிடைக்கவில்லை. மனைவியின் சம்பாத்தியத்தில்தான் குடும்பம் ஓடுகிறது. அவ்வப்போது, கணவனை இடித்துக் காட்டும் மனைவி. மனைவி இல்லாத நேரத்தில், வீட்டில் குழந்தையைப் பார்த்துக் கொள்ளும் 'பேபி சிட்டிங்' வேலை கணவனுக்கு. பொறுத்துக் கொள்ள முடியாது போனது கணவனின் கோபம்! ஆறு மாதக் குழந்தையின் மீது அவன் கோபம் திரும்ப, குழந்தையைப் போட்டு உலுக்கி எடுத்து விட்டான் கணவன். குழந்தையின் உடல் முழுக்க உள்காயம்; எலும்பு முறிவு. ஆஸ்பத்திரிக்கு குழந்தையைக் கொண்டு போனபோது, போலீசுக்குத் தகவல் வர, விரைந்து சென்று விசாரித்து, கணவனைக் கைது செய்தோம்!" சேஷ ரஜனியின் கூற்றுக்கு வலு சேர்க்கிறார் போலீஸ் அதிகாரி எரிக்.

**"எங்கள் ஊரில், போலீஸ்காரர்களின் தொப்பை கேலிக்குரிய ஒரு அம்சம்! அங்கும் அப்படி உண்டா?"**

"உடல் ஆரோக்கியம், ஃபிட்னஸ் இவற்றில் அதிக கவனம் செலுத்த வேண்டியது போலீஸாரின் கடமை. உடற்பயிற்சி நிலையங்களுக்கு ரெகுலராகச் சென்று பயிற்சி செய்ய வேண்டியது அங்கே கட்டாயம். அப்போது தானே திறமையாய்ச் செயல்பட முடியும். எதிர் காலம், பிரமோஷன் எல்லாமே திறமையைப் பொறுத்த விஷயங்கள் அல்லவா?" என்கிறார் எரிக்!

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**
படங்கள் : **யோகா**



• சசிகலா சகிதம் பிரசாரம்

# கூட்டம்

சிதம்பரத்தில் கீழரத வீதியும், வடக்கு ரத வீதியும் சந்திக்கும் மூலையில் ஜெயலலிதா பேசுவதாக ஏற்பாடு. மதியம் இரண்டு மணிக்குப் பேசுவார் என்று ஊரெங்கும் போஸ்டர்கள். ஒன்றரை மணி அளவில் கூட, மேடையைச் சுற்றி ஆயிரத்துக்கும் குறைவானவர்களே காணப்பட்டனர். உள்ளூர்த் தலைவர்கள் வாஜ்பாயையும் அத்வானியையும் சகட்டு மேனிக்கு சவாலுக்கு அழைத்தனர். கருணாநிதியை கொஞ்சம் மட்டமாகவே கிண்டலடித்தனர்.

'கூட்டம் மிகவும் குறைவாக இருக்கிறதே' என்று



மேடையில் நின்றவாறே சுற்றிப் பார்த்துக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார் மாவட்டச் செயலாளர் ஜனார்த்தனன். "இதோ புரட்சித் தலைவி சில மணித் துளியில் வந்து விடுவார்" என்று பேசுகிற ஒவ்வொருவரும் அறிவித்துக் கொண்டிருக்க, அடுத்த ஒரு மணி நேரத்தில் இரண்டு வீதிகளிலும் கொஞ்சம் கூட்டம் சேர்ந்தது.

நோகடிக்கிற வெய்யிலில் மரநிழலில் ஒதுங்கியிருந்தார் கிள்ளையைச் சேர்ந்த மணிமாறன். "அம்மா பேசுவதைக் கேட்டு விட்டு உடனே ஊர் திரும்ப வேண்டும். வீட்ல விசேஷம்" என்றவரிடம் "கூட்டம் சுமாராகத்தானே இருக்கு?'' என்று அப்பாவித்தனமாய் வாயைக் கிண்டினோம். வெற்றிலை பாக்குக் கறை தெரியும் பற்களைக் காட்டி கட கடவெனச் சிரித்தார் மனிதர். "இப்ப ஒண்ணும் தெரியாதுங்க... அம்மா பேசும்போது பாருங்க. அப்பத்தான் தெரியும் எங்க செல்வாக்கு!'' என்று பொடி வைத்துப் பேசினார்.

இதற்குள் மேடையில் இருந்த சஃபாரி போட்ட காவல் துறை ஆசாமி ஒருவர் மாவட்டச் செயலாளரிடம் ஏதோ காதைக் கடிக்க மேடை பரபரப்பானது. "புரட்சித் தலைவி அண்ணாமலை பல்கலைக் கழக விருந்தினர் விடுதியை விட்டுக் கிளம்பி விட்டார். ஆங்காங்கே இருக்கும் தோழர்கள் மேடைக்கு முன்புறம் வரவும்!'' என்று தொண்டர் ஒருவர் படபடப்போடு

# வோட்டாகுமா?

நேரடி ரிப்போர்ட்

மைக்கில் செய்தியைச் சொல்ல, கூட்டம் திபுதிபுவெனச் சேர்ந்துவிட்டது. டென்ஷன் ஆகி மேடைக்கு முன்புறம் விரைந்தது. அறுபதுக்கு மேற்பட்ட பெண்கள் 'புரட்சித் தலைவி வாழ்க' என்று குரல் கொடுத்தார்கள்.

சரியாக 2.55க்கு ஜெ. வந்த டெம்போ டிராவலர் மேடையை ஒட்டி வந்து நின்றது. வண்டியிலிருந்து அவரும் உதவிக்கு ஒரு சிறுவனும் மட்டுமே இறங்கினர். உடன் பிறவா சகோதரி வண்டியை விட்டு இறங்கவே இல்லை. மேடையில் ஏறிய ஜெ. எல்லோருக்கும் ஒரு வணக்கம் போட்டு நேரடியாக மைக்குக்குப் போய் விட்டார். செந்தூர வண்ணத்தில் பூப்போட்ட சேலை. நெற்றியில் செந்தூரக்கீற்றாகக் குங்குமம். தாம் பா.ஜ.க. தலைவர்களை நம்பி ஏமாற்றப்பட்டதாகவும், அ.இ.மு.க. ஆதரவு இருக்கும்

• பிரசாரவேனில்...

போதே கருணாநிதியுடன் பி.ஜே.பி. ரகசிய உறவு வைத்திருந்ததாகவும் சொன்னார் ஜெ. கார்கிலில் அரசு உஷாராக இல்லாமல் ஊடுருவலை அனுமதித்தது; விஷ்ணு பகவத் விவகாரம்; காஷ்மீர் பிரச்னை என்று எதையும் தமது ஒரு மணி நேர உரையில் விட்டு விடவில்லை.

"என் மீது போடப்பட்ட வழக்குகளை வாபஸ் வாங்கச் சொன்னோம். அதைச் செய்யாததால் தான் ஆதரவை வாபஸ் வாங்கி விட்டோம் என்று சொல்கிறார்கள். மாநில அரசு போட்ட வழக்குகளை மத்திய அரசு எப்படி வாபஸ் வாங்க முடியும்? அது எனக்குத் தெரியாதா? அவர்களது தவறுகளை உங்கள் சகோதரி தட்டிக் கேட்டதை அவர்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. நம் ஆதரவில் மஞ்சள் குளித்துக் கொண்டே தமிழக நலன்களுக்கு விரோதமாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தார்கள். பி.ஜே.பி. ஒரு தீய சக்தி. வாஜ்பாய் இங்கு வோட்டு கேட்டு வந்தால் தமிழகத்தின் துரோகியாக ஏன் செயல்பட்டீர்கள்?' என்று அவரைக் கேட்க வேண்டும். கேட்பீர்களா?'' என்று ஜெ. கேட்க, ஆயிரக்கணக்கான வாய்கள் "கேட்போம் கேட்போம்" என்று கோரஸாக குரல் கொடுத்தன.

பேச்சை டி.டி.பியில் போட்டு பிரிண்ட் செய்து புத்தகமாக வைத்திருக்கிறார்.

**ஜெ.** பிரசாரத்தின் ஹைலைட் அவர் பாடும் பாட்டுத் தான். 'ஏமாத்திப் போ(யி)ட்டீங்களே! ஐயா... வாஜ்பாய் ஏமாத்திப் போ(யி)ட்டீங்களே! நாங்க ஒண்ணும் கவிழ்க்கலே. சேரைப் பிடித்து இழுக்கலே' என்று துவங்கி, குரலில் ஏற்ற இறக்கங்களுடன் பாடுகிறார் ஜெ. கூட்டம் முழுவதும் ஆர்கெஸ்ட்ராவாக மாறி விடுகிறது! நடிப்புத் துறையில் இருந்தது நன்றாகவே கை கொடுக்கிறது. ஜெ. பேசும் போது பின்னணியில் இருக்கும் செங்கோட்டையன் மோனோ ஆக்டிங் போல கையை ஆட்டி, 'பிரமாதம்', 'சபாஷ்' என்று செய்கைகளைக் காட்டி கூட்டத்தினரைக் கை தட்டும்படியாக சிக்னல் கொடுக்கிறார்.

சிதம்பரம் தொகுதி காங்கிரஸுக்கு ஒதுக்கப்பட்டு இன்னமும் வேட்பாளர் அறிவிக்கப்படாத நிலையில், ஜனநாயக முற்போக்குக் கூட்டணி வேட்பாளரை கைச் சின்னத்தில் முத்திரையிட்டு ஆதரிக்கச் சொல்கிறார். தமது பேச்சின் எந்த இடத்திலும் சோனியா பெயரைக் குறிப்பிடாதது


• செங்கோட்டையன்


• சண்முகம்

மட்டுமல்ல, தேர்தலில் காங்கிரஸ் கூட்டணி வெற்றி பெற்றால் பிரதமர் பதவிக்கு யார் வரக்கூடும் என்பதையும் அவர் குறிப்பிடவில்லை.

வேர்க்க... விறுவிறுக்கப் பேசும் ஜெவுக்கு பின்னால் நிற்கும் பொடியன் இரண்டு நிமிஷத்துக்கு ஒருமுறை முகம் துடைத்துக் கொள்ள டிஷ்யூ பேப்பர் தருகிறான்.

பேச்சை முடித்துக் கொண்டு மேடையை விட்டு இறங்கும் போது முன்னாள் அமைச்சர் ஆனந்தன் ஒரு குழந்தையைக் கொடுத்து பெயர் வைக்கச் சொல்கிறார். 'ஜெயதேவி' என்று பெயர் வைத்துவிட்டு குழந்தைக்கு நெற்றியில் 'உம்மா' கொடுக்கிறார். கூட்டம் ஆர்ப்பரிக்கிறது.

மேடையை விட்டு ஜெ. இறங்கியதும் நாம் மேடையிலேறி மூன்று பக்கமும் பார்த்தால், எல்லாப் பக்கங்களிலும் சுமார் ஒரு கிலோ மீட்டர் தூரத்துக்குத் தலைகள்... தலைகள்... தலைகள்.

அந்தக் கூட்டத்தைப் பிளந்து கொண்டு அடுத்த பாயிண்டான கொள்ளிடக் கரைக்கு விரைகிறது ஜெ.யின் கான்வாய். உள்ளிருந்து கொண்டு இரட்டை விரலைக் காட்டிக் கொண்டே செல்லும் ஜெ.யைப் பார்த்து "அம்மா என்ன செக்கச் செவேர்னு இருக்காங்க பார்த்தியா' என்று தமது தோழியிடம் வியப்பு மேலிடச் சொல்கிறார் புவனகிரியைச் சேர்ந்த செல்வி.

"அம்மா கூட இப்ப நான்காவது முறையாக பிரசாரத்துக்கு வருகிறேன். தேர்தல் வருவதைப் பற்றி மக்களுக்கு இன்னமும் கூட சரியாகத் தெரியாத நிலையில், பல இடங்களில் கூட்டணி வேட்பாளர்கள் யார் என்று அறிவிக்காத சூழலில் பிரசாரத்தைத் துவக்கி விட்டோம். ஆனால் மக்கள் ஆயிரக் கணக்கில் பேச்சைக் கேட்கக் குழுமுவது பிரமிப்பாக இருக்கிறது. நாற்பது தொகுதிகளில் வேட்பாளர் யார் என்பதை மறந்து விடுங்கள். எல்லாத் தொகுதிகளிலும் புரட்சித் தலைவிதான் நிற்கிறார். நாற்பதும்

எங்களுக்கே!'' என்று சொன்னார் அம்மாவின் பயணத்துக்குப் பொறுப்பாக இருக்கும் செங்கோட்டையன்.

''உங்களுக்கு கோபி பாராளுமன்றத் தொகுதியில் போட்டியிட வாய்ப்புக் கொடுக்கவில்லையே என்பதில் வருத்தம் உண்டா?'' என்றதற்கு ''அம்மா சில காரியங்கள் செய்கிறார் என்றால் அதற்கு ஓர் அர்த்தம் இருக்கும். அவர் சொல்வதைச் செய்ய நாங்கள் இருக்கிறோம். அவ்வளவுதான்!'' என்று முடித்துக் கொண்டார் செங்கோட்டையன்.

பயணத்தின் போது ஜெயலலிதா தங்கும் இடங்களில் வசதியைக் கவனித்துக் கொள்வது, தலைமை நிலையத்துக்கு செய்திகள், அறிக்கைகள் அனுப்புவது என்று செங்கோட்டையன் படு பிஸி.




• ஜெ.வுக்கு எத்தனை மரியாதையான வரவேற்பு!

ஓர் இடத்தில் இரவு தங்கி விட்டு பிரசாரத்துக்கு ஜெ. புறப்படும் போதே, ஜெ. மற்றும் சசிகலாவின் பர்ஸனல் லக்கேஜ், மூன்று டெம்போ டிராவலர் வேன்களில் அன்று இரவு தங்கும் இடத்துக்கு அனுப்பி வைக்கப் படுகின்றன. அம்மாவின் உதவியாளர்கள் சிறுவர்கள், பெண்கள்தான்.

அன்று சிதம்பரத்தில் பிரசாரத்தைத் துவக்கி, மயிலாடுதுறை, காரைக்கால், நாகூர், நாகப்பட்டினம் என்று தொடர்ந்து, இரவு திருவாரூரில் தங்குவதாக ஏற்பாடு. கொள்ளிடக் கரை, ஆக்கூர், திருக்கடையூர், தரங்கம்பாடி, கோட்டுச்சேரி, காரைக்கால் ஆகிய இடங்களில் வேனை விட்டு இறங்காமலேயே பேசினார் ஜெ. மேடையில் பேசும் அதே பேச்சின் சுருக்கத்தைத் தான் தெருவோர கூட்டத்திலும் பேசுகிறார். (வேன் கண்ணாடி வழியே சசிகலாவைப் பார்க்கவும் கூட்டம் முண்டுகிறது)

ஜெ. வருவதற்கு ஒரு மணி நேரத்துக்கு மேல் இருக்கும் போதே, காரைக்கால் பாரதியார் வீதியில் இரண்டு பக்கமும் கூட்டம் திமிறிக் கொண்டு நிற்கிறது. தமிழ்நாடு-பாண்டி எல்லையான கோட்டுச்சேரியில், அறுபது எழுபது காங்கிரஸாரோடு வரவேற்பதற்காக நின்று கொண்டிருக்கிறார், பாண்டி காங்கிரஸ் தலைவரான சண்முகம்.

''காங்கிரஸ்-அ.தி.மு.க. கூட்டணி என்றாலே வெற்றிக் கூட்டணி தானே. யார் வேட்பாளர் என்றெல்லாம் தெரிய வேண்டாம். நிலையில்லாத அரசுகளைப் பார்த்து மக்கள் மிகவும் நொந்து போயிருக்கிறார்கள். காங்கிரஸால் மட்டுமே நிலையான அரசைக் கொடுக்க முடியும்!'' என்ற சண்முகத்திடம், ''இந்தத் தேர்தல் வருவதற்குக் காரணம் ஜெ.தானே. மக்கள் வெறுப்பு அவர் மீதும் இருக்குமே?'' எனக் கேட்டபோது, ''மதவாத பி.ஜே.பி. அரசுக்கு ஆதரவை வாபஸ் வாங்கியது சரியான முடிவு என்று மக்கள் பாராட்டுகிறார்கள். எனவே நீங்கள் சொல்வது போல் கிடையாது!'' என்று கூட்டணிக் குரலில் பதில் சொன்னார் சண்முகம்.

அன்றைய பிரசாரத்தின் மூன்றாவது பொதுக்கூட்டம் நாகப்பட்டினம் அவுரியார் திடலில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இரவு எட்டு மணிக்கு வர வேண்டிய ஜெ. எட்டரை மணிக்கு வந்தார். நாகை பாராளுமன்றத் தொகுதியில் வலது கம்யூனிஸ்ட் வேட்பாளர். ஜெ. வருவதற்கு முன்பு பேசிய கம்யூனிஸ்ட் தோழர்கள் பழக்க தோஷத்தில் ''எனக்கு முன்னே பேசிய திராவிட முன்னேற்றக் கழகத்தைச்சேர்ந்த....'' என்று துவங்கி, திருத்திக் கொண்டார்கள். மாற்றிக் கொள்வது சற்றுக் கடினம்தான். முப்பது

(தொடர்ச்சி 25ம் பக்கம்)

காந்திலால். சுருக்கமாக கே. லால். குஜராத் மாநிலத்தில் பிறந்தவர். இப்போது வயது எழுபத்தைந்து ப்ளஸ். இன்னமும் இளம் வயதுப் பூரிப்புடன் மேஜிக் நிகழ்ச்சிகளை நடத்தி, மக்களை பிரமிக்க வைத்துக் கொண்டிருக்கிறார். உலகின் 'அதிவேக மேஜிக் நிபுணர்' என்று சக மேஜிக்காரர்களால் குறிப்பிடப்படுபவர். இவர் தமது மகன் ஜுனியர் லாலுடன் இணைந்து நடத்தும் மேஜிக் நிகழ்ச்சிக்கு 'மாயா ஜால்' என்று பெயர். உலகின் பல நாடுகளிலுமாகச் சுமார் பதினேழு ஆயிரம் தடவைகளுக்கு மேல் இவர்களின் நிகழ்ச்சி நடைபெற்றுள்ளது.

மேஜிக் நிபுணர் கே. லால் தமது வாழ்க்கை அனுபவங்களை நம்முடன் பகிர்ந்து கொள்ளுகிறார்....

# மந்திரப் புன்னகை 1

நான் அப்போது, குஜராத் மாநிலம் அகமதாபாத் நகரில் மேஜிக் நிகழ்ச்சி நடத்திக் கொண்டிருந்தேன். அந்தச் சமயத்தில், முதலமைச்சரின் அலுவலகத்திலிருந்து ஓர் அதிகாரி என்னைப் பார்க்க வந்தார். அரசு அதிகாரி ஒருவர் என்னைப் பார்க்க வந்திருப்பதாகச் சொன்னபோது, ஏதோ, குடும்பத்துடன் அவரோ, அல்லது அவரது உயரதிகாரியோ என் நிகழ்ச்சியைக் காண விரும்பி இருக்கக் கூடும். அது சம்பந்தமாகத்தான் வந்திருப்பார் என்று நினைத்தபடியே அவரைச் சந்தித்தேன். ஆனால், அவர் சொன்ன விஷயம் என்னை ஆச்சரியத்திலாழ்த்தியது. அப்போதைய பாரதப் பிரதமர் இந்திரா காந்தி அம்மையார் என்னைச் சந்திக்க விரும்புவதாக அவர் தகவல் சொன்னார்.

குஜராத் என் பிறந்த மண். மற்ற எந்த ஊரையும் விட, அகமதாபாதிலும் மற்ற குஜராத் மாநில நகரங்களிலும் என் நிகழ்ச்சிக்கு மக்களிடம் ஏகமான வரவேற்பு இருக்கும். அது போலவே, அந்த முறையும். மிகப் பிரமாதமான வரவேற்பை என் மேஜிக் ஷோ பெற்றிருந்தது. முன் பதிவு மூலமாகவே டிக்கெட் விற்பனை முடிந்து, ஹவுஸ் ஃபுல் காட்சிகளாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. எனவே, இடையில் ஓரிரு நாட்களுக்கு நிகழ்ச்சியை ரத்து செய்து ரசிகர்களுக்கு ஏமாற்றம் கொடுத்துவிட்டு, டெல்லி சென்று, பிரதமர் இந்திராஜியைச் சந்திக்க என் மனது ஒப்பவில்லை.



தர்மசங்கடமான சூழ்நிலை. "இன்னும் நான்கு வாரங்களில் அகமதாபாத் நகரில் என் நிகழ்ச்சி முடிவடைகிறது. அதன் பின், நேரடியாக நான் டெல்லி புறப்பட்டு வந்து விடுகிறேன். பிரதமரைச் சந்திக்கிறேன்!" என்று நான் அந்த அதிகாரியிடம் சொல்லி அனுப்பி விட்டேன்.

திடீரென்று பிரதமர் இந்திராஜி என்னைச் சந்திக்க வேண்டும் என்று சொன்னதன் பின்னணி என்ன? அவர் அப்போது ஜப்பான் நாட்டுக்குப் போயிருந்தார். ஜப்பானியப் பிரதமரைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது, அவர் இந்திராஜியிடம் 'உங்கள் ஊர் மேஜிக் நிபுணர் கே. லால் எப்படி இருக்கிறார்?' என்று கேட்டிருக்கிறார். ஜப்பானியப் பிரதமர் நலம் விசாரிக்கும் அளவுக்குப் பெரிய ஆளா லால்? என்று நினைத்

திருக்கிறார் இந்திராஜி. இந்தியா திரும்பியவுடன், மேற்கு வங்க முதலமைச்சருடன் தொடர்பு கொண்டு, என்னைப் பற்றி விசாரித்திருக்கிறார்.



மே. வங்க அரசு அதிகாரிகள், கல்கத்தாவில் இருந்த என் குடும்பத்தினருடன் தொடர்பு கொள்ள, அவர்கள், நான் அகமதாபாத் நகரில் நிகழ்ச்சிகள் நடத்திக் கொண்டிருப்பதைத் தெரிவித்திருக்கிறார்கள். உடனே அந்தத் தகவல் பிரதமர் அலுவலகத்துக்குச் சொல்லப்பட்டது. அடுத்து, குஜராத் முதல்வருடைய அலுவலகத்துக்குச் செய்தி வந்திருக்கிறது. அங்கிருந்து அனுப்பப்பட்ட அதிகாரிதான், இந்திராஜி என்னை சந்தித்துப் பேச ஆர்வமாக இருக்கும் விஷயத்தை எனக்குத் தெரிவித்தார்!

அகமதாபாதில், மேஜிக் ஷோ ஒப்பந்தம் முடிந்தபின், நேரே டெல்லிக்குப் போய், பிரதமர் இந்திரா காந்தியைச் சந்தித்துவிட்டு, அதன் பின் கல்கத்தா செல்லும்படியாக என் பயணத் திட்டத்தை மாற்றிக் கொண்டேன். ஆனால், அதற்கு அவசியமே இல்லாமல் செய்து விட்டார் இந்திராஜி. ஆமாம்! அவரே அகமதாபாத் நகருக்கு வரவேண்டியிருக்க, அப்போதே என்னையும் சந்தித்துப் பேச முடிவு செய்தார்.

அகமதாபாத் நகருக்கு வந்திருந்த பிரதமரைச் சந்தித்துப் பேசுவதற்கு எனக்கு நேரம் ஒதுக்கப்பட்டது. நான் போய் அவரைச் சந்தித்தேன். அப்போதைய முதலமைச்சர் மாதவ் சிங் சோலங்கியும் பிரதமருடன் இருந்தார். என்னைப் பற்றி ஆர்வமாக விசாரித்தார். ஜப்பானிய பிரதமரே என்னைப் பற்றி அவரிடம் விசாரித்ததைப் பற்றி வியப்புடன் குறிப்பிட்டார். "உலக அளவில் நம் நாட்டுக்குப் பெருமை சேர்க்கும் விதமாய் நீங்கள் மேஜிக் துறையில் சிறப்புற்று விளங்குவதைக் கண்டு நான் பூரிப்படைகிறேன்; பெருமைப் படுகிறேன்" என்று கூறினார்.

நான் அந்த இடத்திலேயே ஒரு டிரிக் செய்து காட்ட விரும்பினேன். பிரதமர் இந்திராஜியிடம், "உங்கள் புடைவையின் ஒரு பகுதியைக் காட்டுங்கள்" என்றேன். அருகில் அமர்ந்திருந்த சோலங்கிக்கு ஒன்றும் புரியவில்லை. பிரதமரின் பாதுகாப்பு அதிகாரி என் கோரிக்கைக்கு ஆட்சேபம் தெரிவித்தார். ஏதாவது ஒன்று கிடக்க ஒன்று நடந்து விட்டால் என்ன செய்வது? தம் மீது பழி வருமே என்கிற கவலை அந்த அதிகாரிக்கு. இந்திராஜியோ, "எனக்கு லால் மீது முழு நம்பிக்கை இருக்கிறது. எனவே கவலைப்பட வேண்டாம்; அமைதியாய் அவர் செய்யும் மேஜிக்கை ரசியுங்கள்!" என்று கூறிவிட்டார். வேறு வழியில்லாமல் பாதுகாப்பு அதிகாரி அமைதியானார்.

> "இந்திராஜியின் புடைவைத் தலைப்பிலிருந்து லேசாக, தீ எழுந்தது. பிரதமரின் முகத்தில் ஆச்சரியம் கலந்த அதிர்ச்சி. சோலங்கி பயந்துவிட்டார். பாதுகாப்பு அதிகாரி பதறிப் போய், தீயை அணைக்கத் தயாரானார்."

அவரது புடைவைத் தலைப்பின் மேல் விரல்களை வைத்து, நான் மேஜிக் செய்தேன். புடைவைத் தலைப்பிலிருந்து லேசாக, தீ எழுந்தது. பிரதமரின் முகத்தில் ஆச்சரியம் கலந்த அதிர்ச்சி. சோலங்கி பயந்துவிட்டார். பாதுகாப்பு அதிகாரி பதறிப் போய், தீயை

**மேஜிக் நிபுணர் கே. லால்**

அணைக்கத் தயாரானார்.

நான், அடுத்த வினாடியே, கையாலேயே தீயை அணைத்தேன். "உங்கள் புடைவை தீப் பற்றி எரிந்ததை உங்கள் கண்ணால் பார்த்தீர்கள் அல்லவா? எங்கே, இப்போது, அந்த இடத்தில் பாருங்கள்" என்றேன் இந்திராஜியிடம்.

அவர் தீப்பற்றிய இடத்தை உற்றுப் பார்த்தார். அதற்கான சிறு அடையாளம் கூட அங்கு இல்லை. அவரது புடைவையில் எந்த வித மாற்றமும் இல்லை. வியந்து என்னை மெச்சினார் பிரதமர்.

இப்படி இந்திராஜியே வியந்து பாராட்டு மளவுக்குப் பேரும், புகழும் பெற்றிருக்கும் இந்த கே. லால், பள்ளி இறுதி வகுப்பு கூட பாஸ் பண்ணாதவன் என்பதை உங்களுக்குத் தெரிவிப்பதில் நான் வெட்கப்படவில்லை. இளம் வயது முதலே எனக்கு இந்தத் துறையில் இருந்த ஆர்வம், ஆழமான ஈடுபாடு, நேரம், காலம் பார்க்காத உழைப்பு, என் நிகழ்ச்சிகளை காசு கொடுத்து, டிக்கெட் வாங்கிக் கொண்டு வந்து உட்கார்ந்து பார்த்துவிட்டு, மனமகிழ்ச்சியுடனும், பிரமிப்பு நீங்காமலும் கலைந்து போகிற ரசிகர்களுடைய மன நிறைவு, வாழ்த்துக்கள்... இவை எல்லாவற்றுடன் கூட என்னுள்ளேயே இருந்து கொண்டு, என்னை இயக்கி, நான் செய்யும் தந்திரங்களைக் கூட நிஜமா என்று ரசிகர்களை ஒரு கணம் வியக்க வைக்கும் ஆண்டவனின் பரிபூரண ஆசிகள். இவைதான் என்னை இன்று இந்த நிலைமைக்கு உயர்த்தியிருக்கின்றன.

இந்தியப் பிரதமர் இந்திரா காந்தியிடம், ஜப்பானியப் பிரதமர் என்னைப் பற்றி விசாரித்தார் என்றால், அதற்கு நான் ஜப்பானில் அந்த அளவுக்குப் பிரபலமாக விளங்கியது தான் காரணம். நான் என் வாழ்நாளில் பல தடவை ஜப்பானுக்குச் சென்று, தொடர்ந்து பல தினங்கள் அரங்கு நிறைந்த காட்சிகளாக என் 'மாயா ஜால்' மேஜிக் நிகழ்ச்சியினை நடத்தியிருக்கிறேன். முதல் தடவையாக நான் ஜப்பான் சென்ற சூழ்நிலையை என்றைக்குமே மறக்க மாட்டேன். காரணம், இந்திய நாட்டின் கலாசாரத்தின் மீது நான் கொண்டிருக்கிற ஆழமான ஈடுபாட்டுக்கும், பணத்துக்காக, எனது கொள்கைகளைச் சிறிதளவும் விட்டுக் கொடுக்காத பிடிவாதமும்தான்.

அது ஒரு சுவையான கதை. அறுபதுகளின் ஆரம்பத்தில் அது நிகழ்ந்தது. அப்போது நான் பெங்களூரில், மேஜிக் நிகழ்ச்சிகளை நடத்திக் கொண்டிருந்தேன். என் மேஜிக் ஷோவைப் பார்ப்பதற்கு, வழக்கம் போலவே நல்ல கூட்டம். முன் பதிவிலேயே, அரங்கம் ஹவுஸ் ஃபுல்.

ஒரு நாள் ஜப்பானிலிருந்து தோமி ஹாரா என்று ஒருவர் தமது உதவியாளரான யூரோ ஹோமா என்பவருடன் பெங்களூர் வந்து, என் நிகழ்ச்சியைப் பார்த்தார். ஷோ முடிந்த பின்னர் என்னைச் சந்தித்தார். அவர் ஜப்பானில் மேஜிக் ஷோ போன்று ஏராளமான நிகழ்ச்சிகளை பல வருடங்களாக ஏற்பாடு செய்து வரும் புகழ் பெற்ற ஸ்பான்சர். ஜப்பானிய மக்கள் மேஜிக் ஷோக்களை விரும்பி ரசிப்பார்கள். எனவே, உலகின் பல்வேறு பிரபல மேஜிக் நிபுணர்களையும் ஜப்பானுக்கு வரவழைத்து வெற்றிகரமாக நிகழ்ச்சிகள் நடத்திய அனுபவசாலி அவர். முதல் தடவையாக என்னை ஜப்பானுக்கு அழைத்துச் சென்று, மேஜிக் ஷோ நடத்தும் எண்ணத்துடன்தான் அவர் என்னைச் சந்திக்க வந்திருந்தார்.

எனக்கும், முதல் தடவையாக ஜப்பானில் நிகழ்ச்சி நடத்த வாய்ப்பு வந்தது பற்றி மிகுந்த சந்தோஷம். எனக்கு அவர் தருவதாகச் சொன்ன தொகையும் இந்தியாவில், மேஜிக் ஷோ நடத்துவதற்கு நான் வாங்குவதைவிட அதிகமானது. எனவே, ஜப்பானுக்கு வர ஒப்புக் கொண்டேன். அதற்குண்டான ஒப்பந்தம் ஒன்றையும் அவர் தயாராக வைத்திருந்தார். அதையும் எனக்குப் படித்துக் காட்டி விளக்கினார். வழக்கமான கண்டிஷன்கள் தான். ஆட்சேபணைக்குரியதாக அதில் எதுவுமில்லை. எனவே, ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட ஒப்புக் கொண்டேன்.

அப்போது, அவர் மெதுவாக ஏதோ ஒன்று சொல்ல முயன்றார். அவரது தயக்கத்தைப் புரிந்து கொண்டு, "ஏன், ஏதாவது பிரச்னையா? என் நிகழ்ச்சிக்கு, உலகப் புகழ் பெற்ற மற்ற மேஜிக் நிபுணர்களின் நிகழ்ச்சிகளைப் போல கூட்டம் வருமா என்று சந்தேகமாக இருக்கிறதா? அந்த மாதிரியான சந்தேகம் எதுவும் உங்களுக்கு வேண்டாம். இந்த தடவை கிடைக்கப் போகிற வரவேற்பைப் பார்த்து பிரமித்துப் போவீர்கள்; மறுபடியும் ஒரு தடவை நீங்களாகவே, இதைவிட அதிக பணம் கொடுத்து இதைவிட இன்னும் அதிகமான நாட்களுக்கு நிகழ்ச்சிகளை நடத்தித் தரும்படி என்னுடன் காண்ட்ராக்ட் போடுவீர்கள். அந்த அளவுக்கு எனக்கு நம்பிக்கை இருக்கிறது" என்றேன்.

ஆனால் அவரது தயக்கத்துக்கு வேறு ஒரு காரணம் இருந்தது. "ஜப்பானில் மேஜிக் நிகழ்ச்சிகளுக்கு பெரும் வரவேற்பு உண்டு என்றாலும், மேஜிக் நிகழ்ச்சிகளில், பங்கு பெறும் பெண்கள் கவர்ச்சியான உடைகள் அணிந்து தோன்றுவது வழக்கம். உங்களுடைய மாயாஜால நிகழ்ச்சியில், பங்கேற்கும் பெண்கள் வண்ண மயமான உடைகள் அணிந்திருக்கிறார்கள். ஆனால் அதில் கவர்ச்சி துளியும் இல்லை. எனவே, ஜப்பானில் உங்கள் நிகழ்ச்சியில் பங்கேற்கிற உங்கள் குழுவைச் சேர்ந்த பெண்கள் கவர்ச்சியாக - ரசிகர்கள் மனதைச் சுண்டி இழுக்கும்படியாய் இருக்க வேண்டும்" என்று அவர் கூறினார்.

அவரது எழுதப்படாத கண்டிஷனை கேட்கவே எனக்கு காது கூசியது. "இதோ பாருங்கள்! உங்கள் கலாசாரம் வேறு; இந்திய கலாசாரம் வேறு. இங்கே பெண்களைத் தாய்மையின் உருவமாக, தெய்வீகமாக நாங்கள் காண்கிறோம். பெண் என்பவளை போதைப் பொருளாகப் பார்க்கிற பார்வை இங்கே இல்லை. எனவே, உங்கள் பணத்துக்காக, எங்கள் நாட்டுப் பெண்களை கவர்ச்சிப் பொருளாக்கி, மேடையிலே உலவ விட என் மனம் துளியும் இடம் தராது. மன்னிக்கவும்; உங்கள் காண்ட்ராக்டை ஏற்பதற்கில்லை; நீங்கள் போய் விடுங்கள்!" என்று சற்று கண்டிப்பான குரலில் சொல்லிவிட்டேன். வந்தவர், பெருத்த ஏமாற்றத்துடன் திரும்பிச் செல்ல வேண்டியதாகி விட்டது.

**நா**ன் பெங்களூரில் என் ஷோவை முடித்துவிட்டு, அடுத்து சென்னையில் முகாமிட்டிருந்தேன். ஒரு நாள் திடீரென்று மறுபடியும் அந்த ஜப்பானியர் என்னை வந்து சந்தித்தார். தமது முந்தைய கண்டிஷனுக்காக வருத்தம் தெரிவித்துவிட்டு, மறுபடியும் ஜப்பான் வரவேண்டும் என்று என்னை அழைத்தார். "வேறு எழுதப்படாத கண்டிஷன்கள் ஏதும் கிடையாதல்லவா?" என்று கேட்டேன். "உங்கள் குழுவைச் சேர்ந்த பெண்கள், தங்களது வழக்கமான உடையிலேயே மேடையில் தோன்றலாம். ஆனால், அவர்களுடன் கூட, இன்னும் சில ஜப்பானியப் பெண்களையும் நான் ஏற்பாடு செய்கிறேன். அவர்களும் பங்கேற்கட்டும். பங்கேற்க வாய்ப்பு இல்லாது போனால், இடையிடையே சில நிமிடங்கள் நடனமாடுவது போல வைத்துக் கொள்ளலாம். அவர்கள் எந்த மாதிரியான உடைகளையும் அணிவதற்குத் தயாரான பெண்கள் என்பதால், அந்தப் பெண்களை கவர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொள்ளுகிறோம். உங்கள் குழுப் பெண்கள் கவர்ச்சியாகத் தோற்றமளிக்க வேண்டுமென்று கட்டாயப்படுத்த நான் விரும்பவில்லை" என்றார்.

எனக்கு ஒரே கோபம். "பெண்களை கவர்ச்சிப் பொருளாகப் பயன்படுத்த மாட்டேன் என்பது என் கொள்கை. உங்கள் வீட்டுப் பெண்களை, அப்படி கவர்ச்சிப் பொருளாக்கி, மேடையில் வளைய வரும்படி செய்வீர்களா? என்னைப் பொறுத்தவரை, இந்தியப் பெண்களை எந்த அளவுக்கு மதிக்கிறேனோ, அதே அளவுககு ஜப்பானியப் பெண்களை மட்டுமில்லை, உலகின் எந்த நாட்டுப் பெண்ணானாலும் சரி, அப்படித்தான் நான் கருதுகிறேன். இனியும் மேஜிக் ஷோவில் பெண்கள், கவர்ச்சி என்று சொல்லிக் கொண்டு வந்தீர்களானால் நான் மனிதனாக இருக்க மாட்டேன்; ஜாக்கிரதை!" என்று எச்சரித்துவிட்டு, அவர் கொடுத்த காண்ட்ராக்ட் காகிதங்களைக் கிழித்துப் போட்டேன்.

"நல்ல ஒரு வாய்ப்பை வீணாக இழக்கிறீர்கள்" என்று சொன்னார் அவர். "அதைப் பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம்" என்று சொன்னேன் நான்.

போன மனிதர் சில மாதங்கள் கழித்து மீண்டும் என்னை வந்து சந்தித்தார். அப்போது அவர் என்னிடம் என்ன கேட்டார் தெரியுமா?

(தொடரும்)



"எந்த கட்சிக்குத் தாவலாம்கிறதுல அந்தத் தலைவர் குழப்பத்துல இருக்கார் போலிருக்கு..."

"எப்படி கண்டுபிடிச்சே?"

"இடுப்புல ஒரு கட்சிக் கரை வேட்டி கட்டி, தோள்ல இன்னொரு கட்சிக் கரை துண்டைப் போட்டிருக்கார்!"

– பா. ஜெயக்குமார்



• வந்திருந்த கூட்டத்தினர்...

அமரர் கல்கி அவர்களே நேரில் வந்து கலந்து கொண்ட அமரர் கல்கி நூற்றாண்டு விழா என்கிற தனிப் பெருஞ் சிறப்பைப் பெற்று விட்டது நெல்லை விழா. ஆம்; அமரர் கல்கி போன்றே வேடமிட்டுக் கொண்டு விழாவுக்கு வந்திருந்தாள் ஒரு சிறுமி!

இது மட்டுமா? இன்னும் சில சிறுவர், சிறுமியர் நரசிம்ம பல்லவன், நாகநந்தி, குந்தவைப் பிராட்டி, நந்தினி, பழுவேட்டரையர், சேந்தன் அமுதன் என்று அமரர் கல்கியின் பல்வேறு பாத்திரங்களாக மாறுவேடமணிந்து, விழா நடந்த நெல்லை சங்கீத சபாவுக்கு வந்து விட்டனர்!

வரவேற்புரையை ஆரெம்கேவி ஜவுளிக் கடை அதிபர் விஸ்வநாதன் நிகழ்த்தினார். தலைமுறை தலைமுறையாய் ஜவுளிக் கடையை நிர்வாகம் செய்யும் குடும்பத்தில் வந்த இவர்தான், குழந்தைகளைக் கல்கியின் கதாபாத்திரங்களாக உலா வரச் செய்யலாம் என யோசனை தந்தவர். அறிமுக உரையைத்



• அமரர் கல்கியின் கதாபாத்திரங்களாக...

தளவாய் டி. ராமசாமி நிகழ்த்தினார். ரசிகமணி டி.கே.சியின் மகள் வயிற்றுப் பேரனான இவர், கல்கி அவர்கள் பிறந்த சனிக்கிழமை அன்றே விழா நடப்பதை நினைவு கூர்ந்தார். மூதறிஞர் ராஜாஜியைத் தமது அரசியல் குருவாகவும், ரசிகமணி டி.கே.சியைத் தமது இலக்கிய குருவாகவும் கல்கி அவர்கள் கொண்டிருந்ததைக் குறிப்பிட்ட அவர், 'மெல்லச் சாகும் தமிழிசையை வீரநடை போட வைத்த தலைவராகவும், கல்கி அவர்களை அடையாளம் காட்டினார்.

அதற்கடுத்தாற் போல், நெல்லை மனோன்மணியம்-சுந்தரனார் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் முனைவர் அறவாணன், சுந்தா எழுதிய 'பொன்னியின் புதல்வர்' மறுபதிப்பு நூலை வெளியிட, அம்மையப்பன் அதைப் பெற்றுக் கொண்டார். கூடியிருந்த மக்களின் சிலிர்ப்பு, கரவொலியாய் எழுந்தது. அந்தக் கரவொலியின் குமிழ்கள் அமிழ்ந்த பின், பேருரை ஆற்றினார் அறவாணன். பாதி மிருகமும் பாதி மனிதனும் கொண்டவர்களைத் தாம்

• அமரர் கல்கியாக...



பெரியாரின் மேல் கல்கி கொண்டிருந்த பற்றும் அண்ணாவின் நாடகத்தால் ஈர்க்கப்பட்டு அவரை 'தமிழ்நாட்டின் பெர்னாட்ஷா' என்று அழைத்ததும் குறிப்பிடத்தக்கவை. காந்தியடிகள் சுடப்பட்டபோது எவ்வளவு தூரத்திற்குக் கல்கி பாதிக்கப்பட்டார் என்பதைச் சொன்ன அறவாணன், 1954ல் 'மறவேன் மறவேன்' என்கிற ஆனந்த பைரவியில் அமைந்த பாடலைத் தமது மகள் ஆனந்தி பாடக் கேட்டுக் கொண்டே உயிர் நீத்தார் என்பதையும் மிக உருக்கமாகச் சொன்னார். கூட்டத்தினரும் ஒரு துல்லியமான நிசப்தத்தில் உருகிப் போனார்கள்.

அடுத்துப் பேசிய ரசிகமணியின் பேரன் தீப. நடராஜனும் நினைவுகளின் வலைகளில் சிக்கி, கூட்டத்தினரை கல்கி வாழ்ந்த காலத்திற்கே அழைத்துப் போனார். 'கல்கி' பத்திரிகையின் ஜனனநேரத்தை நினைவு கூர்ந்த அவர், கல்கி போல சரித்திர நாவல்களை தெளிவான பின்னணியோடு வேறு யாராவது எழுதியிருக்கிறார்களா என்பது சந்தேகமே என்றார். வாள் முனைகளில் காலத்தால் மறைந்து போகும் சாம்ராஜ்ஜியங்களைத்தான் மன்னர்கள் உருவாக்கினார்கள். ஆனால் தமது பேனா முனையால் என்றும் அழியாத இலக்கிய சாம்ராஜ்யத்தை கல்கி படைத்திருக்கிறார் என்றார். அதேபோல்,

அறிந்திருப்பினும், கொஞ்சம் கூட மிருகத்தனமே அல்லாத மனிதரை கல்கியிடத்திலேயே தாம் காண்பதாகச் சொன்னார்.

அது மட்டுமல்ல, திருமதி ஆனந்தியின் திருமணம் நிச்சயிக்கப்பட்டதும் அழைப்பிதழ் கொடுக்க பெரியாரைச் சென்று கல்கி சந்தித்த அந்த சந்தர்ப்பத்தையும் அறவாணன் நினைவு கூர்ந்தார். சிந்தாதிரிப்பேட்டையில் அப்போது பெரியார் இருந்தார். பெரிய தாம்பூலத் தட்டில், சகல மரியாதைகளோடும் மஞ்சள் பூசப்பட்ட அழைப்பிதழைப் பெரியாரிடம் கொடுக்கிறார் கல்கி. அதை வாங்கிக் கொண்டு பெரியார் கேட்கிறார், "நான் எப்போது வர வேண்டும்?" என்று. ஏனெனில், ஆத்திக முறையில் காலையில் திருமணம் நடைபெறுகிறது. கல்கி அவர்கள், "மதியம் பன்னிரெண்டு மணி போல் வாருங்களேன்" என்கிறார்.

# அமரர் கல்கியும் கலந்து கொண்ட விழா!

அமரர் கல்கிக்கு காந்தியடிகள் மேலிருந்த பக்தியை சிலாகித்துச் சொன்னார் அறவாணன். கல்கி அவர்களின் ஆசிரியரான ஐயாசாமி எந்த அளவுக்குக் காந்தி பக்தரோ அதே அளவுக்குத் தீண்டாமையைக் கடைப்பிடிப்பவர். கல்கி அவர்களின் மகத்தான சிறுகதைகளில் ஒன்றான 'விஷமந்திரம்' எவ்வாறு ஐயாசாமி அவர்களை வைத்து உருவானது என்பதையும் அறவாணன் விளக்கினார்.

அதே சமயம், அவரது அபிமானங்களெல்லாமே கட்சியையும் சுயவிருப்பு வெறுப்புகளையும் மீறி அமைந்தவை.

மணிக்கொடி எழுத்தாளர்களுக்கும் கல்கி அவர்களுக்கும் கருத்து வேறுபாடு இருந்த போதும், வ.ராவுக்கும் புதுமைப்பித்தன் குடும்பத்தினருக்கும் நிதி திரட்டுவதில் கல்கிக்கிருந்த பெரும்பங்கினைச் சுட்டிக் காட்டினார். எந்தச் சூழலிலும் சமரசம் செய்து கொள்ளாமல் பத்திரிகையை நடத்திக் காட்டினார் அமரர் கல்கி. அவர் நான்கு சுவருக்குள் உட்கார்ந்து எழுதியவரல்ல என்பது முக்கியமான விஷயமென

அடிக்கோடிட்டு, ரசிகமணியைக் குற்றாலத்தில் பார்க்க வரும் சமயங்களில் எல்லாம், அவர் குற்றால அருவிக் கரையோரப் பாறைகளின் மேல் உட்கார்ந்து சிந்தனை செய்வது இன்னமும் தமது கண்முன் நிற்கிறது என்றார். சங்கரன் கோவிலில் கல்கிக்கு எடுத்த பாராட்டு விழாவிற்கு வந்த கூட்டம், ஆடித் தபசுவுக்கு வந்த கூட்டத்தை விட பன்மடங்கானது என்று தி.ப. நடராஜன் உணர்வு பூர்வமாக உரையாற்றினார்.

மாவட்ட கலெக்டர் தனவேல் அவர்கள் அமரர் கல்கியின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்து தலைமையுரையாற்றத் தொடங்கினார்.

கல்கி அவர்கள், பல பரிமாணங்களைக் கொண்டிருந்த போதிலும், சரித்திரக் கதையுலகின் பிதாமகர் என்கிற அவரது பரிமாணமே தனித் தன்மையுடன் விளங்குவதாகக் குறிப்பிட்டார். "நம் நாட்டு வரலாறோ, வீரச் சின்னங்களோ, நம்மை எப்போதுமே ஈர்த்ததில்லை. பிற நாட்டு வரலாறுகளே நமக்குப் பிரியமானவையாக இருக்கின்றன. தமிழருக்கு, தமிழ் வரலாறு அந்நியமாக இருக்கின்ற நிலை இதனால் தான். பொன்னியின் செல்வனில், குதிரை மீது வரும் வீரனையும் ஏரிக்கரையையும் வர்ணித்து இரண்டு, மூன்று பக்கங்கள் எழுதியிருப்பார் அமரர் கல்கி. அதை வாசித்து விட்டு, வீராணம் ஏரியைப் போய்ப் பார்த்து வந்தவன் நான். அப்படி, நம்மிடையே இருக்கக் கூடிய விஷயங்களை, அறிந்து கொள்கிற தூண்டுதல் கல்கி அவர்களின் எழுத்துக்கே உண்டான தனிச்சிறப்பு. எனினும், இன்றைய தமிழரின் நிலை குறித்து அச்சம் எழுகிறது. நாம், முன்னோர்களின் பெருமைகளைக் குறைத்து மதிப்பிடுகிறோம். கலைகளை வளர்க்கவும், பேணவும் நாம் என்ன செய்கிறோம்? கும்பகோணம் அருகே உள்ள தாராசுரம் ஊரில் இருக்கிற கோவிலில் உள்ள அன்ன பூர்ணியின் புன்னகையை விடவா மோனோலிசாவின் புன்னகை உயர்வானது? அல்லவே. எனினும் அதையும் வெளி நாட்டினர், சொன்ன பிறகு தான், நாம் உணர்ந்து கொள்கிறோம். கலைஞர்களை, எழுத்தாளர்களை நாம் வாழும் காலத்தே கௌரவிக்க வேண்டும். நம் வரலாறை, நம் பின்புலத்தை நம் சந்ததி அறிந்து கொள்ள வேண்டும். பாடப் புத்தகங்கள், அத்தகைய தேடலுக்கு வழி வகுக்காது. கல்கியின் வரலாற்றுக் கதைகளே பாரம்பரியம் நிறைந்த அத்தகைய வரலாறை, கற்பனைத் தேன் கலந்து நமது சந்ததியினருக்குக் கொடுக்கும்!'' என்று முடித்தார் கலெக்டர்.

அடுத்துப் பேசிய ஆசிரியர் சிவ. ராமச்சந்திரன், கல்கிக்கும் திருநெல்வேலிக்குமான தொடர்பை விரிவாகச் சொன்னார். கல்கியின் ஹாஸ்யத்தைப் புகழ்ந்த அவர், பரலி சு. நெல்லையப்பர், பெ. நா. அப்புசாமி, டி.கே.சி., நீதிபதி மகராஜன் ஆகியோரோடு கல்கிக்கு இருந்த தொடர்பை நினைவு படுத்தினார். பாரதியாரைத் தம் குருவாகக் கொண்டிருந்த கல்கி, தமது பத்தாவது வயது முதல் பாரதியின் பாடல்களைப் பாடாத நாளே இல்லை என்றதையும் ராமச்சந்திரன் சொன்னார். நெல்லை மாவட்டத்துக் கள்வன் செம்புலிங்கத்தின் கதை "கள்வனின் காதலியாக'' உலா வந்த கதையையும் நினைவு கூர்ந்தார்.

சிறப்புரை ஆற்றிய எழுத்தாளர் சுஜாதா, தாம் கலந்து கொள்கிற முதல் கல்கி நூற்றாண்டு விழாவாக, திருநெல்வேலி விழா அமைந்து விட்டதென்றார். "நான் முதலில் படித்த நாவல், 'அலை யோசை'தான். அதுவும் எப்படி? எங்கள் வீட்டில் கதைகள் வாசிக்க அனுமதிக்க மாட்டார்கள் என்பதால், டி.கே.சியின் கம்பரும் ராமாயணமும் வாசிக்க வேண்டும் என்று சொல்லி, 'கல்கி' பத்திரிகை வாங்கி, 'அலையோசை' படிப்பேன். கலெக்டர் சொன்னதுபோல வந்தியத் தேவன் குதிரை மேல் வருவதையும், வீராணம் ஏரி பற்றியும் என்னால் பக்கம் பக்கமாக எழுத முடியுமா என்று தெரியவில்லை. ஒருவேளை வந்தியதேவன், குதிரை, வீராணம், ஏரி என்று முடித்துக் கொள்வேனாயிருக்கும்!

"ஆனால், எந்தக் கதைக்கருவுக்காகவும் ஆராய்ச்சி செய்யவும், திடீர் திருப்பங்கள் ஏற்படும் வகையில் எழுதுவதிலும் எனக்கு

---

ஆஸ்திரேலியாவின் புகழ்பெற்ற புகைப்பட நிபுணர் ஹெல்மட் நியூட்டன். இவர் ஒரு புத்தகத்தை வெளியிட்டுள்ளார். இதுதான் உலகிலேயே அதிக விலை கொடுத்து வாங்கப்படும் புத்தகம். ஒரு புத்தகத்தின் விலை 1510யூரோ(1,585டாலர்கள்). இதில் அவருடைய புகழ்பெற்ற 400 புகைப் படங்கள் இடம் பெற்றுள்ளன.

தகவல்: கோவீ. இராஜேந்திரன்

கல்கி ஒரு முன்னோடி. என்னை அதிகமாக பாதித்தது, 'பார்த்திபன் கனவு'தான். ஸயன்ஸ் பிக்ஷன் எழுதியிருக்கிறார் கல்கி என்று நான் சொன்னால் உங்களுக்கு ஆச்சர்யமாயிருக்கிறதா? 'மோகினித் தீவு', 'சோலைமலை இளவரசி' ஆகியவை ஸயன்ஸ் பிக்ஷன் அன்றி வேறெது?' என்று கலெக்டரைப் போலவே சுஜாதாவும் வியந்து சொன்னார்.

அடுத்துப் பேசிய மாலன், கல்கிக்கு 'தமிழிசை' மீதிருந்த பற்றை அடிக்கோடிட்டார். பாரதிக்கு மணி மண்டபமொன்றை, எட்டயபுரத்தில் அமைக்க அவர் எடுத்துக் கொண்ட முக்கியப் பங்கினைப் புகழ்ந்தார். கல்கி, ஒரு வகையில் 'காந்திமதி' என்றவர், 'காந்தி'யின் மேல் பக்தியும், கூர்ந்த 'மதி'யும் கொண்டவர் என்றார். அவரது தமிழிசை மீதான ஆர்வத்தை சுட்டிக் காட்டிய மாலன், ராபர்ட் ப்ரௌனிங் என்கிற கவிஞரை, எலிஸபெத் ப்ரௌனிங் காதலித்தார். ராபர்ட்டின் கவிதைகள் எளிதில் புரிந்து கொள்ள முடியாதவை. எனவே, அதன் அர்த்தத்தை, தனக்கு விளக்கிச் சொல்லுமாறு எலிஸபெத் சொன்னார். ராபர்ட் ஒருமுறையல்ல, இரண்டு முறை வாசித்துக் காட்டினார். பிறகு, 'என் கவிதைகள் இருவருக்கு மட்டுமே புரியுமென நினைத்திருந்தேன். அதில் ஒன்று நான். மற்றொருவர், கடவுள். ஆனால், இப்போது ஒரே ஒருவருக்குத்தான் புரியும். அது கடவுள்!" என்று கூறி விட்டாராம். அர்த்தம் புரியாமல் சமஸ்கிருதத்தில் பாடுகிற பாடல்கள் கூட ராபர்டின் கவிதைகள் போலத்தான்.

"சுதந்தர லட்சியங்களைத் தம்முள் சுமந்த மனிதர் கல்கி. இல்லையெனில் சுதந்தரப் போராட்டத்தில் சிறைக்குச் செல்வதற்காக மதிப்புமிக்க ஆ.வி.ஆசிரியர் பதவியை ராஜினாமா செய்ய இயலுமா? தம் தாயிடம், குடும்பத்திற்கு ஒரு மகனை சுதந்திரப் போராட்டத்திற்கு அனுமதித்தல் சிறந்த தேசிய சேவை என்றதை மறக்க முடியுமா?" என்று மாலன் கேட்கவும் கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்கு ஏனோ கார்கில் வீரர்கள் நினைவிற்கு வந்தனர்.

விழா முடியும் வரை யாரும் அசையக் கூட இல்லை. நிறைந்து கிடந்த சங்கீத சபாவில், நாலரை மணி நேரம் நிகழ்ச்சி நடந்தது. இரவு ஒன்பதரைக்கு கல்கி நிறுவனப் பத்திரிகைகளின் பதிப்பாளர் கி. ராஜேந்திரன், திரண்டிருந்த கூட்டம் கண்டு நெகிழ்ந்து போய்ப் பேசினார். கல்கியின் கதாபாத்திரங்களாக வேடம் பூண்டு வந்த குழந்தைகளைக் குறிப்பிட்டுச் சொன்னார். நிகழ்ச்சிக்கான விழாக் குழுத் தலைவர்களில் ஒருவரான திரு. வி.எஸ்.வி. மணிக்கும் கல்கி பத்திரிகைக்குமான தொடர்பை வாசகர்களோடு பகிர்ந்து கொண்டார்.

நன்றியுரையை கணபதிராமன் கூறினார். பரம்பரையாக முதல் 'கல்கி' இதழ் முதல் 'கல்கி'யின் நெல்லை ஏஜெண்டாக இருக்கும் ஜி. சுப்ரமணியம், நினைவுப் பரிசுகளை வழங்கினார். அவர் சார்பாக, வந்திருந்தவர்களுக்கு நினைவுப் பரிசுகளை வழங்கிய தி.க.சி, "கல்கியின் வாழ்க்கையை, சுந்தாவின் நூலின் பின்னணியில் திரைப்படமாக எடுப்பது மிகவும் அவசியம்" என்பதை வலியுறுத்தினார். விழா நிகழ்ச்சிகளைப் பேராசிரியர் ஜானகிராமன் இனிமையாகத் தொகுத்தளித்தார்.




• பொன்னியின் புதல்வர் நூல் வெளியிடப்படுகிறது...

அதற்குள் விழா முடிந்து விட்டதே என்று விழாவுக்கு வந்திருந்த கூட்டத்தினர் கலைய ஆரம்பிக்க, மழை மேகங்களும் சூழ்ந்து கொண்டன. அச்சூழலிலும் தென்மேற்கு வானில், மிகப் பிரகாசமாய் ஒளிவிட்டுக் கொண்டிருந்தது ஒரு நட்சத்திரம்.

— தமயந்தி

படங்கள்: அண்டனிராஜ்

மாணவிகளின் குவிஸ்!

# "அடிப்படையில் மாற மாட்டோம்!"

• ரமணிகுமாரி

"தேசப்பற்று என்பதை அடிப்படையாகக் கொண்டு கேள்விகள் தயாரிக்கிறோமே!" என்றனர் ரமணி குமாரி, ப்ரியா, புஷ்கலா, லலிதா

• ப்ரியா

• லலிதா

• புஷ்கலா



ஆகியோர். இந்த நால்வர் அணி மீனாட்சி கல்லூரியைச் சேர்ந்தது.

''உங்களில் யார்யாருக்கு வெளிநாடு சென்று படிக்கவும் வேலையில் சேரவும் ஆசை?'' என்று நாம் குறும்பாகக் கேட்டதும் மூவர் அப்பாவியாகக் கைகளைத் தூக்கினர். உடனே தாங்கள் தேர்ந்தெடுத்த தலைப்பும் வருங்காலத் திட்டமும் நேரெதிரானவையோ என்ற சங்கடத்துடன் சிரித்தனர். பிறகு ''சிலகாலம் வெளிநாட்டிலே சம்பாதிச்ச பிறகு மறுபடி இந்தியாவுக்கே திரும்பி வந்துடுவோம்'' என்றார்கள். ''அதெல்லாம் நடக்கிற கதை இல்லே. அங்கேயேதான் தங்கிடுவீங்க!'' என்றார் லலிதா.

''எந்த நாட்டுக்குப் போனாலும் மனசு இங்கேதான் இருக்கும். எவ்வளவு அற்புதமான கலாசாரம் இங்கே!'' என்று புஷ்கலா நெகிழ, ''அதுவும் எவ்வளவு விதமான கலாசாரங்கள்! இந்த மாதிரி 'வேற்றுமையில் ஒற்றுமை'க்கு உலகத்தில் வேறு ஒரு நாட்டை உதாரணம் காட்ட முடியுமா?'' என்று ப்ரியா பிரமித்தார்.

சமீபத்திய கார்கில் சம்பவங்கள் நாட்டுப் பற்றை மேலும் கூர்தீட்டியதாக அனைவரும் ஒப்புக் கொள்ள, ''போர் மட்டுமில்லே விளையாட்டு கூடத்தான் தேசப்பற்றை அதிகமாக்குது. பயஸும் பூபதியும் விம்பிள்டனில் முதலிடத்தைப் பிடிச்சப்போ இந்தியர்ங்கிற முறையிலே நமக்கெல்லாம் எவ்வளவு பெருமையா இருந்தது!'' என்று சிலிர்த்தார் ரமணிகுமாரி.

'' 'பெப்ஸி-கோக்'கோ, 'பாப்-ராப்'போ' இந்திய இயல்பை மாற்றிவிடாது; அடிப்படையில் அப்படியேதான் இருக்கிறோம்!'' என்று கோரஸாகச் சொன்னவர்கள் கேள்விகளையும் கொடுத்திருக்கிறார்கள்.

எல்லா கேள்விகளுக்கும் சரியான விடைகளை டிக் செய்து அனுப்பும் வாசகர் ஒருவருக்கு ரூ. 200 பரிசு! பலர் சரியான பதில் எழுதியிருந்தால் குலுக்கல் முறைதான்!

அருகிலுள்ள ஒரிஜினல் கூப்பனில்தான் டிக் செய்து அனுப்ப வேண்டும். ஜெராக்ஸ் பிரதிகள் செல்லா. கடைசி தேதி: **23.8.99**

ஆசிரியர் தீர்ப்பே இறுதி!

தொகுப்பு: **ஜி.எஸ்.எஸ்**; படங்கள்: **ஸ்ரீஹரி**

## குவிஸ் கூப்பன் – 2

1. நம் 'தேசிய கீதத்தை' எழுதியவர் யார்?

☐ பக்கிம்சந்திர சாட்டர்ஜி
☐ ரவீந்திரநாத் தாகூர் ☐ கமலாதாஸ்

2. சுபாஷ் சந்திரபோஸ் பிறந்த மாநிலம் எது?

☐ பஞ்சாப் ☐ ஒரிஸா ☐ மேற்குவங்காளம்

3. ராஜ்குரு, சுகதேவ் ஆகியவர்களுடன் தூக்கிலிடப்பட்ட சுதந்தர போராட்ட வீரர் யார்?

☐ நாதுராம் கோட்ஸே ☐ வாஞ்சிநாதன்
☐ பகத்சிங்

4. காந்தியின் சுயசரிதை எந்த மொழியில் முதலில் எழுதப்பட்டது?

☐ ஆங்கிலம் ☐ குஜராத்தி ☐ இந்தி

5. காங்கிரஸ் கட்சியின் தலைவர் பதவியை அதிக காலம் வகித்தவர் யார்?

☐ மகாத்மா காந்தி ☐ ஜவாஹர்லால் நேரு
☐ இந்திராகாந்தி

6. 'வந்தே மாதரம்' என்கிற சுதந்தரப் போராட்ட கோஷம் ஒரு நாவலிலிருந்துதான் எடுத்துக் கையாளப்பட்டது. அது எந்த மொழி நாவல்?

☐ மராத்தி ☐ வங்காளம் ☐ இந்தி

7. 'ஆடு ராட்டே' பாடலை எழுதியவர் யார்?

☐ பாரதியார் ☐ பாரதிதாசன்
☐ நாமக்கல் கவிஞர்

8. 'கப்பலோட்டிய தமிழன்' திரைப்படத்தில் சுப்ரமண்ய சிவாவாக நடித்தவர் யார்?

☐ டி.கே.சண்முகம் ☐ சுப்பையா
☐ ஜெமினி கணேசன்

பெயர்: ..............................................

முகவரி: ..............................................

..............................................

..............................................



1999 ஆகஸ்ட் 15
பிரமாதி ஆடி 30
மலர் : 58
இதழ் : 3

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பயங்கர ரயில் விபத்து; பிரதமரின் வீழ்ச்சி!

நூற்றுக்கணக்கான உயிர்களை பலிகொண்ட விபத்தைத் தொடர்ந்து ரயில்வே அமைச்சர் ராஜினாமா சமர்ப்பிக்க, அதை ஏற்க மறுக்கிறார் பிரதமர்! 'அவசரப்பட்டு காரியம் செய்ய வேண்டாம்' என்று டெலிபோனில் அறிவுரை வேறு கூறுகிறார்!

வரலாறு காணாத விபத்து மட்டுமல்ல... வரலாறு காணாத இந்த வீழ்ச்சியும் சேர்ந்து நம்மை உலுக்குகிறது!

மனித உயிர்களுடைய மதிப்பின் வீழ்ச்சி;
பொது வாழ்க்கைப் பண்புகளின் வீழ்ச்சி;
தார்மிகக் கொள்கைகளின் வீழ்ச்சி;
அரசியல் நேர்மையின் வீழ்ச்சி!

உலுக்கியெடுக்கும் துயரச் சம்பவம் நிகழ்ந்திருக்கிறது. நாடே அதிர்ச்சியிலிருக்கிறது. 'ராஜினாமாவெல்லாம் செய்யாதே' என்று பிரதமர் சொல்ல வேண்டுமானால், எத்தகைய ஈரமற்ற வறட்டு அரசியல் கண்ணோட்டம் அவரை இயக்குகிறது!

சில தினங்கள் யோசனைக்குப் பின், அமைச்சரின் ராஜினாமா ஏற்கப்பட்டிருப்பதும் சற்றே ஆறுதல். ஆனால் பிரதமரது ஆரம்ப நிலை ஏற்படுத்திய அதிர்ச்சி பலமானது.

நிகழ்ந்த விபத்துக்குக் காரணம் இயந்திரக் கோளாறா? சதியா? மனிதத் தவறா? என்று ஆராய்ச்சி நடந்து வருகிறது. ரயில்வே பாதுகாப்பு கமிஷனர் விசாரணை நடத்தும்படி கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார். சில ஊழியர்கள் தாற்காலிகப் பணி நீக்கம் செய்யப்பட்டிருக்கிறார்கள்.




அரசியலிலும் பொது வாழ்விலும் ஊடுருவியிருக்கும் மதிப்பீடுகள் வறட்சியும் பொறுப்புணர்வு வறட்சியும்தான் விபத்துக்கு மூலகாரணம். இதைச் சொல்ல எந்த விசாரணைக் கமிஷனும் தேவையில்லை.

அரசுத் துறையிலும் பொதுத் துறையிலும் நிகழும் விபத்துகள், நஷ்டங்கள், பின்னடைவுகள் போன்றவை குறித்து அவ்வப்போது ஆய்வறிக்கைகளும் கமிஷன் அறிக்கைகளும் வெளியிடுவதோடு சரி. நிகழ்கின்ற தவறுகளுக்கு உடனுக்குடன் பொறுப்பாக்கப்பட்டு ஊழியர்கள், அதிகாரிகள், அமைச்சர் பொறுப்பில் உள்ளவர்கள் தண்டிக்கப்படுவதோ கண்டிக்கப்படுவதோ இல்லை. கமிஷன் அறிக்கைகள் பேரில் எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படுவதில்லை.

இந்த மெத்தனமே மேலும் மேலும் விபத்துகள் நடக்கக் காரணமாயிருக்கிறது.

விபத்துச் செய்தி வெளியான அதே தினத்தில், சென்னையிலிருந்து புறப்பட்ட முத்துநகர் எக்ஸ்பிரஸின் 'கார்ட்' மது அருந்தி விட்டுப் பணிக்கு வந்ததாகச் செய்தி வெளியாகியிருக்கிறது! இத்தகைய மன்னிக்க முடியாத தவறுகள் ஏன் நிகழ்கின்றன?

தாங்கள் ஏற்றுள்ள பொறுப்பின் விஸ்தீரணமும் முக்கியத்துவமும் இப்படிப்பட்ட ஊழியர்களுக்குத் தெரியவில்லை என்பது ஒரு காரணம்தான். அதனிலும் முக்கியமான காரணம், அரசுத் தலைமையே அவர்களுக்குத் தவறான முன்னுதாரணமாக விளங்குவதுதான்.

விபத்துக்கு மேல் விபத்து என்று வரலாறு படைத்து வரும் இந்திய ரயில்வே, அதற்காக கின்னஸ்ஸில் இடம்பெறும் கேவலத்தைத் தவிர்க்க, அடியோடு முடி வரை சீரமைக்கப்பட வேண்டும். அந்தச் சீரமைப்பில் தகுதிக்கு முதலிடம் தரப்பட வேண்டும். இப்போது விதிமுறைகளைப் படித்துப் புரிந்து கொள்ள முடியாதவர்கள் கூட மனித உயிர்களுக்குப் பொறுப்பேற்க வேண்டிய முக்கியமான நிலைகளில் அமர்த்தப்படுகிறார்கள் என்பது பெரும் சோகம்.

## முந்திக் கொண்ட ஜெயலலிதா!

பல கட்சிக் கூட்டணிக்கே உரிய தலைவலிகள் தமிழகத்தில் தேசிய ஜனநாயக கூட்டணியை வாட்டியெடுக்கின்றன.

பா.ம.க. - ராஜீவ் காங்கிரஸுக்கு கருணாநிதி ஒன்பது தொகுதிகள் ஒதுக்க, அதில் எட்டுத்




தொகுதிகள் கூனையாக பா.ம.கவுக்குப் போய்விட்டன. சேலத்தில் மட்டும் ராஜீவ் காங்கிரஸ் சார்பாக வாழப்பாடி போட்டியிடுவார் என்று எதிர்பார்த்ததற்கு மாறாக, ராஜீவ் காங்கிரஸுக்கும் ஒன்றுக்கு மேற்பட்ட சீட் வேண்டுமென்கிற சலசலப்பு!

பி.ஜே.பிக்கு ஆறு, ம.தி.மு.க.வுக்கு ஐந்து என பதினோரு தொகுதிகள் ஒதுக்கப்பட்டபோது ம.தி.மு.க. தலைவர் ஆட்சேபித்திருக்கிறார். தமது கட்சிக்கு உரிய இடம் தரப்படவில்லை என்று முறையிட்டிருக்கிறார். இரு கட்சித் தலைவர்களும் இரண்டு முறை பேச்சுவார்த்தை நடத்தியும் ஒரு முடிவுக்கு வர இயலாமல் இழுக்கடித்து, ஒருவழியாக ம.தி.மு.க. ஐந்து இடங்களுக்கு ஒப்புக் கொண்டுள்ளது.

இவ்விதழ் வெளியாவதற்குள் எல்லாம் சுமுகமாக முடிந்து போயிருக்கக்கூடும். ஆனால், தி.மு.க. கூட்டணியை முந்திக் கொண்டு அ.தி.மு.க. கூட்டணி தேர்தல் பிரசாரத்தில் வெகு தூரம் முன்னேறியிருக்கும்!

ஜெயலலிதா காலங்கடத்தாமல் சுற்றுப் பயணத்தை ஆரம்பித்து விட்டார். அவருடைய முதல் பிரசார கூட்டத்துக்கு (காஞ்சிபுரம்) மக்கள் பெருமளவில் திரண்டு வந்திருக்கின்றனர்.

ஓராண்டு ஆட்சியிலிருந்து ஒன்றும் சாதிக்காத பி.ஜே.பியை எதிர்த்துப் பிரசாரம் செய்ய ஜெயலலிதாவிடம் பலமான ஆயுதங்கள் இருக்கின்றன.

மாறாக, தி.மு.க.வோ அதன் கூட்டணிக் கட்சிகளோ பி.ஜே.பியின் சாதனைகளைப் பட்டியலிட்டு வாக்குக் கேட்க முடியாது. ஆட்சி கலைக்கப்பட்டதால் எழுந்த அனுதாப அலை அடங்கி விட்டது. கார்கில் வெற்றியின் ஆதாயத்தை செல்போன் கொள்கை தடுமாற்றமும் ரயில் விபத்தும் அடித்துக் கொண்டு போய் விட்டன.

பிரசாரத்துக்கான யுக்திகளையும் வியூகங்களையும் வகுக்க இயலாமல் தொகுதிப் பங்கீட்டிலேயே கால விரயம் செய்வது மிகவும் அபாயகரமானது. ஜெயலலிதாவின் கரங்களை வலுப்படுத்தவே இந்தத் தாமதம் உதவும்.

எதிர்பார்த்த அளவு தொகுதிகள் கிடைக்காது போனாலும் பொருட்படுத்தாமல், ஒத்த மனத்துடன் கிடைத்த தொகுதிகளில் ஜெயிக்கும் வழியைப் பார்ப்பதே தேசிய ஜனநாயக கூட்டணிக் கட்சிகளுக்கு நல்லது. இல்லாது போனால் அ.தி.மு.க. கூட்டணியிலிருந்து விலகி வந்ததற்கே அர்த்தமில்லாது போய்விடும். ○

# பரபரப்பூட்டும் பட்டேலின் சாணக்கியம்!


• பட்டேல்


• கௌடா

ஜனதா தளம் உடைந்ததில் ரொம்பவும் ஆடிப் போயிருப்பவர் கர்நாடக பி.ஜே.பி. தலைவர் எடியூரப்பாதான். இதென்ன விசித்திரம் என்று தோன்றுகிறதா? அதுதான் கர்நாடக அரசியல்! இந்த விசித்திரத்தைத் தெரிந்து கொள்ள பின்னணியைத் தெரிந்து கொள்வது அவசியம்.

கர்நாடகத்தில் ஜனதா தளம் ஆட்சிக்கு வந்தபோது, தேவே கௌடா முதல்வரானார். அவர் ஐக்கிய முன்னணி பிரதமரானபோது, கர்நாடகத்தில் தமது ஆதரவாளர் ஒருவரையே முதல்வராக்க விரும்பினார். ஆனாலும் அது நடக்கவில்லை. ராமகிருஷ்ண ஹெக்டேவின் சீடரான ஜெயதேவப்பா ஹாலப்பா பட்டேலை (இதுதான் ஜே.எச். பட்டேலின் முழுப் பெயர்) முதல்வராக ஒப்புக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் கௌடாவுக்கு!

இருந்தாலும் பட்டேலுக்கு அவ்வப்போது தொந்தரவு கொடுப்பதற்கென்றே தமது சிஷ்யரான சித்தராமய்யாவை துணை முதல்வராக்கினார். இவரது தொல்லைகளால் பட்டேல் தாக்குப்பிடிக்க முடியாமல் பதவியை விட்டு ஓடிவிடுவார் என்பது கௌடாவின் கணக்கு.

ஆனால், சித்தராமய்யா, கௌடாவின் கணக்குப்படி நடக்காமல் பட்டேலைச் சரிக்கட்டிக் கொண்டு போக ஆரம்பித்தார். இருந்தும் முயற்சியைக் கைவிடவில்லை கௌடா. தாம் பிரதமராக இருப்பதால், எம்.எல்.ஏக்களைத் தம் பக்கம் இழுத்து, பட்டேலின் மேல் நம்பிக்கையிழக்கச் செய்து, அதன் பிறகு தமது மகன் குமாரசாமியை முதல்வராக்க முயன்றார். அதுவும் பட்டேலிடம் பலிக்கவில்லை.

இதற்கிடையில் கௌடாவின் பிரதமர் பதவி போகவே, பெங்களூருக்கே குடிபெயர்ந்து வந்து பட்டேலுக்கு எதிராகச் செயல்பட ஆரம்பித்தார். இப்படிச் செயல்பட்டால், தொல்லை தாங்க முடியாத பட்டேல், தனியாகப் பிரிந்து சென்று கர்நாடக ஜனதா தளம் என்கிற பெயரில் ஏதாவது புதுக்கட்சி ஆரம்பித்துக் கொண்டு போய் விடுவார் என்பது கௌடாவின் கணக்கு!

இதற்கும் அசரவில்லை பட்டேல். தமது ஆதரவாளர்களுடன் பி.ஜே.பியுடன் கூட்டு வைத்துக் கொள்வதென்று தீர்மானித்து விட்டார். நாடாளுமன்றத் தேர்தலோடு, மாநில சட்டமன்றத் தேர்தல் நடக்கும்படியும் செய்து விட்டார்! அதாவது ஹெக்டேவின் லோக் சக்தி கட்சியுடனும் பெர்னாண்டஸின் சமதா கட்சியுடனும் கூட்டுச் சேருகிறபோது, பட்டேலின் பலம் கர்நாடகத்தில் அதிகம் என்கிற நிலை!

ஹெக்டே துணையில்லாமல் பி.ஜே.பியால் கர்நாடகத்தில் செல்வாக்குப் பெற முடியாது என்கிற நிலை என்பதால், தமது தேசிய ஜனநாயகக் கூட்டணியில் குரு-சிஷ்யர்களான ஹெக்டேவையும் பட்டேலையும் சேர்த்துக் கொள்வதில்தான் பி.ஜே.பி மேலிடம் ஆர்வம் காட்டுகிறது. இதே போன்ற கூட்டணி சட்டமன்றத் தேர்தலிலும் தொடருமானால், பட்டேலின் பலம் தான் அதிகரிக்கும். அதனால்தான் வரும் சட்டமன்றத் தேர்தலில் தாம் முதல்வராகி விடலாம் என்று கனவு கண்டு கொண்டிருந்த மாநில பி.ஜே.பி. தலைவர் எடியூரப்பா கலங்கிப் போயிருக்கிறார்.

இதன் காரணமாகவே, தேசிய ஜனநாயகக் கூட்டணியில் பட்டேலின் கூட்டைத் தவிர்க்க முடியாவிட்டாலும் எப்பாடு பட்டாவது சட்டமன்றத் தேர்தலில் அவரது கூட்டைத் தவிர்த்து விட வேண்டும் என்பதில் குறியாய் இருக்கிறார் எடியூரப்பா.

— அமுதவன்

(7ம் பக்கத் தொடர்ச்சி...)

வருட தோழமையாயிற்றே!

ஜெ. வரும்போது அவுரியார் திடல் ஹவுஸ் ஃபுல்! கூட்டத்தில் நின்று கொண்டிருந்த நாகூரைச் சேர்ந்த இஸ்லாமிய இளைஞர் கமாலுதின், முதல் முறையாக ஜெ. பேசுவதைக் கேட்க நின்று கொண்டிருக்கிறார்.

''எங்க குடும்பம் தொடர்ந்து உதய சூரியனுக்கு வோட்டுப் போடற குடும்பங்க. இந்த எலெக்ஷன் தான் கொஞ்சம் வித்தியாசமாகத் தெரியுது. நாங்க எங்களை மாத்திக்கணுமான்னு சொல்லத் தெரியலீங்க. ஒரே குழப்பமா இருக்குதுங்க!'' என்கிறார்.

"ஒட்டு மொத்த சமுதாயத்தையே தீவிர வாதிகள் என்று சொல்லி பி.ஜேபிக்கு பயந்து கொண்டு பழி வாங்கியது தி.மு.க. அரசு. 90,000 முஸ்லிம் இளைஞர்களைக் கைது செய்தது. முஸ்லிம் இளம் பெண்களின் முகத்திரையை விலக்கிப் பார்த்துக் கொடுமை செய்தது போலீஸ்!'' என்று ஜெ. ஆவேசத்துடன் பேசுகிறார். ஜெ.வா–கருணாநிதியா என்று எல்லைக் கோட்டில் நின்று கொண்டிருக்கும் கமாலுதின் போன்ற இஸ்லாமிய இளைஞர்களை அ.தி.மு.க.வுக்கு ஆதரவாக மாற்றி விடுகிற பேச்சுதான் அது என்பதில் சந்தேகமில்லை.

வாஜ்பாயைக் கண்டித்துப் பாட்டுப் பாடுவது, கூட்டத்தினரிடம் கேள்வி கேட்டுப் பதில் பெறுவது என்று பாமர, படிக்காத மக்கள் மனத்தில் தாம் ஒரு அப்பாவி; ஒரு குற்றமும் செய்யாதவர் என்பது போன்ற மாயையை மிகவும் நன்றாகவே விதைக்கிறார் ஜெ!

எதிர்க் கட்சிக் கூட்டணிகள் தொகுதிப் பங்கீடுகளையே முடிக்காத நிலையில், தமிழகத்தின் பாதிக்கும் மேற்பட்ட பாராளுமன்றத் தொகுதிகளில் அதிரடிப் பிரசாரம் செய்து விட்டார் ஜெ.

''பிரசாரத்துக்குப் போகாமல் சென்னையில் இருந்தால் தனிக் கோர்ட்டுகளில் ஆஜராக வேண்டியிருக்கும் என்றுதான் சென்னையை விட்டு புறப்பட்டு விட்டார் அவர்'' என்று தி.மு.கவினர் கிண்டலடித்தாலும், கருத்துக் கணிப்புகளைப் பொய்யாக்கும் சராசரி தமிழக வாக்காளர்களை, "ரொம்பவும்... முரட்டுத் துணிச்சல்.. அசத்தறாங்க'' என்று பிரமிக்க வைத்து விட்டார் ஜெ!

— ப்ரியன்

அட்டை மற்றும் வண்ணப் படங்கள்: **வெங்கடேஷ்**

எறும்பைப் போன்ற சுறுசுறுப்பை உடையவர்கள் மிகச் சிலர்தாம். அப்படிப் பட்ட மிகச் சிலரில் ஒருவர் தமிழறிஞர் அ.ச. ஞானசம் பந்தன்!

எண்பத்து மூன்று வயதாகும் இவர், தமது பதினோராவது வயது முதலே மேடைப் பேச்சின் மூலமாகவும் முப்பதுக்கும் மேற்பட்ட நூல்களின் மூலமாகவும் மக்களிடையே தமிழுணர்வை வளர்த்து வருகிறார் என்பது நாடறிந்த விஷயம்.

எத்தனை பெரிய மனிதர்களாக இருந்தாலும் சோதனைகள் சிலவற்றை சந்தித்துத்தானே ஆக வேண்டியிருக்கிறது. அ.ச. ஞானசம்பந்தனின் வாழ்க்கையிலும் அத்தகைய ஒரு சோதனை ஏற்பட்டது. திட்சண்யமான பார்வையுடன் தமிழை ஆராய்ந்து கொண்டிருந்த அவரது கண்கள் 93-ம் ஆண்டு பழுதடைந்தன. எழுதவோ படிக்கவோ முடியாமல் போனது. எதிரில் நிற்பவர்கூட ஒரு நிழல் போலத்தான் தெரிவார். கண் பார்வையைச் சரி செய்வதற்காக மல்ல; அமெரிக்காவுக்கும் சென்று சிகிச்சை செய்தேன். ஆனால் எந்தப் பயனும் இல்லை. சரி! நாம் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று இறைவன் விரும்புகிறான் போலும்! அதன்படியே இருக்கட்டும் என்று விட்டு விட்டேன். சாதாரணமாக இரவில் நெடு நேரம் படிப்பது என் வழக்கம். பார்வை போய்ப் படிக்க முடியாமல் போனதால் பல நாட்கள் சரியான தூக்கம் இல்லாமல் இருந்தேன். பிறகு அந் நிலையை மாற்றி, சரியான நேரத்தில் ஓய்வு எடுக்க இறைவன் அளித்த வழி தான் கண் பார்வை இழப்பு போலும் என்று ஆறுதல் கொண்டேன்!'' என்கிறார் அ.ச.ஞா.

புத்தகம் படிக்கும் பழக்கத்தை விட நேர்ந்தாலும் எழுதுவதை விடவில்லை அவர். தமது மகன் மீராவின் உதவியுடன் ''ராமன் - பன்முக நோக்கில்'' எனும் புத்தகத்தை எழுதினார். இந் நிலையில் இலங்கையைச் சேர்ந்த மார்க்கண்டேடா என்பவர் இவரிடம் உதவியாளராகச் சேரவே, புத்தகங்கள் எழுதும் ஆசை மேலும் பெருகியது. 'சேக்கிழார் தந்த செல்வம்' 'அருளாளர்கள்' ஆகிய புத்தகங்களை எழுதினார்.

இத்தனை புத்தகங்களை எழுதினாலும்

# பார்வை இழந்தாலும் பணிகள் தொடர்கின்றன!

அவருக்கு திருப்தி ஏற்படவில்லை. பல மேடைகளில் பலவிதமாகத் தாம் ஆராய்ந்து பேசிய திருவாசகம் குறித்து எழுத வேண்டும் என்று விரும்பினார். அதன்படி 'திருவாசகம் - சில சிந்தனைகள்' எனும் நூலின் முதல் பாகத்தைக் கடந்த வாரம் வெளியிட்டுள்ளார். திருவாசகம் குறித்து மேலும் மூன்று பாகங்களை வெளியிடவும் திட்டமிட்டுள்ளார்.

ஆயிரக்கணக்கில் செலவு செய்தும் குணம் இல்லாமல் போகவே, குடும்பத்தார் கலங்கினர். இருப்பினும் அ.ச.ஞா. கலங்கவில்லை. கண் இல்லாவிட்டால் என்ன? வாய் இருக்கிறதல்லவா! 'நான் சொல்லுகிறேன். நீங்கள் எழுதுங்கள்!' என்று குடும்பத்தாரிடம் கூறித் தமது தமிழ்ப் பணியைத் தொடர்ந்தார்.

''பார்வை போனதும் முதலில் மிகவும் கலங்கினேன். பார்வை திரும்ப வர வேண்டும் என்பதற்காக உள்ளூரில் மட்டு

''1950-ம் ஆண்டில் நடந்த ஒரு கூட்டத்தில் நான் திருவாசகம் பற்றிப் பேசினேன். அந்தப் பேச்சை கேட்ட திரு.வி.க, திருவாசகத்துக்கு நான் உரை எழுத வேண்

குருநாதரான திருவண்ணாமலை சேஷாத்திரி ஸ்வாமிகளின் அருளால் எல்லாம் நல்லபடியாக நடந்து கொண்டிருக்கின்றன!'' என்கிறார் அ.ச.ஞா.

கண்களை இழந்த பிறகும், அதை எதிர்த்துப் போராடி புத்தகம் எழுதும் காலத்தை மறுபிறவி என்று ஏற்க மறுக்கும் இவர், தமது இலக்கிய வாழ்வுக்குப் புத்துணர்ச்சி அளித்தது 51- ஆண்டில் ஆனந்தவிகடனில் வெளியான கட்டுரைகள்தான் என்கிறார். இந்த கட்டுரைத் தொடரை எழுதுவதற்காக இவரைத் தொடர்பு கொண்ட எஸ்.எஸ். வாசன், 'தமிழ் நாட்டுப் பெண்கள் சாதாரணமாக வீட்டு வேலை செய்யும் நேரத்தில் கிடைக்கும் இடைவெளியில்தான் புத்தகங்களைப் படிப்பார்கள். அவர்களுக்குப் புரியும் வகையில் எளிமையாக எழுத வேண்டும்' என்று கூறினாராம். அதை ஏற்றுக் கொண்ட அ.ச.ஞா. அதுவரை கடின நடையில் எழுதிக் கொண்டிருந்ததைக் கை விட்டு, எளிய நடையில் எழுதத் துவங்கினாராம்.



டும் என்று கேட்டுக் கொண்டார். ஆனால் பல்வேறு வேலைகள் இருந்ததால் என்னால் அதை நிறைவேற்ற முடியவில்லை. இந்நிலையில்தான் கடந்த வருடம் மார்க்கண்டோ எனும் இளைஞர் என்னை வந்து சந்தித்தார். என் பேச்சுகளால் கவரப்பட்டிருந்த அவர், கட்டுரைகளை எழுத எனக்கு உதவி செய்ய விரும்புவதாகக் கூறினார். உடனே திருவாசகம் குறித்து நூல்களை எழுதினால் என்ன என்று தோன்றியது. என்

தினமும் பத்து மணி நேரம் தியானம், எழுத்து என்று வாழ்க்கையை நடத்திக் கொண்டிருக்கும் அ.ச.ஞா, தமிழ் இலக்கியத்தின் தற்போதைய நிலையை நினைத்துத்தான் அதிகம் கவலைப்படுகிறார்.

''வளர்ச்சி என்பது நேராக இருக்க வேண்டும். ஒரு மனிதன் நேராக வளர்ந்தால்தான் அதற்கு வளர்ச்சி என்று பெயர். குறுக்காக வளர்ந்தால் அதை வளர்ச்சி என்று சொல்ல முடியாது. அது போல இப்போது தமிழின் வளர்ச்சி நேராக இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. இந்நிலை மாற வேண்டும். புதுமை என்ற பெயரில் தமிழில் பன்மொழிக் கலப்புகள் நிகழ்வதைத் தடுக்க வேண்டும்!'' என்கிறார் அ.ச.ஞா.

— பி.எம். சுதிர்

படம்: வெங்கடேஷ்

## அ.ச. ஞானசம்பந்தன்



"அரசியலை சாக்கடை என்கிறார்கள். அதைச் சுத்தம் செய்ய வேண்டுமானால், சுத்தம் செய்ய நினைப்பவர் அதில் இறங்கி ஆகவேண்டும் என்பது என் கருத்து. எனவேதான் நான் அரசியலில் இருக்கிறேன். முதலில் சமாஜ்வாதி கட்சியில்தான் இருந்தேன். கடந்த சுமார் ஒன்றரை வருடங்களாக காங்கிரசில் இருக்கிறேன். இருக்கும் அரசியல் கட்சிகளில் காங்கிரஸ் தான், நாட்டை ஒன்றுபடுத்தி, நல்லாட்சி தரமுடியும் என்பது என் கருத்து."



**துஷார் காந்தி. வயது 39. மகாத்மா காந்தியின் கொள்ளுப் பேரன். இரண்டாவது மகனான மணிலாலின் பேரன். அண்மையில், சென்னை வந்திருந்தார். அவரைச் சந்தித்துப் பேசினோம்:**

**"நேரு குடும்பம் போல, காந்திஜியின் குடும்பம் இந்திய அரசியலில் அதிகமாக ஈடுபடாததற்கு என்ன காரணம்?"**

"காந்திஜியின் மகன்கள், அரசியல் வேண்டாம் என்று முடிவெடுத்தார்கள். இதனால், அவர்களுடைய வாரிசுகளில் ஒரு சிலர் தவிர பிறருக்கு அரசியலில் ஆர்வம் இல்லாமல் போனது. வி.பி. சிங் காலத்தில் ராஜ்மோகன் காந்தி அரசியலுக்கு வந்தார். நான் காங்கிரசில் இருக்கிறேன். திருமதி சுமித்ரா குல்கர்னி, பி.ஜே.பியில் சேர்ந்திருக்கிறார். பெரும்பாலும், தனிப்பட்ட முறையில் அரசியலில் சேர ஆர்வம் இல்லாமைதான் இதற்குக் காரணம்."

**"நீங்கள் காங்கிரஸ் கட்சியில் சேர என்ன காரணம்?"**

**"இந்திய சுதந்திரத்துக்குப் பின் காங்கிரஸ் கட்சியைக் கலைத்து விட வேண்டும் என்றார் காந்திஜி. அது நடந்திருந்தால், இன்றைய இந்திய அரசியல் முற்றிலும் மாறுபட்ட ஒன்றாக இருந்திருக்கும் என்று நினைக்கிறீர்களா?"**

"பல்வேறு தரப்பட்ட மக்களையும் இந்திய சுதந்தரம் என்ற கயிறு கொண்டு, காங்கிரஸ் கட்சி ஒன்றாய்ப் பிணைத்தது. சுதந்தரம் அடைந்தபின், அதைப் போல மக்களை இணைப்பதற்கு பலமான கயிறு எதுவும் கிடையாது. எனவே, காங்கிரஸ் கட்சியால், முன்னைப் போல, இயங்க

# காந்திஜியின் கொள்கைகள்? கடைப்பிடிக்கப்படுகின்றன?

முடியாது என்பது பாபுஜியின் கருத்து. சுதந்தரம் அடைந்த பிறகு, சமூகப் பணியில் ஈடுபட விரும்புகிறவர்கள், தம்முடன் வரலாம் என்று அழைப்பு விடுத்தார் பாபுஜி. அதே சமயம், சுதந்தர நாட்டில், ஜனநாயகக் கடமையும் முக்கியம் என்று அவர் கருதியதால், அரசியலில் ஈடுபட விரும்புகிறவர்கள், தனியாக, புதிய கட்சியை ஆரம்பித்துக் கொள்ளட்டும்; காங்கிரசைக் கலைத்து விடலாம்" என்று கருத்துத் தெரிவித்தார். காங்கிரஸ் கட்சி கலைக்கப்பட்டிருந்தாலும் கூட, இன்றைக்கிருக்கும் சூழ்நிலையில், பெரிய மாற்றங்கள் ஏற்பட்டிருக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. இன்றுள்ள அனைத்து அரசியல் கட்சிகளுமே, காங்கிரஸ் கட்சியிலிருந்து பிரிந்து போய்த் தோன்றியவைதானே!"

**"மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு இவைதான் காந்திஜியின் இரண்டு முக்கிய கொள்கைகள். சுதந்தரமடைந்து ஐம்பது வருடங்களாகியும், இரண்டையும் நம்மால் சாதிக்க முடியவில்லையே! இதற்குக் காரணம் என்ன?"**

"ஜாதியும் மதுவும் இந்திய சமுதாயத்தில் ஆழமாக வேரூன்றிவிட்ட பிரச்னைகள் என்பதால்தான் இவற்றை ஒழிப்பது சாத்தியமில்லாமல் போய்விட்டது என்று நான் நினைக்கிறேன். பாபுஜியும் இதை உணர்ந்திருந்தார். அதனால்தான் சுதந்தரத்துக்குப் பிறகு, என்ன செய்யப் போகிறீர்கள் என்று அவரிடம் கேட்டபோது, 'ஜாதி ஒழிப்பு என்ற வேள்வியை ஆரம்பிக்கப் போகிறேன்' என்றார். அதற்கான பணியிலும் இறங்கினார். ஆனால், அவருக்குப் பின், ஜாதி ஒழிப்பு என்பதை சீரியஸாக எடுத்துக் கொள்ள யாருமே முன்வரவில்லை. காரணம், தங்கள் அரசியலுக்கு அதுதான் அஸ்திவாரம் என்று அவர்கள் நினைத்தது தான். மதுவிலக்கைப் பொறுத்தவரை, மது என்பது தொன்றுதொட்டு புழக்கத்திலிருக்கிற ஒன்று. அதன் தீமையை எடுத்துச் சொல்லி, மக்களை மீட்பது அத்தனை சுலபமில்லை. சட்டபூர்வமாக, மதுவிலக்கை அமல்படுத்துவதை விட, சுயக்கட்டுப்பாட்டின் மூலமே அது சாத்தியமாகும் என்பது பாபுஜியின் கருத்து. இன்று அரசாங்கத்தின் வருவாய்க்கு வழிசெய்யும் ஒன்றாகவே, அது பார்க்கப்படுகிறது."

**"நசுருதீன் ஷா நடிக்கும் மகாத்மா Vs காந்தி நாடகம், கோட்ஸேவின் செயலை நியாயப்படுத்தும் நாடகம் இவைபற்றி உங்கள் கருத்து என்ன?"**

"நசுருதீன் ஷாவின் நாடகத்தில் அவதூறு எதுவுமில்லை. பாபுஜியின் வாழ்க்கையில் நடந்த உண்மைச் சம்பவங்களின் அடிப்படையில் எழுதப்பட்டது அது. நாட்டுக்கு உழைக்கும் ஒருவரால், வீட்டுக்கு உழைப்பது இயலாது. தமது குடும்பத்தின் மீது தனிப்பட்ட அக்கறை காட்டியிருந்தால், பாபுஜியால், தேசப் பணியை முழுவீச்சில் செய்திருக்க முடியாது. நாடா? வீடா? என்ற கேள்விக்கு அவர் தேர்ந்தெடுத்த விடை நாடு. அந்த நாடகம் நன்றாக இருந்தது. அதில் ஆட்சேபணைக்குரியது ஏதுமில்லை. கோட்ஸே நாடகத்தை நான் பார்க்கவில்லை. பாபுஜியின் மரணம் தொடங்கியே, பல்வேறு சமயங்களிலும், அவரைச் சுட்டது சரியான தண்டனைதான் என்கிற மாதிரி அவதூறுப் பிரசார முயற்சிகளும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. ஆனால், இதுபோன்ற அவதூறுப் பிரசாரச் செயல்களுக்கு மக்கள் அங்கீகாரம் கிடைப்பதில்லை."

**"காந்திஜியைப் பற்றி உங்கள் தாத்தா**

# ரயில் டிக்கெட் வாங்காதவர்களை நாய்க்குத் தெரியுமா?

அண்மையில், மும்பை மாநகரில் டிக்கெட் இல்லாமல் பயணம் செய்கிற ரயில் பயணிகளைப் பிடிக்க போலீஸ் நாய்கள் பயன்படுத்தப்பட்டன. இது பொது மக்கள் மத்தியில் சில பிரச்னைகளை எழுப்பியதால் ஏற்பட்ட ஆட்சேபத்தை அடுத்து கைவிடப்பட்டது என்றும் செய்தி!

'ஒரு ரயில் பயணி டிக்கெட் வாங்கியிருக்கிறாரா? இல்லையா? என்று போலீஸ் நாயால் கண்டு பிடிக்க முடியுமா?' என்ற கேள்வியுடன், சென்னை மாநகர காவல் துறையின் நாய்கள் பிரிவுக்குச் சென்றோம்.

''நாய்களுக்கு அசாத்தியமான மோப்ப சக்தி உண்டு. ஆனால் அதைக் கொண்டு, ஒருவர் ரயில் டிக்கெட் வாங்கியிருக்கிறாரா இல்லையா என்று கண்டு பிடிப்பது முடியாது'' என்று சொன்ன இன்ஸ்பெக்டர் ரமணி, ''போலீஸ் நாய் சகிதம் டிக்கெட் பரிசோதகர்கள் நிற்கிறபோது டிக்கெட் இல்லாத பயணி, பயந்து நழுவுவது சகஜம்தானே! அப்படி ஒருவரை, நாய் மூலம் துரத்திப் பிடிக்க முடியும். இப்படிச் செய்வதன் மூலமாக, சில வேண்டாத பிரச்னைகளும் வரக்கூடும். திடீரென்று ஒரு வாட்டசாட்டமான நாய் துரத்தினால், சம்பந்தப்பட்டவர்கள் மட்டுமின்றி, வேறு பலரும் பயந்து ஓட ஆரம்பிப்பார்கள். குழந்தைகளும், பெண்களும் பாதித்து ஓலமிட ஆரம்பிக்கலாம். இதனால் எதிர்பாராத பல விபத்துக்களும் நிகழ்வது சாத்தியம்.

''இப்படி, போலீஸ் நாயைப் பயன்படுத்துவது பொது மக்களுக்கு நியூசென்ஸ்தான். இப்படிச் செய்வது சட்டப்படி சரியா என்று எனக்குத் தெரியவில்லை'' என்கிறார்.

— கௌதம்ராம்

உங்களுக்கு ஏராளமாகச் சொல்லியிருக்கக்கூடும். உங்கள் நெஞ்சை நெகிழ வைத்த சம்பவம் ஒன்றைச் சொல்லுங்களேன்?''

''நான் பிறப்பதற்கு முன்பே என் தாத்தா இறந்து விட்டார். என் அப்பா, சிறுவனாக, பாபுஜியின் சேவாகிராமத்தில் சில வருடங்கள் கழித்தவர். என் பாட்டியும், அப்பாவும் பாபுஜி பற்றி நிறைய சொல்லியிருக்கிறார்கள். அவற்றுள் ஒன்றை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். சேவாகிராமத்தில், என் அப்பா சிறுவனாக இருந்தபோது, ஒரு பாக்ஸ் கேமரா வைத்திருந்தார். பாபுஜியை அந்தக் கேமராவில் ஒரு போட்டோ' எடுக்க விரும்பினார் அவர். ஆனால், ஹரிஜன் நிதிக்கு ஐந்து ரூபாய் நன்கொடை கொடுத்தால்தான் புகைப்படம் எடுக்க முடியும் என்பது பாபுஜி கடைப் பிடித்த விதிமுறை. 'நான் உங்கள் பேரன் தானே! பணம் கொடுக்காமல் போட்டோ எடுத்துக் கொள்கிறேனே' என்று இவர் கேட்க, 'விதிமுறை என்பது எல்லாருக்கும் பொதுவானது. ஐந்து ரூபாய் கொடுத்து விட்டு, போட்டோ எடுத்துக் கொள்' என்று கண்டிப்பாய்க் கூறி விட்டார். என் அப்பா, இதை ஒரு பெரிய சவாலாக எடுத்துக் கொண்டு, ஒருநாள் பாபுஜி, நேருஜி, பட்டேல் மூவரும் பேசிக் கொண்டிருந்தபோது, ஒளிந்திருந்து ஒரு போட்டோ எடுத்து விட்டார். ஆனால், பாபுஜி அதைக் கவனித்து விட்டார். ஐந்து ரூபாய் கொடுத்து விட வேண்டும், அல்லது கேமராவைத் தம்மிடம் ஒப்படைக்க வேண்டும் என்று பாபுஜி உத்தரவிட்டு விட்டார். சிறுவனிடம் ஐந்து ரூபாய் ஏது? கேமரா பறிமுதல் செய்யப்பட்டது! ஊரிலிருந்து என் தாத்தா வந்தவுடன், மகன் சார்பில் ஐந்து ரூபாய் தர, கேமரா திருப்பித் தரப்பட்டது. 'போங்கள் தாத்தா! உங்களுக்கு என் மீது ஆசை கிடையாது!' என்று என் அப்பா குறைபட்டுக் கொள்ள, 'விதி என்பது அனைவருக்கும் பொதுவானது. பேரனுக்காக சலுகை காட்ட வேண்டுமெனில், விதியை நீக்கிவிட வேண்டுமேயொழிய விதியை வளைக்கக் கூடாது. தாத்தா – பேரன் அன்புக்கும், இதற்கும் சம்பந்தமில்லை!' என்று கூறி விட்டாராம்!''

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படங்கள் : **யோகா**




# அமரர் கல்கி நூற்றாண்டு விழா சிறப்பு நிகழ்ச்சி

## சுதந்தர தினம்

## 15.8.99

தமிழ் இலக்கியத்துக்கும் நமது பாரம்பரியக் கலைகளின் மறு மலர்ச்சிக்கும் அருந்தொண்டாற்றிய அமரர் கல்கி, சுதந்தரப் போராட்ட வீரராகவும் விளங்கி மும்முறை சிறை சென்றார். அவர் பணிகளை சுதந்தர தினத்தன்று நினைவு கூர்வோம்.

கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை ஆண்டுதோறும் சிறந்த இளம் இசைக் கலைஞர்களை ஊக்குவிக்கும் வகையில் விருதும் நினைவுப் பரிசும் வழங்கி வருகிறது. இவ்வாண்டு கௌரவிக்கப்பட விருப்பவர்கள் :

**சஞ்சய் சுப்பிரமணியன்**

**ஆர். ஜெயந்தி (வீணை)**

**ஆர்.கே. ஸ்ரீராம் குமார் (வயலின்)**

*நிகழ்ச்சி தலைமை :* **ஆர். சேஷசாயி**
(நிர்வாக இயக்குனர் - அசோக் லேலண்ட்)

*வாழ்த்துரை :* **சங்கீத கலாநிதி டி.என். கிருஷ்ணன்**

இடம் : மயிலை, பாரதிய வித்யாபவன் அரங்கம், சென்னை - 4

நேரம் : மாலை 4.15 மணி

விழாவைத் தொடர்ந்து இசைக் கச்சேரிகள் நடைபெறும்

| | |
|---|---|
| 5.30 மணி : | ஆர். ஜெயந்தி (வீணை)<br>மன்னார்குடி ஈச்வரன் (மிருதங்கம்)<br>கார்த்திக் (கடம்) |
| 7.00 மணி : | சஞ்சய் சுப்பிரமணியன் (பாட்டு)<br>ஆர்.கே. ஸ்ரீராம்குமார் (வயலின்)<br>அருண் பிரகாஷ் (மிருதங்கம்) |

*9.00 மணி :* **தேசிய கீதம்**

**வாசகர்கள், இசை ரசிகர்கள், கல்கி அன்பர்கள் நிகழ்ச்சிக்கு அன்புடன் வருக!**

**– கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை**

# நாளைய வளமான எதிர்காலத்திற்கு
# இன்றே நம்பிக்கையூட்டுவது–TDFC

**திட்டம் - 1**

**தவணை முறையில் வட்டி அளிக்கும் திட்டம்**

**குறைந்தபட்ச வைப்புத் தொகை - ரூ. 10,000/-**

| வைப்புத் தொகைக்கான காலம் | மாதந்தோறும் அளிக்கப்படும் வட்டி விகிதம் | மூன்று மாதத்திற்கு ஒரு முறை அளிக்கப்படும் வட்டி விகிதம் |
|---|---|---|
| | வருடத்திற்கு | |
| 12 மாதம் மற்றும் 1 நாள் | - | 12.12 % |
| 25 மாதங்கள் | - | 12.63 % |
| 36 மாதங்கள் | 13% | 13.14% |
| 48 மாதங்கள் | | |
| 60 மாதங்கள் | | |

வருட வட்டி மாதந்தோறும் கூட்டு வட்டி முறையில் கணக்கிடப்படுகிறது.
12 மாதம் 1 நாளுக்கு 12%. 25 மாதத்திற்கு 12.50%. 36 மாதம் அதற்கு மேல் 13%.

* Rating from CRISIL FA(+) indicates adequate safety.

**திட்டம் - 2**

**முதலீடு பெருகிடும் திட்டம்**

**குறைந்தபட்ச வைப்புத் தொகை - ரூ. 5,000/-**

| வைப்புத் தொகைக்கான காலம் | ரூ. 5000/-க்கான முதிர்வுத் தொகை | வட்டிவிகிதம் | ரூ. 1000/-க்கான முதிர்வுத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதம் மற்றும் 1 நாள் | ரூ. 5635/- | 12.70% | ரூ. 1127/- |
| 25 மாதங்கள் | ரூ. 6480/- | 14.21% | ரூ. 1296/- |
| 36 மாதங்கள் | ரூ. 7370/- | 15.80% | ரூ. 1474/- |
| 48 மாதங்கள் | ரூ. 8390/- | 16.95% | ரூ. 1678/- |
| 60 மாதங்கள் | ரூ. 9545/- | 18.18% | ரூ. 1909/- |

வருட வட்டி மாதந்தோறும் கூட்டு வட்டி முறையில் கணக்கிடப் படுகிறது.
12 மாதம் 1 நாளுக்கு 12%. 25 மாதத்திற்கு 12.50%. 36 மாதம் அதற்கு மேல் 13%.

வைப்புத்தொகையின் மீது கமிஷன் இல்லை

மேலும் விபரங்களுக்கு



**தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.**

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 99, கிரீம்ஸ் சாலை, எம்.என். அலுவலக வளாகம், சென்னை-6.

**தொலைபேசி : 8292059, 8292917, 8293351, தந்தி :TAFCON. P.B.No.719**

**கிளைகள் :**

- ★ டிடிசி பேருந்து நிலையம், காந்திபுரம், கோயம்புத்தூர்-641 044. தொலைபேசி : 497102
- ★ டிடிசி பேருந்து நிலைய வளாகம், திருச்சி-620 001. தொலைபேசி:464188
- ★ ராணி மங்கம்மாள் சத்திரம், மதுரை-625 001. தொலைபேசி:741686
- ★ முனிசிபல் அலுவலக வளாகம், காமராஜர் சாலை, ஈரோடு-638 001. தொலைபேசி : 258204

● உள்ளூர் காசோலைகள் மற்றும் வரைவோலைகள் மட்டுமே பெற்றுக்கொள்ளப்படும்.

● **காசோலைகளும், வரைவோலைகளும், சனி மற்றும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் சென்னை அலுவலகத்தில் ஏற்கப்படும்**

**உங்களது முதலீடு ''டிடிஎப்சி'' யில் பாதுகாப்பானது - பத்திரமானது**

இந்த விளம்பரம் கம்பெனியால் 20.9.98 தினசரிகளில் வெளியிடப்பட்ட சட்ட பூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

DIPR/1016/DIS/98/ELEGANT

1999 தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம் மற்றும் சமூக ஒற்றுமை ஆண்டு



ராமிய ஆட்டக்காரர் ரஹ்மானும், பரதக் கலைஞர் விந்தியாவும் காதலிக்கிறார்கள். உயிர்த்தியாகம் செய்ய மணிவண்ணன். பிறகென்ன? மணிவண்ணன் சிதையைக் காதலர்கள் கைகோத்து வலம் வர, 'சங்கமம்'.

படத்தின் நிஜ ஹீரோ மணிவண்ணன்தான். தனி மெஜாரிட்டியில் பிரதமர் சீட் கிடைத்த மாதிரி, படம் முழுக்க ஆண்டு, அனுபவித்திருக்கிறார்.

கொஞ்சம் இடைவெளிக்குப்பின் திரையில் தோன்றியிருக்கும் ரஹ்மான் அலட்டாமல் நடித்து அசத்துகிறார்.

வெகு இயல்பாக நடித்து வெளுத்து வாங்கியிருக்கிறார் விந்தியா (அறிமுகம்!)

வடிவேலு, சார்லி, தியாகு, வெண்ணிற ஆடை மூர்த்தி என நடிகர்களின் பட்டியல் நீண்டு கொண்டே போனாலும், திரையில் நகைச்சுவைக்குப் பஞ்சமோ பஞ்சம்.

சரவணனின் கண்ணை உறுத்தாத ஒளிப்பதிவு - சுகம்.

படத்திற்குக் கைகொடுத்திருப்பது இசை. நம் பாரம்பரியமான கிராமியப் பாடல்களை அதன் 'அக்மார்க்' முத்திரை குறையாமல், வெஸ்டர்னை மிக்ஸ் பண்ணித் தந்திருக்கிறார் ஏ.ஆர். ரஹ்மான். சாக்ஸபோன், புல்லாங்குழல், வீணை... என விதவிதமான பின்னணி இசையில் நம் காதுகள் இனிக்கின்றன.

'தில்லானா மோகனாம்பாள்', 'கரகாட்டக்காரன்' படங்களை நினைவூட்டுகிற கதை. எல்லா நிறுத்தங்களிலும் நின்று நின்று நகரும் டவுன் பஸ் மாதிரி திரைக்கதை. இரண்டும் ஒன்றுசேர, அழுத்தந்திருத்தமாய் அமைந்திருக்க வேண்டிய 'சங்கமம்', அரைகுறையாய் அமைந்திருக்கிறது.

**— கே.பி.எஸ்.**



# சங்கமம்



# ஜனநாயகத்தைக் கண்டு பரிதாபப்படும் பால் தாக்கரே!

நின்று கொன்றிருக்கிறது நீதி! இந்துத்வ வெறி உச்ச கட்டத்திலிருந்த 1987ல், தாக்கரே, சிவசேனை வேட்பாளர் ரமேஷ் பிரபுவுக்கு (வில்லபார்லா இடைத்தேர்தல்) ஆதரவாக நடத்திய தேர்தல் பிரசாரத்தில், மதவாடை சற்று தூக்கலாக இருந்த காரணத்துக்கு, காங். வேட்பாளரான பிரபாகர் குண்டே என்றோ வழக்குப் போட்டு விட்டார்.

அது வழக்கம் போல் ஹைகோர்ட், சுப்ரீம் கோர்ட், எல்லாவற்றையும் ஒரு கை பார்த்து, ஒரு வழியாக 1995ல் சிவசேனைக்கு தண்டனை வாங்கித் தந்து விட்டது.

அதன் எதிரொலியாய், இன்று, எலெக்ஷன் கமிஷன் பரிந்துரையின்படி, ஜனாதிபதி நாராயணன், தண்டனைத் தேதியிலிருந்து ஆறு வருடங்களுக்கு அதாவது டிச. 10, 2001 வரை, தாக்கரேவுக்கு வோட்டுரிமையும், தேர்தலில் போட்டியிடும் உரிமையும் கிடையாது என அறிவித்து விட்டார்.

"வழக்கு கொஞ்சம் சுறுசுறுத்திருந்தால், இன்றைய தேதியில் தண்டனைக் காலமே முடிந்திருக்கும்'' என கிண்டலடித்த தாக்கரே, "ஜனநாயகத்தைக் கண்டால் பரிதாபமாய் இருக்கிறது'' என்றிருக்கிறார் அலட்டிக் கொள்ளாமல் அவருக்கென்ன? தேர்தலில் போட்டியிடுவதில்லை என்ற முடிவை அவர் எப்போதோ எடுத்தாகி விட்டது (சுய தண்டனை). அவர் போடப் போகிற ஒரு வோட்டால் சிவ சேனையின் சரித்திரம் தலைகீழாக மாறப் போகிறது என்பதெதுவு மில்லை; அப்புறம் கவலைப்பட என்ன இருக்கிறது? தடை விதிக்கப்பட்ட படம் ஓஹோ என்று ஓடுவது போல,

இந்தத் தீர்ப்பால் மக்கள் ஒரு உத்வேகத்துடன் சிவசேனைக்கு வோட்டளிக்கப் போவதாக அவர் அறிவித்துவிட்டு, அசால்ட்டாக இருந்து விட்டார்.

ஆனால் அவரது தொண்டர் படையால் அவ்வளவு எளிதாக இந்த விஷயத்தை எடுத்துக் கொள்ள முடியுமா? அதுவும் குரு பூர்ணிமா அன்று, தாக்கரேயின் பக்தகே(ா)டிகள் அனைவரும், தங்கள் குருவுக்கு காணிக்கை செலுத்தி, (அது என்னவோ கார்கிலுக்குப் போகப் போகிறதாமே?) தங்கள் இதய தெய்வத்தை வழிபடவென்று, மாதோஸ்ரீ (தாக்கரே இல்லம்) யில் காத்து நிற்கையில், இந்த அறிவிப்பு வந்தால், அந்த ரத்தத்தின் ரத்தங்களால் சும்மா இருக்க முடியுமா?

மறுநாளான வியாழனன்றே சிவசேனைக்

கோட்டைகளை கிர்காவ், தாதர், லால்பாக், பரேல் பகுதிகளிலுள்ள கடைகள், உணவு விடுதிகள், தொழிலகங்கள் எல்லாம் இழுத்து மூடப்பட்டன.

"நாங்கள் வற்புறுத்தவே இல்லை; 'அன்புடன் வேண்டிக் கொண்டோம்'; அவ்வளவு தான்; அவர்களாகவே கதவடைப்புச் செய்தனர்" என்று இந்தப் பகுதி எம்.எல்.ஏ.வான சந்திரகாந்த் பட்வால் சொல்லிக் கொள்கிறார்.

லோயர் பரேலிலுள்ள சேனைத் தொண்டர்கள், எலெக்ஷன் கமிஷனர் எம்.எஸ். கில்லின் கொடும்பாவியை எரித்து, தங்கள் ஆத்திரத்தை தீர்த்துக் கொண்டனர்.

நகர்ப்புறங்களில் வியாழனென்றால், புற நகர்ப் பகுதிகளுக்கு வெள்ளி என்று 'ஆர்கனைஸ்டு' கலாட்டா; முலுண்டு, விக்ரோலி, குர்லா பகுதிகளில் ஒரு ஆட்டோ ஓட (முடிய) வில்லை; ஓடிக் கொண்டிருந்த மாநகர பஸ்களையும் கல்லெறிந்து நிறுத்தி, காற்றைப் பிடுங்கி விட்டனர். ஒரு ஓட்டுநர் படுகாயமடைந்தார். பள்ளிகளுக்குக் காலை ஷிஃப்டில் வந்த குழந்தைகளுக்கு வீடு திரும்ப 'ஸ்கூல் பஸ்' கூட இல்லை; அம்மா அப்பாக்கள் அடித்துப் பிடித்துக் கொண்டு ஓடியாடினார்கள்.

சிவசேனையின் மூத்த தலைவர்களான மனோஹர் ஜோஷி, உதவ் தாக்கரே, ராஜ்தாக்கரே, தத்தாஜி நளவாடே, லீலாதர் தர்கே, வாமன்ராவ் மஹாதக், சுபாஷ் தேசாய் எல்லோரும் சீஃப் எலெக்ஷன் ஆபீசர் டி.கே. சங்கரனை நேரில் சந்தித்து, எலெக்ஷன் கமிஷனின் தீர்ப்புக்கு எதிராக விண்ணப்பித்தார்கள்.

"மூத்த தலைவரும், தேசியவாதியுமான தாக்கரே போன்றவர்களின் வோட்டுரிமையைப் பறித்துவிட்டு, பங்களா தேஷிலிருந்து இங்கே ஊடுருவியிருக்கும் லட்சோப லட்சம் படிப்பறிவேயில்லாத அகதிகளுக்கு வோட்டளிக்கும் உரிமையை வழங்கியுள்ள தேர்தல் கமிஷனின் "புத்திசாலி"த்தனத்தை வியப்பதாக" உதவ் தாக்கரே ஆச்சர்யப்பட்டிருக்கிறார்.

"காங்கிரஸ்காரர்கள் ஒரு வேற்று நாட்டவரை பிரதமராக்கப் பார்க்கிறார்கள்; அது ஒன்றும் தேர்தல் கமிஷனின் கண்களை உறுத்தவில்லை; ஆனால் இந்திய மண்ணில் பிறந்து, இந்தியர்களின் இதயத்திலிருப்பவற்றுக்கு வார்த்தை வடிவம் அளிக்கும் தாக்கரேயைத்தான் கண்ணில் விளக்கெண்ணெய் விட்டுக் கொண்டு பார்க்கிறார்கள்" என விசனமும் பட்டிருக்கிறார்!

முன்னாள் எம்.பி. மோஹன் ரவாலே, "இந்துத்வ கொள்கை மதச் சார்பானது அல்ல என்பதை கோர்ட்டே ஒப்புக் கொண்டிருக்கும் போது, அதைப் பேசியதற்கு தண்டனை வழங்குகிறார்களே... இதென்ன அநியாயம்!" என வாதாடுகிறார். கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவவிடாமல், ஆங்காங்கே எதிர்ப்புக் கூட்டங்கள், போராட்டங்கள், சாலை மறியல்கள் என நடத்தித் தீர்த்தார்கள் சேனைக்காரர்கள். மோஹன் ரவாலே "தாக்கரேவுக்கு எதிரான தீர்ப்பு வாபஸாகாவிட்டால் தேர்தல்களே நடக்க விடமாட்டோம்" என சூளுரைத்தார் என்றால், முன்னாள் மேயர் நந்து சதம் "இப்படி ஒரு தீர்ப்பளித்ததற்கு, ஜனாதிபதி மீதே ஆக்ஷன் எடுக்க வேண்டும்" என்று முழங்கியிருக்கிறார். அரசு இயந்திரத்திலிருப்பவர்கள், தேர்தல் விஷயங்களில் தலையிடக் கூடாதென்று எலெக்ஷன் கோட் ஆஃப் காண்டக்ட் ஆமே?

ஜனாதிபதியை எதிர்த்து வாய்திறக்காவிட்டாலும், "இதுவரை இப்படி நடந்ததேயில்லையே... அநியாயமாயிருக்கிறதே" என அங்கலாய்க்கிறார்கள் பி.ஜே.பி.க்காரர்கள்; முண்டே கவலை எதுவும் படவில்லை; இந்தத் தீர்ப்பால் சிவசேனை – பி.ஜே.பி.க்கு லாபம்தான் என்கிறார்.

"ஆனாலும், பத்து வருடம் முன்பு நடந்ததற்கு இப்போது வன்மம் பாராட்டுவது அழகல்ல; வோட்டுரிமையை மறுப்பதென்பது இந்தியப் பிரஜையின் இந்தியத்தனத்தையே பரிகசிப்பது போலில்லை?" என்கிறார் பிரகாஷ் ஜவேத்கர் என்ற பி.ஜே.பி.க்காரர்.

"இந்துத்வம் எங்கள் இரத்தத்திலேயே ஊறியிருக்கிறது; இந்தத் தேர்தல்களிலும் அது நிச்சயம் வெளிப்படும்" என்று உறுதியாகச் சொல்கிறார் ராணே!

எதிர்க் கட்சிக்காரர்கள் அனாவசியமாக அலட்டிக் கொள்ளவேயில்லை; தாக்கரே பிரசாரம் செய்யக் கூடாது என்று அறிவித்திருந்தாலாவது கொஞ்சம் சந்தோஷப்பட்டிருப்பார்கள். உப்புச் சப்பில்லாத ஒரு தீர்ப்பை எடுத்துக் கொண்டு அவர்கள் வேறு "ஆ... ஊ" என்று எதிர் முழக்கம் செய்யாமலிருப்பதே பொதுமக்களுக்குக் கொஞ்சம் ஆறுதலாயிருக்கிறது.

உண்மையில் இவர் வோட்டுப் போட்டாலென்ன? போடாவிட்டால் என்ன? இவருக்காக வோட்டுப் போடத்தான் ஒரு தனி ஆட்டுமந்தைக் கூட்டமே தயாராயிருக்கிறதே என்ற எண்ணம்தான் எல்லோர் மனத்திலும்.

**— ஜெயஸ்ரீ ராஜ்**

அவர் அறிவுரை கூறினார். திட்டினார். நான் ஒருமுறை அவரிடம் ஒரு பெண்ணின் வஞ்சம் அவளுடைய பிரேமையை விட வலிமை வாய்ந்தது என்று சொன்னேன்.

அந்த வஞ்சக அக்னியின் கொழுந்து விட்டு எரியும் உக்கிரத்தில் அவர் கூறிய எதையும் என்னால் காதில் வாங்க முடியவில்லை.

வாழ்க்கையில் இன்று வரை கஷ்டங்களை மட்டுமே சகித்து வந்திருக்கிற அந்த மனிதரை என்னால் நம்ப முடிந்தது. பத்து ஆண்டுகளாகக் காத்த வஞ்சம் தீர்ந்த வெற்றியால் நான் மனம் திறந்து சிரித்தேன்.

பணக்காரனோ, பெரிய படிப்பாளியோ உத்தியோகஸ்தனோ, பெரிய அழகனோ அல்லாத அந்த மனிதரோடு நான் பழகத் தொடங்கினேன், நேசித்தேன். அதன் உட்பொருள் என் வஞ்சம் தீர்க்கும் வெறிதான்.

முழுவதும் ஒன்று கூடி என்னைப் பழிக்கும். நான் இதற்கெல்லாம் தயாராகி விட்டேன். என் சூழ்நிலை அப்படி என்னை மாற்றி விட்டது.

நான் இவ்விஷயத்தில் முற்றிலும் நிரபராதி! குற்றவாளியே ஆனாலும் அதை நான் பொருட்படுத்தப் போவதில்லை.

அண்ணா! நீ ஒருவன் மட்டும் என் மனோ வேதனையில் மனம் கசிந்து பங்கெடுத்துக் கொண்டாய்! அறிவேன். நான் நிர்ப்பந்தித்திருந்தால் நீ அன்று கல்யாணம் செய்து கொள்ளாமலேயே போயிருப்பாய்.

அந்த அளவு நீ தியாக மூர்த்தி! பாசப் பெட்டகம்.

அண்ணா, மனம் திறந்து எனக்கு ஒரு பதில் எழுது. நான் தவறு செய்தவளா அல்லவா என்று. இந்தக் கடிதத்தின் எந்த ஒரு தனிப் பகுதிக்கும் நான் பதில் எதிர்பார்க்கவில்லை. எனக்கு அது தேவையும் இல்லை.

# ஒரு காதல் டைரி

எனினும் நான் தெய்வ நம்பிக்கையுள்ள ஒரு பெண். பரலோகத்தைப் பற்றி எனக்கு ஒரு பயம் உண்டு. அவரை நான் மோசம் செய்ய உத்தேசிக்கவில்லை.

ஒருவேளை நான் அவருக்கு ஒரு பாரம் ஆகலாம்! இல்லையெனில் அவருடைய வாழ்க்கையைச் சுளுவாக்கவும் முடியலாம்!

நான் ஒரு சுகவாழ்வு அனுபவிக்க வேண்டுமென்று கருதியல்ல அதைச் செய்யப் போவது! நான் ஒரு விபசாரியாக வாழ்ந்து, கருவிலே குழந்தைகளைக் கொன்று இருந்தாலும் சமுதாயமும் நீங்களும் கண்டு கொள்ளாமல் கண் மூடிக் கொண்டு இருப்பீர்கள்.

ஆனால் நான் நேசிக்கிற ஒரு முஸ்லிமை நான் திருமணம் செய்து கொண்டால் உலகம்

அண்ணன்கள்! நீங்கள் இருவரும் என்னை வெறுக்காதீர்கள். என்னை முன்னைவிட அதிகமாக நேசிக்க வேண்டும். எக்காலத்திலும்! வெறுக்காதீர்கள்.

என்னவானாலும் ஒரு பதில் போடுங்கள். அதன் முதல் வாசகம், "தங்கம், நாங்கள் இருவரும் உன்னை நேசிக்கிறோம்! நீ எந்தத்

வைக்கம் முகம்மது பஷீர்

தமிழில் : வையவன்

23

தவறு செய்தாலும் நேசிப்போம். வெறுக்க மாட்டோம்" என்று இருக்க வேண்டும். நான் தவறு செய்தவளா என்பதிலும் உங்கள் மனம் திறந்த அபிப்பிராயம் தேவை.

நீங்கள் எழுதும் கடிதத்திற்கு நான் பதில் போட முயல்வேன். என் வஞ்ச அக்னியில் என்னை நானே ஆகுதி செய்வதாயின் இதுவே என் கடைசிக் கடிதமாக இருக்கும்.

அப்படி ஆகுமானால்...

அப்படி ஆகாது போகட்டும்...

அவ்வாறுதான் எனில்....

இந்த வாழ்க்கை வரலாறு ரகசியமாக



இருக்க வேண்டும்! தாய் தந்தையர் அதை ஒரு சாதாரண மரணமாக எடுத்துக் கொள்ள வேண்டும். காரணம் நான் அப்பாவை நேசிக்கிறேன். வழிபடுகிறேன். என் தாயையும்!

உங்கள் பெண் குழந்தைகளைப் படிக்க வைக்காதீர்கள். அது அவர்களை முற்றிலும் மனவேதனைப்படுத்தி விடும். துர்லபமான சில கனவுகள்தான் பெண்ணின் வாழ்க்கை! அந்தக் கனவுகள் தகர்ந்தால் அவளும் நசிந்து விடுவாள். அதற்கு இடம் தந்து விடாதீர்கள்.

என் அண்ணன்களை நான் நேசிக்கிறேன். ஆத்மார்த்தமாக. என் ஆத்மாவும் பிரேதமும் கூட ஒன்று கூடி உங்களை நேசிக்கும்.

அப்படி....

அப்படியானால் என் கொள்கை நேர்மையைச் சந்தேகிக்காதீர்கள். எனக்காக இரண்டு



''ஏன்டா, உங்க வகுப்பில் அறுபது பேரா படிக்கிறாங்க?''

''எப்படி நைனா கண்டுபிடிச்சீங்க?''

''நீ அறுபதாம் ரேங் வாங்கியதை வச்சுத்தான்!''

– சித்தோடு க. பூங்கொடி

துளிக் கண்ணீர். நான் மிகவும் மனோ வேதனை அனுபவித்தவள் என்ற நினைவும் சேர்த்து வேண்டும்.

நான் ஒழுக்கசீலம் உள்ளவளாக இருந்தேன், என்றுமே.

நல்லன்புடன்

சொந்தமுள்ள தங்கம்.''

கடிதத்தைப் படித்து முடித்தேன். ஆனால் அவள் கூறியது போலத் தபாலில் போட வில்லை.

*8–4–46:*

இன்று தேவி எனக்கு ஒரு பொன் மோதிரம் தந்தாள். மாலையில் சௌமினியும் கூட இருந்தாள். கொடுத்ததை அவள் பார்க்க வில்லை. இருவரின் பின்புலத்தில் மேற்கிலே சந்திரன். நேசப்பொழிவுடன் கூடிய ஒரு காகிதத்தில் மூடித்தான் அந்த மோதிரத்தை அவள் தந்தாள்.

நான் புதிய அறைக்கு வந்து அந்த மோதிரத்தைப் போட்டுக் கொண்டேன். முதன் முதலாக அணிகின்ற ஒரு பொன் மோதிரம். எனக்கு அழுகை வந்தது. கண்ணீரிலே நான் அந்த மோதிரத்தை முக்கினேன்.

*10–4–46:*

இன்று அந்தக் கடிதத்திற்குப் பிரதி எடுத்தேன். கெ.எஸ். வீட்டிற்குப் போனேன். கெ.எஸ்ஸும் அவருடைய மனைவியும் மோதிரத்தைப் பார்த்தார்கள்.

''கல்யாண மோதிரம்'' என்றார்கள்.

தேவிக்கு ஒரு கடிதம் எழுதுவதாகச் சொல்லி இருந்தேன்.

எழுதவில்லை. என்ன எழுத?

வேதனை தரவோ திட்டவோ எனக்கு முடியாது. மாலை ஏழு மணிக்கு என்னைப் பற்றி நானே கடுமையாகச் சிந்திப்பதாக ஓர் உணர்வு வந்தது.

நான் அவள் எழுதிய கடிதமும் ஒரு புத்தகமுமாகப் போனேன்.

தேவி கோவிலுக்கு வந்து கொண்டிருந்தாள். புத்தகத்தில் கடிதத்தை வைத்துக் கொடுத்தேன்.

''நீ உன் அண்ணனுக்கு எழுதிய கடிதம் உள்ளே இருக்கு. அனுப்பிடு.''

''ஐயோ, கோவிலுக்கு இதைக் கொண்டு போறது எப்படி?''

''ஓ பரவால்லே.''

நான் அகன்றேன்.

*15–4–46:*

இன்று பகல் பன்னிரண்டு மணிக்கு நான் கிராமபோனில் பாட்டு கேட்டுக் கொண்டிருந்தேன். அப்போது சரஸ்வதி தேவி படியேறி வந்தாள்.

கூடவே ஒரு கூலிக்காரன்.

ஒரு பெரிய 'டபிள்-பெட்' பெட்ஷீட், நான்கு தலையணைகள். இரண்டு குஷன்கள். விலை மதிப்புள்ள இரண்டு காஷ்மீர் சால்வைகள்.

இத்தனையோடும் தேவி வந்தாள்.

எனது பழைய பெட்டையும் தலையணைகளையும் கூலிக்காரனிடம் கொடுத்தாள்.

அவனை அனுப்பி விட்டாள்.

பிறகு பெரிய ஜமுக்காளம் விரித்தாள். அதன் மீது 'பெட்'டைப் போட்டாள்.

அதன் மீது பெட்ஷீட்டை விரித்து தலையணைகளை வைத்தாள்.

பிறகு கண்ணாடியைக் கழற்றிக் கீழே வைத்தாள். என்னை இழுத்து 'பெட்'டிலே கிடத்தினாள்.

நான் தேவியை கண்களில் முத்தமிட்டேன்.

அதற்குப் பிறகு இருவரும் கிராமபோன் பாட்டு கேட்டுக் கொண்டிருந்தோம்.

நான் எழுந்து போய் இரண்டு மசால் தோசையும் நான்கு உளுந்து வடைகளும், இரண்டு டீயும் வாங்கி வந்தேன்.

நாங்கள் அதைச் சாப்பிட்டோம்.

பிரகாசமான எதிர்காலத்தைப் பற்றிய பேச்சில் மூழ்கி, நாங்கள் சிறிது நேரம் உட்கார்ந்திருந்தோம்.

இரண்டு மணி நேரம் கழித்து தேவி கிளம்பினாள்.

எல்லாம் மங்களமாக நடக்கும் என்று நாங்கள் உறுதியோடு நம்பிக் கொண்டிருந்தோம்.

ஆனால் அப்படி எல்லாம் மங்களமாக நடைபெறவில்லை.

குண்டு வெடித்து விட்டது.

சட்டென்றுதான்.

எல்லா விவரங்களையும் எல்லாரும் தெரிந்து கொண்டனர்.

தேவியின் அம்மா தற்கொலை செய்து கொள்ள முயன்றாள். ரயில் தண்டவாளத்தில் தலைவைத்துப் படுத்துக் கெண்டாள்.

தேவியின் அப்பா பதறி நடுங்கிக் கட்டிலில் இருந்து கீழே விழுந்தார்.

தேவியின் தம்பியும் சௌமினியும் ஓடிப் போய் அம்மாவைப் பிடித்து இழுத்து வந்து விட்டனர்.

அப்பா தேவியின் திருமணத்தை நிச்சயித்து முடித்தார். பந்தல் போடப்பட்டு விட்டது.

இவ்வளவு தகவல்களையும் முகம் வெளுத்துக் களைப்புற்று என் அறைக்கு வந்த தேவி சொன்னாள்.

தேவியின் கைகளில் ஒரு காகிதப் பொட்டலத்தில் சற்று அதிகமாகவே தங்க நகைகள். அவற்றை என் காலடியில் வைத்தாள்.

"அடுத்து?" தேவி கேட்டாள்.

"நான் யோசிக்க வேண்டும்" என்றேன்.

தேவி என் படுக்கையில் மல்லாந்து படுத்துக் கொண்டு கண்ணீர் சிந்திக் கொண்டிருந்தாள்.

நான் யோசித்தேன். கடினமாக.



"பொது மக்களே, நாங்கள் ஆட்சிக்கு வந்தால் லஞ்சப்பேயை ஓட்டுவோம், அதற்காக நான் மலையாள மாந்திரீகம் கற்று வருகிறேன் என்ற மகிழ்ச்சியான செய்தியையும் தெரிவித்துக் கொள்கிறேன்!"

– இரா. கமலக்கண்ணன்

---

பாங்கில் பணமில்லை.

'ஒரு முஸ்லிமைக் கல்யாணம் செய்து கொள்ளும் தண்டனையில் இருந்து பெரிய வீட்டுக்காரர்களான ஒரு குடும்பத்தை எப்படிக் காப்பாற்றுவது?

நான் எழுந்து போனேன்.

தேவி வழக்கம் போல் கண்ணாடியை எடுத்துக் கீழே வைத்திருந்தாள்.

ஒரு துண்டை எடுத்து அவளுடைய கண்ணீரைத் துடைத்து விட்டேன். பிறகு கண்களிலும் உதடுகளிலும் முத்தமிட்டேன்.

"தேவி. அவமானம் தாங்காமல் உன் தாயும் தந்தையும் ஒருவேளை தற்கொலை செய்து கொள்வார்கள். அவர்கள் வைராக்கியக்காரர்கள்". மான நஷ்டத்தைத் தாங்குவது அவர்களுக்குச் சாத்தியம் இல்லை. நம்முடைய தாம்பத்திய வாழ்வில் அவர்களது தற்கொலை என்றென்றும் நிழலிட்டு நிற்கும்.

"என் மனசில் தாள முடியாத துக்கம் உண்டு. எனினும் துயரின் இனிமை கலந்த மோகன காவியமே, நீ உன் தாய் தந்தையரின் பிரியத்திற்கும் பாசத்திற்கும் இணங்கிவிடு. அதற்குத் தகுதியுள்ளவளாகவே இரு. தைரியத்தோடு போ. இந்த நகைகளையும் எடுத்துக் கொண்டு போ. தெய்வத்தின் கருணை உன்னையும் என்னையும் காப்பாத்தும்" என்று சொன்னேன்.

அவள் என்னையே பார்த்துக் கொண்டு நின்றாள். பிறகு புறப்பட்டுச் சென்றாள்.

நான் தனியன் ஆனேன். அன்று இரண்டு கனவுகள் கண்டேன்.

தேவியின் தாயுடைய முகச்சாயல் உள்ள ஒரு பெண்ணின் தற்கொலை. அவளுடைய தலைவேறு உடல் வேறாகக் கிடந்தது.

இரண்டாவது கனவு. நான் மிகவும் அழகான ஓர் இளைஞனாகி விட்டிருந்தேன்.

கல்யாணம் முடிந்த அடுத்த நாள் காலையில் வெள்ளைப்பட்டுப் புடைவையுடன், கோயிலுக்குப் போகிற தோற்றத்துடன் தேவி என் அறைக்கு வந்தாள். கையில் ஒரு காகிதத்தில் பத்துப் பன்னிரண்டு பொன் மோதிரங்கள்.

வந்ததும் வழக்கப்படி தேவி கண்ணாடியைக் கழற்றினாள். ஜன்னல் சட்டத்தில் வைத்தாள்.

"தேவி, எனக்கு மோதிரங்கள் வேண்டாம்" என்றேன்.

"என் திருப்திக்காக இரண்டு எடுத்துக் கோங்க" என்றாள்.

நான் இரண்டை எடுத்துக் கொண்டேன்.

"உன் கணவரிடம் நம் நட்பைப் பற்றிச் சொல்லிவிடு. நீ சொல்லாட்டி வேற யாராவது சொல்லுவாங்க! உனக்கு எல்லா ஐஸ்வர்யங்களும் கிட்டணும். கருணாமயமான தெய்வம் அனுக்கிரகிக்கட்டும்."

நான் அவள் கண்ணாடியை எடுத்து அதன் இரண்டு சில்லுகளிலும் முத்தமிட்டேன். பிறகு அதை அவள் முகத்தில் பொருத்தினேன்.

"தேவி, சுகமாப் போய் வா."

அவள் குனிந்து என் பாதங்களை முத்தமிட்டாள். நான் அவள் தலைமேல் கைவைத்துக் கொண்டே சொன்னேன்.

"மங்களம்! தெய்வ அனுக்கிரகம் உண்டு. தீர்க்க சுமங்கலி பவ."

(முற்றும்)

---



"இன்னிக்கு நம்ம வீட்ல நான் சமைக்கிற முறை. வந்ததும் உங்க நண்பரை இன்னிக்கு விருந்திற்கு அழைச்சிருக்கறீங்களே..."

"இந்த சந்தர்ப்பத்தை விட்டா அவனைப் பழி வாங்க வேற சந்தர்ப்பம் கிடைக்காது, அதான்!"

– வெ. நாகராஜ்

# பொன்னியின் செல்வன்

முப்பத்தொன்றாம் அத்தியாயம்

## பசும் பட்டாடை

மறுநாள் மாலையில் வந்தியத்தேவன் முதன்மந்திரி அநிருத்தரின் ஓலையுடன் அரிசிலாற்றங் கரையோடு குடந்தை நகரை நோக்கிப் போய்க்கொண்டிருந்தான். குதிரையை விரட்டாமல் மெள்ளச் செலுத்திக்கொண்டு இருபுறமும் தோன்றிய இனிய காட்சிகளைப் பார்த்துக் கொண்டு போனான்.

ஐப்பசி மாதத்தின் ஆரம்பத்தில் சோழ வளநாடு பூரணப் பொலிவுடன் விளங்கிற்று. இயற்கை அரசி பச்சைப் பட்டாடை உடுத்தி நவ யௌவன சௌந்தரியத்துடன் திகழ்ந்தாள். அந்தப் பச்சைப் பட்டாடையில்தான் எத்தனை விதவிதமான பசுமைச் சாயல்கள்! கழனிகளில் கதிர் விடுவதற்குத் தயாராயிருந்த நெற்பயிர்கள் ஒரு சாயல்; நடவு நட்டுச் சில காலமாகியிருந்த இளம் பயிர்கள் இன்னொரு சாயல்; அப்போதுதான் நடவாகியிருந்த பசும் பொன்னிறப் பயிர்கள் வேறொரு சாயல்! ஆலமரத்தில் தழைத்திருந்த இலைகள் ஒரு பசுமை;




அமரர் கல்கி

கல்கி கலெக்ஷன்

அரச மரத்தில் குலுங்கிய இலைகள் இன்னொரு விதப் பசுமை: தடாகங்களில் கொழு கொழுவென்று படர்ந்திருந்த தாமரை இலைகளின் மோகனப் பசுமை; வாழை இலைகளின் கண் கவரும் பசுமை; தென்னங் குருத்துக்களின் தந்த வர்ணப் பசுமை; பூமியில் இளம் புல்லின் பசுமை; ஓடைகளில் தெளிந்த நீரின் பசுமை; நீரில் அங்குமிங்கும் தத்திப் பாய்ந்த தவளைகளின் பசுமை.

இவ்வளவு விதவிதமான சாயல்கள் வாய்ந்த பச்சைப் பட்டாடையின் அழகைத் தூக்கிக் காட்டுவதற்கென்று நட்சத்திரப் பொட்டுக்கள் பதித்தது போல் குவளைகளும் குமுதங்களும் செந்தாமரை மலர்களும் செங்கழு நீர்ப் பூக்களும் ஆங்காங்கு ஜொலித்துக் கொண்டிருந்தன.

இந்த அழகையெல்லாம் வந்தியத்தேவன் இரு கண்களாலும் பருகிக் கொண்டு பிரயாணம் செய்தான். ஆடி மாதத்தில் அந்த வழியாக அவன் சென்றபோது பார்த்த காட்சிகளுக்கும் இப்போது காணும் காட்சிகளுக்கும் உள்ள வேற்றுமையை அவன் உணர்ந்திருந்தான். ஆடி மாதத்தில் ஆற்றில் புது வெள்ளம் நுங்கும் நுரையுமாகப் பொங்கிப் பெருகிக் கொண்டிருந்தது. இப்போதோ பிரவாகத்தின் வேகமும் கோபமும் தணிந்து, செந்நிறம் மாறி, பளிங்கு போல் தெளிந்து, உல்லாஸமாகப் பவனி சென்றது. புது வெள்ளத்தின் 'ஹோ' என்ற இரைச்சலும், மேலக் காற்று மரக்கிளைகளைத் தாக்கியபோது உண்டான 'பேரோசையும், ஆயிரமாயிரம் புள்ளினங்களின் கோலாகலத் தொனிகளும் அப்போது ஒரு மாபெருந் திருவிழாவின் ஆர்வாரத்தைப் போல் கேட்டன. இன்றைக்கோ குளிர்ந்த வாடைக் காற்றில் இலைகள் அசைந்த மாமர சத்தமும், மடைகளில் தண்ணீர் பாய்ந்த சலசலப்பு ஓசையும், மழையை எதிர்பார்த்த மண்டூகங்களின் சுருதி பேதக் குரல்களும், பலவகைச் சில் வண்டுகளின் ஸ்வர பேத ரீங்காரங்களும் சேர்ந்து இயற்கை மாதரசியின் சோக சங்கீத கோஷ்டி கானத்தைப் போல் ஒலித்துக்கொண்டிருந்தன.

வந்தியத்தேவனுடைய உள்ளத்திலும் அப்போது ஏதோ ஒருவகையான இனந் தெரியாத சோகம் குடி கொண்டிருந்தது. இதன் காரணம் என்னவென்று யோசித்து யோசித்துப் பார்த்தும் அவனுக்குப் புலப்படவில்லை. உண்மையில் அவன் அபரிமிதமான உற்சாகம் கொள்வதற்கு வேண்டிய காரணங்கள் இருந்தன. இந்த வழியாக இரண்டு மாதங்களுக்கு முன்னால் போனபோது என்னென்ன மனோராஜ்யங்கள் செய்தானோ, அவ்வளவும் நிறைவேறி விட்டன. அவன் கனவிலும் நடக்கும் என்று கருதாத காரியங்களும் நடந்தேறி விட்டன. சுந்தர சோழ சக்கரவர்த்தியைத் தரிசித்தாகி விட்டது. தஞ்சாவூர், பழையாறை, மாதோட்டம், அநுராதபுரம் முதலிய மாபெரும் நகரங்களைப் பார்த்தாகி விட்டது. சோழ நாட்டின் கண்ணுக்குக் கண்ணாக விளங்கிய பொன்னியின் செல்வனுடைய சிநேகம் கிடைத்துவிட்டது; அந்த வீர இளவரசனுக்கு உதவி புரியும் பேறும் கிடைத்து விட்டது. தமிழகத்தின் அழகுத் தெய்வமும், சோழர் குல விளக்குமான அரசிளங்குமரி குந்தவையை ஒருமுறை பார்ப்பதற்கே எத்தனையோ தவம் செய்திருக்க வேண்டும். அப்படியிருக்க அவளுடைய தூய இதயத்தின் நேயத்தைப் பெறுவதென்பது எத்தகைய பெறற்கரும் பாக்கியம்? அதை எண்ணியபோது அவன் உள்ளம் பெருமிதத்தினால் பொங்கியது. ஆனால் அந்தப் பெருமித குதூகலத்துடனே ஏதோ ஒரு வேதனையும் தொடர்ந்து வந்தது. அவ்வளவு பெரிய பாக்கியத்துக்கு நான் உண்மையில் உரியவன்தானா? அது நிலைத்து நிற்குமா? கைக்கு எட்டியது வாய்க்கெட்டுவதற்குள் எவ்வளவோ தடங்கல்கள் ஏற்படக்கூடும் அல்லவா?

ஆகா! தடங்கலுக்கு என்ன குறைவு? உலகமே தடங்கல் மயந்தான்! ரவிதாஸனைப் போன்ற மாய மந்திரவாதிகளும், நந்தினியைப் போன்ற மாய மோகினி



களும், பழுவேட்டரையர்களைப் போன்ற சதிகாரர்களும், கந்தமாறனையும் பார்த்திபேந்திரனையும் போன்ற சிநேகத் துரோகிகளும், பூங்குழலியையும் வானதியையும் போன்ற பித்துக் கொள்ளிப் பெண்களும், வீர வைஷ்ணவ ஒற்றர்களும், காளாமுக சைவர்களும், கொள்ளி வாய்ப் பேய்களும், ஆழந் தெரியாத புதை சேற்றுக் குழிகளும் நிறைந்த உலகமல்லவா இது? கடவுளே! மேற்கூறிய அபாயம் ஒவ்வொன்றிலிருந்தும் எப்படியோ இது வரை தப்பித்து வந்து விட்டேன்! அவை எல்லாவற்றையும் விடப் பெரும் அபாயகரமான காரியத்தில் இப்போது முதன் மந்திரி அநிருத்தர் என்னை ஏவியிருக்கிறார்! ஒரு பக்கத்தில், எளிதில் மூர்க்காவேசம் கொள்ளக் கூடிய ஆதித்த கரிகாலர்; மற்றொரு பக்கத்தில் பெரிய பழுவேட்டரையரைப் பொம்மையைப் போல் ஆட்டி வைக்கும் மாய சக்தி வாய்ந்த மோகினி, - இவர்களுடைய நோக்கத்துக்குக் குறுக்கே நின்று நான் தடை செய்து வெற்றி பெற வேண்டுமாம்! இது நடக்கக் கூடிய காரியமா? அந்தப் பிரம்மராயருடைய மனத்தில் என்னதான் உண்மையில் எண்ணியிருக்கிறாரோ தெரியாது! அரசிளங் குமரியிடமிருந்து என்னைப் பிரித்து விடுவதே அவருடைய நோக்கமாயிருக்கலாம் அல்லவா? ஆழ்வார்க்கடியான் வழியில் வந்து சேர்ந்து கொள்வான் என்று இருவரும் சொன்னார்கள்! அவனையும் இதுவரையில் காணோம்! அந்த வீர வைஷ்ணவன் எப்படிப் பட்டவனாயிருந்தாலும் இதுவரையில் எனக்கு ஒரு கெடுதலும் செய்ததில்லை; பலமுறை உதவிதான் புரிந்திருக்கிறான். அவனுடன் சேர்ந்து பிரயாணம் செய்தால், ஏதாவது உற்சாகமாகப் பேசிக் கொண்டிருப்பான். பிரயாணத்தில் அலுப்புத் தட்டாமல் இருக்கும். இனி எங்கே வந்து அவன் நம்முடன் சேர்ந்து கொள்ள முடியும்? அவனுக்



காக எத்தனை நேரந்தான் இந்தக் குதிரையை இழுத்துப் பிடித்து மெள்ளச் செலுத்திக் கொண்டுப் போவது...?

ஆகா! அதோ கும் பலாயிருக்கும் மரங்கள்! நதி வெள்ளத்தில் முதலைகளைப் போல் கிடக்கும் அந்த வேர்கள்! இங்கேதான்

பொம்மை முதலை மீது வேல் எறிந்த படலம் நடைபெற்றது! வாரிணியும் தாரகையும் செந்திருவும் மந்தாகினியும் நம்முடைய வீரச் செயலைப் பார்த்துக் கலகலவென்று சிரித்தது இவ்விடத்திலே தான்! அரசிளங்குமரி நமக்குப் பரிந்து அந்தப் பெண்களை அதட்டியதும் இதே இடத்தில்தான்! சற்று இங்கே நின்று பார்க்கலாம்...!

வந்தியத்தேவன் குதிரை மீதிருந்து இறங்கி நதிக் கரையின் ஓரமாகச் சென்று நின்றான். மரத்தின் வேர்களைச் சுற்றிச் சுழற்றிச் சுழலிட்டுக் கொண்டு ஓடிய தெளிந்த நீர்ப் பிரவாகத்தைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்... ஆகா! அந்தச் சுழலில் ஒரு முகம் தெரிகிறது! அது யாருடைய முகம்? சொல்ல வேண்டுமா? அரசிளங்குமரி குந்தவைப் பிராட்டியின் இன்பப் பொன் முகந்தான்...!

**"கண்டேன் கண்டேன் கண்டேன் கண்ணுக்கினியன கண்டேன்!"**

என்று பாடிய குரலைக் கேட்டு வந்தியத்தேவன் திடுக்கிட்டு அண்ணாந்து பார்த்தான். உன்னதமான மரத்தின் உச்சாணிக் கிளை ஒன்றில் ஆழ்வார்க்கடியான் அமர்ந்திருப்பது தெரிந்தது.

"ஓகோ! வீர வைஷ்ணவரே! நான் உம்முடைய திருக் கண்களுக்கு அவ்வளவு இனியவனாக இருக்கிறேனா? நானும் உம்மைச் சிறிது நன்றாகப் பார்க்கிறேன். கீழே இறங்கி வருக!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

வீர வைஷ்ணவர் மரத்திலிருந்து இறங்கிய வண்ணம், "நான் உன்னைச் சொல்லவில்லை, அப்பனே! உடையில் வாளும் கையில் வேலும் ஏந்திய நீ என் கண்ணுக்குப் பயங்கரமாக வல்லவோ புலப்படுகிறாய்?" என்றான்.

"பிறகு யாரைப் பற்றிச் சொன்னீர் வைஷ்ணவரே!"

"முழு முதற் கடவுளாகிய திருமால் வாமனாவதாரம் எடுத்து வந்து வானத்தை அளப்பதற்காக ஒரு பாதத்தைத் தூக்கியபோது உங்கள் சிவபெருமானுடைய கண்களுக்கு..."

"வைஷ்ணவரே! நிறுத்தும்! இம்மாதிரியெல்லாம் சிவனைத் தாழ்த்திக் கூறுவதை நிறுத்தி விடும். இல்லாவிடில் பெரிய அபாயத்துக்கு உள்ளாவீர்!"

"என்ன அபாயம், அப்பனே! முதலையைக் கொன்று யானையைக் காத்த பெருமானின் சக்கரம் இருக்கும்போது என்னை யார் என்ன செய்ய முடியும்?"

"நான் சொல்வதைச் சொல்லி விட்டேன். அப்புறம் உமது இஷ்டம்."

"எனக்கு என்ன அபாயம் வருகிறது என்று சொல், தம்பி!"

"பழையாறில் ஜனங்கள் கொந்தளித்து அரண்மனை வாசலுக்கு வந்தார்கள் அல்லவா? அப்போது சில காளாமுகர்கள் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டேன்."

"என்ன பேசிக் கொண்டார்கள்?"

"சோழ நாட்டில் பெருகி வரும் வீர வைஷ்ணவர்களை மகா காளிக்குப் பலி கொடுத்து, அவர்களுடைய மண்டை ஓடுகளைக் குவித்து அடுக்கி, அவற்றின் பேரில் நின்று ஆனந்தத் தாண்டவம் ஆட வேண்டும் என்று சொன்னார்கள்!"

ஆழ்வார்க்கடியான் தன் மண்டையைத் தொட்டுப் பார்த்துக்கொண்டு, "இது கெட்டியாகத்தானிருக்கிறது! காளாமுக தாண்டவத்தைத் தாங்கக் கூடியதுதான்" என்றான்.

"நான் கேள்விப்பட்டதற்குத் தகுந்தாற்போல் இன்றைக்கு நான் வரும் வழியெல்லாம் காளாமுகர்கள் மண்டை ஓடுகளையும் சூலாயுதங்களையும் தாங்கிக்கொண்டு அலைகிறார்கள். நீர் சிவனே என்று இந்த முன் குடுமி வேஷத்தை மாற்றிக்கொண்டு..."

"முடியாது, அப்பா, முடியாது!"

"என்ன முடியாது?"

"நீ சொன்னாயே, அந்தப் பெயரைச்

சொல்ல முடியாது. 'விஷ்ணுவே!' என்று சொல்லி எனது வேஷத்தை மாற்றிக் கொண்டாலும் மாற்றிக்கொள்வேன்... அதோ பார்!"

ஆற்றங்கரைச் சாலையில் அப்போது ஒரு பல்லக்குப் போய்க்கொண்டிருந்தது. அதற்குள் ஒரு பெண்மணி இருப்பது தெரிந்தது. ஆனால் யார் என்று தெரியவில்லை. யாரோ ராஜகுலத்துப் பெண்ணாகத்தானிருக்க வேண்டும். யாராயிருக்கும்? பல்லக்குச் சுமப்பவர்களைத் தவிர ஒரு தாதிப் பெண் பக்கத்தில் போய்க் கொண்டிருந்தாள். ஒருவேளை அரசிளங்குமரியாயிருக்கலாமோ! அப்படியிருக்க முடியாது.

"வைஷ்ணவரே! அந்தப் பல்லக்கில் இருப்பது யார், தெரியுமா?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"தம்பி! நான் சொல்வதைக் கேள். உனக்குச் சம்பந்தமில்லாத காரியங்களில் தலையிட்டுக் கொள்ளாதே! அதனால் பல தொல்லைகளை நீ ஏற்கெனவே அனுபவித்திருக்கிறாய் அல்லவா! வழியோடு எத்தனையோ பேர் போவார்கள்; உனக்கு என்ன அதைப் பற்றி? குதிரை மேலேறிக் கொள்; தட்டி விடு!" என்றான்.

"ஓகோ! அப்படியா சமாசாரம்? வீர வைஷ்ணவர் இப்போது பெரிய வைராக்கியசாலி ஆகி விட்டதாகத் தோன்றுகிறது. வீர நாராயணபுரத்தில் நடந்ததை மறந்து விட்டீரா? அங்கே மூடு பல்லக்கில் சென்ற பெண்ணுக்கு ஓலை ஒன்றைச் சேர்ப்பிக்கும் படி நீர் எனக்குச் சொல்லவில்லையா?"

"அதெல்லாம் பழைய கதை! இப்போது எதற்கு எடுக்கிறாய்?"

"போனால் போகட்டும். நீர் என்னோடு வழியில் வந்து சேர்ந்து கொள்வீர் என்று சொன்னார்கள். உமக்காகவே இத்தனை நேரம் மெள்ள மெள்ளக் குதிரையைச் செலுத்திக் கொண்டு வந்தேன். இனியாவது என்னோடு வரப் போகிறீரா, இல்லையா?"

"நீ குதிரையில் போகிறாய்! நான் கால்நடையாக வருகிறேன். நாம் எப்படிச் சேர்ந்து பிரயாணம் செய்ய முடியும். நீ கொள்ளிடக் கரையில் போயிரு. அங்கே நாளைக் காலையில் உன்னுடன் வந்து சேர்ந்துகொள்கிறேன்."


ழ்வார்க்கடியான் வேறொரு இரகசிய வேலையில் ஈடுப்பட்டிருக்கிறான் என்றும், தன்னுடன் வரமாட்டான் என்றும் வந்தியத்தேவன் நிச்சயமடைந்தான். "சரி! உமது இஷ்டம்!" என்று கூறிக் குதிரை மீது தாவி ஏறிக்கொண்டான். தான் போக வேண்டிய திசையை நோக்கினான். வடகிழக்குத் திசையின் அடிவாரத்தில் கரிய மேகங்கள் திரள்வதைக் கண்டான்.

"வைஷ்ணவரே! இன்று மழை பெய்யுமா?" என்று கேட்டான்.

"அப்பனே! எனக்கு என்ன ஜோசியமா தெரியும்? ஐப்பசி பிறந்து விட்டதல்லவா? மழை பெய்தாலும் பெய்யும். நீ எல்லாவற்றுக்கும் சீக்கிரமாகக் குதிரையைத் தட்டி விட்டுக் கொண்டு போ! இராத்திரி தங்குவதற்கு ஏதேனும் ஒரு சத்திரம் - சாவடியைப் பார்த்துக் கொள்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

வந்தியத்தேவன் அவ்விதமே குதிரையைத் தட்டி விட்டான். "எனக்கு என்ன ஜோசியமா தெரியும்?" என்று ஆழ்வார்க்கடியான் கேட்டது அவனுடைய மனத்தில் பதிந்திருந்தது. அதிலிருந்து குடந்தை சோதிடரின் நினைவு வந்தது. போகும் வழியிலேதான் அந்தச் சோதிடரின் வீடு இருக்கிறது. அவரைப் பார்த்துவிட்டுப் போனால் என்ன? சோழ சிங்காதனம் ஏற ஆசைப்படுகிறவர்களுக்குள்ளே யாருக்கு அந்த அதிர்ஷ்டம் கிடைக்கப் போகிறது? பொன்னியின் செல்வரைத் துருவ நட்சத்திரத்துக்குச் சமமானவர் என்று குடந்தை சோதிடர்

சொன்னாரல்லவா? அவரோ இராஜ்யம் ஆளுவதில் மனத்தைச் செலுத்தவே மறுக்கிறார்! இலங்கைச் சிம்மாதனத்தையும் மணிமகுடத்தையும் எவ்வளவு அநாயாசமாக மறுதலித்தார்? அவருக்குப் பல கண்டங்கள் நேரிடுமென்று சோதிடர் கூறியது ஓரளவு பலித்துத்தானிருக்கிறது. அது போலவே வருங் காலத்தில் அவர் மகோந்நதம் பெற்று விளங்குவார் என்பதும் பலிக்



குமா? அது எப்படிச் சாத்தியமாகக் கூடும்...? என்னுடைய வாழ்க்கைக் கனவுகள்தான் எவ்வளவு தூரம் பலிக்கப் போகின்றன? என் முன்னோர்கள் காலத்தில் இழந்துவிட்ட இராஜ்யம் திரும்பக் கிடைக்குமா? நான் இப்போது எதற்காகப் புறப்பட்டிருக்கிறேனோ, அது எவ்வளவு தூரம் நிறைவேறும்? ஆதித்த கரிகாலர், நந்தினி, - இவர்களுக்குக் குறுக்கே நின்று நான் எந்தக் காரியத்தையும் சாதிக்க முடியுமா? இதுவரையில் இரண்டு மூன்று தடவை நந்தினி



யிடம் சிக்கிக்கொண்டு தப்பிப் பிழைத்தோம்! மறுபடியும் அது முடியுமா? பழுவூர் இளையராணியை எண்ணிய போது வந்தியத்தேவனுடைய மனத்தில் ஒரு திகில் உண்டாயிற்று. அவள் அவனிடம் மிக்க பிரியமும் மரியாதையும் காட்டிப் பேசியதென்னமோ உண்மைதான்! ஆனால் அவள் உள்ளத்தை அவனால் அறிய முடியவில்லை. ஏதோ ஒரு முக்கிய காரிய நிமித்தமாக அவனை அவள் விட்டு வைத்திருப்பதாகவே தோன்றியது. அதனாலேயே வந்தியத்தேவனிடம் அவள் அவ்வளவு பொறுமையாக இருந்திருக்கிறாள். அது என்ன காரியமாக இருக்கும்?

வந்தியத்தேவனுடைய குதிரை சற்று முன் அந்த வழியே சென்ற பல்லக்கைத் தாண்டிச் சென்றது. இம்முறை அவன் பல்லக்கை மோதவும் விரும்பவில்லை. பல்லக்கு அவனை மோதவும் இஷ்டப்படவில்லை. ஆனால் குதிரை பல்லக்கைத் தாண்டிய போது பல்லக்கின் திரை சிறிது விலகியது. உள்ளே வீற்றிருந்த பெண் கொடும்பாளூர் இளவரசி வானதி என்பதை அறிந்துகொண்டான். குதிரையை நிறுத்தலாமா என்று ஒரு கணம் யோசித்தான். பிறகு அதை மாற்றிக்கொண்டு மேலே சென்றான். வானதியைப் பற்றி இளையபிராட்டி கூறியது நினைவு வந்தது. நாலுபுறமும் அபாயங்கள் சூழ்ந்த இக்காலத்தில் கொடும்பாளூர் இளவரசி தனியாக எங்கே புறப்பட்டாள்? தகுந்த பாதுகாப்புக்கூட இல்லையே? அதோடு இன்னொரு விசித்திரத்தையும் அவன் கண்டான். சற்றுத் தூரத்திலிருந்து பயங்கரத் தோற்றமுடைய இரண்டு காளாமுக சைவர்கள் வானதியின் பல்லக்கை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இவர்கள் எதற்காக அப்படிப் பார்க்கிறார்கள்? அவர்கள் இரண்டு பேரும் யார்? அரிச்சந்திர நதிக்கரையில் தான் படுத்துறங்கியபோது தன் பக்கத்தில் வந்து நின்று பேசியவர்கள் அல்லவா?

வானதியிடம் வந்தியத்தேவனுக்கு அவ்வளவு அனுதாபம் இல்லையென்பது உண்மையே. பொன்னியின் செல்வருடைய உள்ளத்தில் பூங்குழலி பெற வேண்டிய இடத்தை வானதி அபகரிக்க விரும்புவதாகவே அவன் எண்ணினான். அதனால் அவள் பேரில் கோபங் கொண்டிருந்தான். ஆனாலும் இளையபிராட்டி அவளிடம் அளவற்ற அன்பு வைத்திருந்தாள் என்பதை அவனால் மறக்க முடியவில்லை. எனவே, வானதிக்கு ஏதேனும் அபாயம் நேர்ந்தால் இளையபிராட்டி அதனால் அளவில்லாத துன்பம் அடைவாள். ஆனால் அபாயம் எதற்காக நேர வேண்டும்? "சம்பந்தமில்லாத காரியங்களில் தலையிட்டுக் கொள்ளாதே! உன் காரியத்தைப் பார்த்துக்கொண்டு போ!" என்று ஆழ்வார்க்கடியான் கூறிய புத்திமதி நியாயமானதுதான். ஆயினும், வானதியின் பல்லக்கு சென்றதைக் காளாமுகர்கள் இருவர் மறைவான இடத்திலிருந்து பார்த்துக்கொண்டு நின்ற காட்சி திரும்பத் திரும்ப அவன் ஞாபகத்திற்கு வந்து கொண்டிருந்தது.

இதோ குடந்தை சோதிடரின் வீடு வந்துவிட்டது! எல்லாவற்றுக்கும் அவரைக் கேட்டுப் பார்க்கலாம்... அடடே! இத்தனை நேரம் அந்த விஷயம் மூளைக்கு எட்டவில்லையே? வானதிதேவியும் குடந்தை ஜோதிடர் வீட்டுக்குத்தான் வருகிறாள் போலும்! பழம் நழுவிப் பாலில் விழுந்தது! வானதி வந்து சேர்வதற்குள் நம்முடைய காரியத்தையும் நாம் பார்த்துக் கொள்ளலாம். இவ்வாறு எண்ணிச் சோதிடர் வீட்டு வாசலில் குதிரையை நிறுத்திவிட்டு வந்தியத்தேவன் அந்தச் சிறிய வீட்டுக்குள் நுழைந்தான்.

(தொடரும்)



# ஆனந்த நகரம்

தலையில் காந்தி குல்லா தரித்து ஸ்ரீ வி.என். ராஜன் சர்வ ஜாக்கிரதையுடன் எங்களை கவர்னர் மாளிகைக்கு அழைத்துக் கொண்டு போனார். அபாயம் சிறிதுமில்லாத பந்தோபஸ்தான சாலைகளின் வழியாகவே வண்டியை விட்டுக் கொண்டு போய்க் கவர்னர் மாளிகையின் முன் வாசலை அடைந்தார். ஸ்ரீ ராஜனின் காந்தி குல்லாவைக் கண்டதும் கதவு உடனே திறந்தது. பாஸைக் காட்டி விட்டு உள்ளே சென்றோம்.

ஆஹா! கவர்ன்மெண்ட் மாளிகை என்ற பெயர் உள்ளதெல்லாம் கவர்ன்மெண்ட் மாளிகை ஆகி விடுமா? கல்கத்தாவிலுள்ள கவர்ன்மெண்ட் மாளிகையே மாளிகைதான். அது எத்தனை நீளம்? எத்தனை அகலம்? எத்தனை உயரம்? என்ன விஸ்தாரம்! எவ்வளவு அறைகள்? எவ்வளவு விசாலமான ஹால்கள்? எத்தகைய வேலைப்பாடுகள்?

1799-ம் ஆண்டிலிருந்து சுமார் நூற்றைம்பது வருஷம் இந்தியாவின் தலைநகராயிருந்த கல்கத்தாவில் எத்தனையோ வைஸராய்கள் வாசம் செய்து, தர்பார் நடத்தி, இந்தியாவை அரசு புரிந்த மாளிகையல்லவா அது? அந்த மாபெரும் மாளிகையில் வாசம் செய்த கவர்னர் ஜெனரல்களின் ஜாபிதாவைக் கேளுங்கள்: – லார்ட் வெல்லெஸ்லி, லார்ட் கார்ன்வாலிஸ், ஸர் ஜார்ஜ் பார்லோ, லார்ட் ஹேஸ்டிங்ஸ், லார்ட் ஆம்ஹெர்ஸ்ட், லார்ட் வில்லியம் பெண்டிங், சர் சார்லஸ் மெட்காப், லார்ட் ஆக்லாண்டு, லார்ட் எல்லென்பரோ, லார்ட் லான்டோன், லார்ட் எல்ஜின், லார்ட் கர்ஸான், லார்ட் மிண்டோ,

---

**கல்கி கலெக்ஷன்**

---

**அமரர் கல்கி**

---

லார்ட் ஹார்டிஞ் ஆகிய எத்தனையோ வைஸராய் - கவர்னர் ஜெனரல்கள் அந்த மாளிகையில் வசித்தார்கள். லார்ட் ஹார்டிஞ்சின் காலத்தில் இந்தியாவின் தலை நகரம் புது டில்லிக்குப் போன பிறகு நாளது வரையில் வங்காளத்தில் பிரிட்டிஷ் கவர்னர்கள் அம்மாளிகையில் வசித்தார்கள்.

அப்பேர்ப்பட்ட பிரம்மாண்ட மாளிகைக்குள்ளே நாங்கள் ஆகஸ்ட் 14உ நள்ளிரவில் தங்கு தடையின்றிப் பிரவேசித்து, தட்தட் என்று மச்சுப் படிகளில் ஏறிச் சென்றோம். சுவர்களிலே தொங்கிக் கொண்டிருந்த கிளைவ், வாரன் ஹேஸ்டிங்ஸ், காரன்வாலிஸ், வெல்லெஸ்லி முதலிய ஏகாதிபத்திய ஸ்தாபகர்கள் எங்களைப் பார்த்துத் திருதிருவென்று விழித்தார்கள். ஆள் உயரப் படங்களில் மேற்படி பிரபுக்கள் தத்ரூபமாக உயிருள்ளவர்களைப் போலவே தோன்றினார்கள். அவர்களில் சிலர் கத்தியை உருவும் நிலையில் நின்றார்கள். தொப்பியில்லாமல், பூட்ஸ் இல்லாமல், சட்டையும் அங்க வஸ்திரமும் அணிந்த இந்தக் கறுப்பு மனிதர்கள் இந்த மாளிகைக்குள்ளே எப்படிப் பிரவேசித்தார்கள் என்று மேற்படி ஏகாதிபத்தியப் பிரபுக்களுக்கெல்லாம் ஒரே வியப்பும் திகைப்புமாகவே யிருந்திருக்குமல்லவா? அவர்கள் எங்களைப் பார்த்து விழித்த விழிப்பு சில சமயம் பயங்கரமாயிருந்தது; சில சமயம் பரிதாபமாயிருந்தது. நமது சின்ன அண்ணாமலை லார்டு காரன்வாலிஸைப் பார்த்து, "அட சட்! இப்படி அநாகரிகமாய் விழித்துப் பார்க்காதே! முகத்தைத் திருப்பிக் கொள்! இல்லாவிட்டால் நடையைக் கட்டு!'' என்றார். காரன்வாலிஸ் காதிலே அது விழவில்லை. எப்படி விழும்? அதற்குள்ளே, இன்னும் மிக அதிசயமான காட்சியை யல்லவா கிளைவ், காரன்வாலிஸ், ஹேஸ்டிங்ஸ் வகையறா பிரபுக்கள் பார்க்க வேண்டியதாயிற்று?

வைஸராய்களும் கவர்னர்களும் வீற்றிருந்த சிம்மாசனத்தில் அமருவதற்காகக் கதர் வேஷ்டியும், கதர் ஜிப்பாவும், குறுக்கில் மடித்த கதர் அங்கவஸ்திரமும் தரித்த மெலிந்த மனிதர் ஒருவர் முன்னும் பின்னும் ('ஏய்ட்டி காம்ப்' என்னும்) கம்பீரத் தோற்றமுள்ள அதிகாரிகள் தொடர வந்து கொண்டிருந்தார். அந்த அதிசயக் காட்சியைச் சுவரில் தொங்கிய பிரிட்டிஷ் பிரபுக்களும், துரைமார்களும் கண் விழிகள் வெளியிலே வந்து விடுமோ என்னும்படியாக விழித்துப் பார்க்கலானார்கள்.

• • •

இதற்குள்ளாக நாங்கள் முக்கிய நிகழ்ச்சி நடக்கப் போகும் ஹாலுக்குப் போய் விட்டோம். மேற்கு வங்காளத்தின் பத்து மந்திரிகள், நீதிபதி மித்தர், கல்கத்தாவின் ஷெரிப், மேயர், பிரபல பத்திரிகைக்காரர்கள் உள்ளிட்ட சுமார் நூறு பேர் வந்திருந்தார்கள். 'டாண்' என்று மணி ஒன்று அடித்ததும் அனைவரும் எழுந்து நின்றார்கள். ராஜாஜி நிதானமாக நடந்து வந்து சிம்மாசனத்தின் எதிரில் நின்றார். நீதிபதி மித்தர் அவர் முன்னால் வந்து, "கவர்னர் பதவி வகிக்கத் தங்களுக்குச் சம்மதமா?'' என்று கேட்டார். எனக்கும் அண்ணாமலைக்கும் மூச்சு நின்று போய் விட்டது. ராஜாஜி எங்கே "சம்மதமில்லை!" என்று சொல்லி விடுவாரோ என்று பீதியடைந்தோம். நல்லவேளையாக "சம்மதம்" என்று ராஜாஜி பதில் சொன்னார். நீதிபதி மித்தர் அச்சிட்ட விசுவாசப் பிரமாணத்தை எடுத்துப் படிக்க, ராஜாஜி பின்னோடு சொல்லிக் கொண்டு வந்தார். கடைசியில் கையெழுத்தும் போட்டார். இது நடந்து வருகையில் "நூறு காமிராக்கள் 'கிளிக்' 'கிளிக்' என்று சப்தித்தன. சினிமா காமிராக்கள் சரசரவென்று ஒலித்தன. படம் பிடிப்பதற்கு வேண்டிய பெரிய விளக்குகளை ஏற்றுவதும் அணைப்பதுமாயிருந்தார்கள். ராஜாஜி கையெழுத்துப் போட்டு முடிந்ததும் சபையில் ஒருகணம் நிசப்தம் நிலவியது. "இனிமேல் நாம் மூச்சு விடலாம்!" என்றார் அண்ணாமலை. நான் ஒரு பெரிய நெடுமூச்சு விட்டு, "வங்காளம் அதிர்ஷ்டம் செய்ததுதான்!'' என்றேன்.

கவர்னர் பதவி ஏற்பு வைபவம் சுமார் இரண்டு மணிக்கு முடிவுற்றதும், நேரமானாலும் பாதகமில்லையென்று தமிழ் நாட்டின் சார்பாக ராஜாஜிக்கு வாழ்த்துக் கூறுவதற்காகக் கவர்னர் மாளிகையில்



* ராஜாஜிக்கு வாழ்த்து...

அவர் இருந்த பகுதியைத் தேடிப் போனோம். (வெகு தூரத்துக்கு வெகு தூரம் விஸ்தாரமாயிருந்த அந்த மாளிகையில், ஒவ்வொன்றும் ஒரு பெரிய வீட்டின் விசாலமுள்ள பல ஹால்களும் அறுநூறு அறைகளும் உள்ள அந்த அரண்மனையில், ராஜாஜி இரண்டரை அறையில் தமது ஜாகையை வைத்துக் கொண்டிருந்தார் என்பதை . இங்கே குறிப்பிட்டு வைக்கிறேன்.)

நாங்கள் போகும்போது வழியில் காணப்பட்ட டபேதார்கள், சேவகர்கள் முதலியோர் கைகூப்பி நமஸ்கரித்ததைப் பார்த்ததும் ஸ்ரீ.வி.என். ராஜனுக்கு ஒரே வியப்பாய்ப் போய்விட்டது. "இங்கிலீஷ் முறையில் ஸல்யூட் செய்யாமல் இந்திய முறையில் இவர்கள் கும்பிடு போடுவதைக் கண்டேனே; என் வாழ்நாளில் இது ஒன்றே போதும்!" என்றார்.

மச்சுப்படி ஏறி ராஜாஜியின் அறைக்குச் சென்றதும் அங்கு ஏற்கெனவே பிரதம மந்திரி டாக்டர் பி.சி. கோஷ் வந்து புது கவர்னருடன் பேசிக் கொண்டிருந்ததை அறிந்தோம். அதனால் பாதகமில்லை என்று உள்ளே சென்றோம். அப்போது ஒரு விஷயம் நன்றாய்த் தெரிந்தது. வங்காளத்தில் மற்ற யாருடைய அபிப்பிராயம் எப்படியிருந்தபோதிலும் பிரதம மந்திரி டாக்டர் கோஷுக்கு ராஜாஜியிடம் அசாத்திய மரியாதை என்பதைக் கண்டோம். அவருக்கு எங்களை ராஜாஜி அறிமுகம் செய்து வைத்தபோது, "ஓ! எனக்குத் தெரியுமே? இவர்களுக்குத் தானே நான் இன்றைய வைபவத்துக்கு டிக்கட் கொடுத்தேன்?" என்றார்.

இதன் விவரம் என்னவென்றால்? அன்றைய கவர்னர் பதவி வைபவத்துக்கு வருவதற்கு மிகச் சிலருக்கே அனுமதிச் சீட்டு வழங்கப்பட்டிருந்தது. சுமார் நூறு பேருக்கு மேலிராது. கல்கத்தாவில் அப்போது குடி கொண்டிருந்த நிலைமையையும், எதிர்பார்க்கப்பட்ட நிலைமையையும் முன்னிட்டுப் பிரதம மந்திரி டாக்டர் கோஷ் டிக்கட் கொடுக்கும் பொறுப்பைத் தாமே வைத்துக் கொண்டிருந்தார். எனவே எங்கள் பெயர்களும் பிரதம மந்திரி வரையில் போக வேண்டியிருந்தது.

சென்னையிலிருந்து இன்ன காரியத்துக்காக வந்தவர்கள் என்பதையும், ராஜாஜிக்குத் தெரிந்தவர்கள் என்பதையும் வற்புறுத்திச் சொல்லியே டிக்கட் வாங்க வேண்டியிருந்தது. எப்படியோ, டிக்கட் கொடுத்தாரே! அவர் நன்றாயிருக்கட்டும்! அவர் ஆட்சியில் வங்காளம் சுபிட்சமாயிருக்கட்டும்!

• • •

ராஜாஜி வேண்டா விட்டாலும் அவருக்கு எங்களுடைய வாழ்த்தைக் கூறி விட்டு, ஸ்ரீமதி சி.எஸ். ரங்கசாமி அன்றிரவு 12 மணிக்கு விநாயகருக்குப் பூஜை செய்து 108 தேங்காய் உடைத்து "இந்தியாவின் சுதந்தரம் விக்கினம் இல்லாமல் நடக்க வேண்டும்" என்று வேண்டிக்கொண்டு அனுப்பிய பிரஸாதங்களையும் கொடுத்து விட்டுக் கிளம்பினோம்.

இரவு இரண்டரை மணிக்குக் கல்கத்தா நகரம் தூங்கவில்லை யென்பதையும் ஒரே கோலாகலமா யிருப்பதையும் கண்டோம். எங்கே பார்த்தாலும் ஜே கோஷம்! "வந்தே மாதரம்" "ஜே ஹிந்த்" என்று இரு முழக்கங்களும் காது செவிடு படச் செய்தன. இந்த இரண்டு கோஷங்களுடன் இன்னொரு மூன்றாவது கோஷமும் கிளம்பிற்று. முதலில் அது விவரமாகத் தெரியவில்லை. அப்புறம் கவனித்துக் கேட்டதில் "ஹிந்து முஸ்லிம் ஏக் ஹோ!" என்பதுதான் அந்த மூன்றாவது கோஷம் என்று தெரிந்தது. ஆம்; அங்கங்கே ஹிந்துக்களும் முஸ்லிம்களும் கும்பல் கும்பலாக நின்று மேற்கண்டவாறு கோஷமிட்டார்கள். கூட்டத்தின் நெருக்கம் காரணமாக எங்கள் வண்டி நின்றபோதெல்லாம் ஜனங்கள் எங்களையும் அப்படிக் கோஷமிடச் சொன்னார்கள். "இது என்ன அற்புதம்? என்னால் நம்பவே முடியவில்லையே" என்றார் ஸ்ரீ வி.என். ராஜன். எங்களுக்கும் நம்ப முடியாமல்தானிருந்தது. "இங்கே இப்படி இருக்கிறது. மற்ற இடங்களில் குத்தும் கொலையும் நடந்து கொண்டிருக்கலாம்!" என்றும் எண்ணினோம். மறுநாள் காலையில் எழுந்து 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையைப் பார்த்த பிறகுதான், முதல் நாளிரவு நாங்கள் கண்ட காட்சிகள் எல்லாம் உண்மையே என்று நம்ப வேண்டியதாயிற்று. அவை நம்ப முடியாத காட்சிகள்தான் என்பதும் மேற்படி பத்திரிகை ரிப்போர்ட்டிலிருந்து தெரிய வந்தது.

இந்த அற்புதத்திற்கு மகாத்மா காந்திதான் காரணம், மகாத்மா ஒருவரே காரணம் என்று எல்லாரும் சொல்லியிருக்கிறார்கள்; ராஜாஜியும் சொல்லியிருக்கிறார். ஆயினும் மகாத்மாவின் அற்புத சக்தியோடு, ராஜாஜி கல்கத்தாவில் கால் வைத்த வேளையின் மகிமைக்கும் அதில் ஒரு பங்கைக் கொடுக்க வேண்டுமென்று நான் நினைத்தேன். 13உ கூடக் கல்கத்தாவில் ஏகக் கலாட்டாவாகத்தான் இருந்தது. 14உ மத்தியானம் ராஜாஜி விமானத்தில் வந்து இறங்கினார். பழைய கவர்னர் பர்ரோஸ், பழைய பிரதம மந்திரி டாக்டர் ஷுஹரவர்த்தி, புதிய பிரதம மந்திரி டாக்டர் பி.சி. கோஷ் ஆகியவர்கள் விமான கூடத்துக்குச் சென்று ராஜாஜியை அழைத்து வந்தார்கள்.

அதன் பிறகுதான் கல்கத்தா முஸ்லிம் லீக், மறுநாள் 15உ சுதந்தரக் கொண்டாட்டத்தில் முஸ்லிம்களும் கலந்து கொள்ள வேண்டுமென்று தீர்மானித்தது.

அவ்வளவுதான்! முஸ்லிம் லீக் கட்டுப்பாட்டின் மகிமையை என்னவென்று சொல்வது? அன்று இரவுக்கிரவே பத்து லட்சம் முஸ்லிம்கள் வசித்த வீதிகள் எல்லாம் தேசியக் கொடிகளினால் அலங்கரிக்கப்பட்டன. முஸ்லிம்கள் கூட்டம் கூட்டமாயும் லாரிகள் - மோட்டார்களில் ஏறிக் கொண்டும் "ஜே ஹிந்த்!" கோஷம் போட்டுக் கொண்டு கிளம்பினார்கள். இதைப் பார்த்ததும், உணர்ச்சி வேகம் உடைய வங்காளி ஹிந்துக்களின் மனதும் உடனே மாறி விட்டது. இரு தரப்பிலும் "ஹிந்து - முஸ்லிம் ஏக் ஹோ!" என்ற கோஷம் ஏக காலத்தில் கிளம்பிற்று. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவரையொருவர் கட்டிக் கொள்ளவும் கூத்தாடவும் ஆரம்பித்து விட்டார்கள்!

மறுநாள் பகலும் இரவும் கல்கத்தாவே அல்லோல கல்லோலப்பட்டது.

15உ இரவு பாரா பஜாரில் நாங்கள் ஏறியிருந்த மோட்டார் ஒரு மைல் தூரம் போக மூன்று மணி நேரம் ஆயிற்று.

வழியில் நூறு இடங்களில் முஸ்லிம்கள் எங்கள் வண்டியை நிறுத்தி, மோட்டாரின் கதவைப் பலாத்காரமாகத் திறந்து, எங்கள் மேல் பன்னீரை ஊற்றினார்கள்!

சில நாளைக்கு முன்பு ஹிந்துக்களின் மீது அக்கினித் திராவகத்தை ஊற்றிய கையினால்தான் இப்போது நாங்கள் சொட்ட நனையும்படி பன்னீரை ஊற்றினார்கள்.

அடாடா! அதையெல்லாம் இப்போது வர்ணித்து என்ன பயன்? எல்லாம் இரண்டு வாரத்து இன்பக் கனவாகவல்லவா போய்விட்டது?

இப்போது ஏற்பட்டிருக்கும் தொல்லைகளுக்கெல்லாம் காரணம் வங்காளி ஹிந்துக்களும் வங்க முஸ்லிம்களும் அல்ல; வெளி மாகாணங்களிலிருந்து வந்தவர்கள்தான் வேண்டுமென்று கலகங்களைக் கிளப்புகிறார்கள் என்று சிலர் சொல்லுவதை எனக்கு நம்பத் தோன்றுகிறது! ஆஹா! இதுவே உண்மையாயிருக்கக் கூடாதா?

• • •

மறுநாள் காலையில் மறுபடியும் கவர்னர் மாளிகைக்குச் சென்றோம். எட்டு மணிக்கு நடைபெறவிருந்த கொடியேற்று விழாவைப் பார்ப்பதற்காகத்தான். இந்த விழாவுக்குச் சுமார் முந்நூறு பேர் உள்ளே வர அனுமதிக்கப்பட்டிருந்தார்கள்.

குறிப்பிட்ட நேரத்தில் கவர்னர் ராஜாஜி வந்து சேர்ந்தார். அணி வகுத்து நின்ற படைகளைப் பார்வையிட்டார். கொடியை உயர்த்திப் பறக்கவிட்டார். உடனே இருபத்தியொரு குண்டுகள் போடப்பட்டன. தேசிய கீதங்கள் பாடப்பட்டன.

இந்த இரண்டும் நடந்து கொண்டிருந்த போதே, சமுத்திரம் பொங்கி வருவது போல் ஓர் இரைச்சல் கேட்டது. இரைச்சல் கேட்ட திசையை நோக்கினேன். பூட்டுப் போடாமல் சும்மா சாத்தியிருந்த கேட் கதவுகளைத் தள்ளித் திறந்து கொண்டு ஜனங்கள் திமுதிமுவென்று உள்ளே வந்து கொண்டிருந்தார்கள். இத்தனை நாளாகத் தேடிக் கொண்டிருந்த சுதந்தரத்தை அவசரமாய்க் கைப்பற்றுவதற்காகவே அவர்கள் விரைந்து ஓடி வருவதாகத் தோன்றியது!

அணி வகுத்து நின்ற படைவீரர்கள் மேற்படி காட்சியைக் கண்டு, திகைத்தார்கள். ராஜாஜிக்கு இருபுறமும் நின்ற போலீஸ் அதிகாரிகள் பிரமித்தார்கள்.

உள்ளே ஓடி வருகிறவர்களைத் தடுத்து வெளியில் துரத்த வேண்டும் என்னும் எண்ணம் அவர்களில் பலருக்கும் அப்போது தோன்றியிருக்கக் கூடும். ஆனால் அப்படி ஏதாவது செய்திருந்தால் அதன் பலன் விபரீதமாக முடிந்திருக்கும்.


• கல்கத்தா ராமகிருஷ்ண மடம்

ராஜாஜி ஜனங்களைத் தடுக்க வேண்டாம் என்று உத்தரவு போட்டார்.

கீதம் முடிந்ததும் ராஜாஜி மாளிகைக்குச் சென்றார். அவரைத் தொடர்ந்து ஜனங்களும் சென்றார்கள்.

முதலில் ஜனங்கள் நூற்றுக்கணக்கில் வந்தார்கள்; அப்புறம் ஆயிரக்கணக்கில் வந்தார்கள்; பிறகு பதினாயிரக் கணக்காயிற்று. கடைசியில், சுமார் இரண்டு லட்சம் ஜனங்கள் கவர்னர் மாளிகைக் காம்பவுண்டில் குவிந்து

விட்டார்கள்.

ஒரு சிலர் துணிச்சலுடன் கவர்னர் மாளிகைக்குள்ளே பிரவேசித்தார்கள். அவ்வளவுதான்! வெளியில் நின்ற அத்தனை பேரும் மாளிகைக்குள்ளே புகத் தொடங்கி விட்டார்கள். சிலர் ஜன்னல்களின் வழியாக ஏறி உள்ளே குதித்தார்கள்.

மாளிகையின் கீழ்ப் பகுதி, மேல் மாடி, அதற்கு மேல் மாடி - எல்லா இடங்களிலும் ஜனங்கள் நிறைந்து விட்டார்கள்.

பூச் சட்டிகள் உடைந்தன; கண்ணாடிகள் நொறுங்கின; நாற்காலிகள் உருண்டன; சோபாக்கள் புரண்டன.

சீதை உள்ள இடத்தைக் கண்டு பிடித்து விட்டு உற்சாகத்துடன் திரும்பிய வானரங்கள் மதுவனத்தில் புகுந்த போது செய்த காரியங்களைக் கல்கத்தா ஜனங்கள் கவர்னர் மாளிகையில் செய்தார்கள்.

மனுஷர்களோடு மனுஷர்கள் முட்டிக் கொண்டார்கள். சிலர் தூண்களைக் கட்டிக் கொண்டார்கள். புஷ்ப ஜாடிகளைப் போட்டு உடைத்தார்கள். சோபாக்களில் புரண்டு உருண்டார்கள். மேஜைகளின் மேல் ஏறி நின்று குதித்தார்கள். எதிரில் கண்ணாடி இருப்பது தெரியாமல் நடந்து கண்ணாடிகளைச் சுக்கு நூறாக்கினார்கள்.

இப்படியெல்லாம் அமளி துமளிப் பட்டுக் கொண்டிருக்கையில் கவர்னர் ராஜாஜி 9 மணிக்குச் சட்டசபைக்குப் போய்ப் பிரசங்கம் செய்ய வேண்டியிருந்தது.

எப்படி வெளியே போகிறது! வாசலிலோ எள் போட்டால் தரையில் விழாத கூட்டம். மோட்டார் வண்டி வந்து நின்றவுடனே கூட்டம் அதிகமாயிற்று.

இவ்வளவு ஜனங்களுக்கு மத்தியில் காரில் ஏறிக்கொண்டு விரைந்து போவதை ராஜாஜி விரும்பவில்லை. எனவே, காரை தூரமாகக் கொண்டு போய் நிறுத்தச் சொல்லி விட்டார். கார் போன சற்று நேரத்துக்கெல்லாம் ராஜாஜி வந்தார். "ராஜாஜிக்கு ஜே!" என்ற கோஷம் கிளம்பியது. எல்லாரையும் கையமர்த்தி உட்கார வைத்து விட்டு, ராஜாஜி ஜனக் கூட்டத்தினிடையே புகுந்து மளமள வென்று விரைந்து சென்றார். கார் நின்ற இடம் வரையில், அவர் பின்னால் ஜனங்கள் ஓடினார்கள். எனினும் ராஜாஜி விரைந்து நடந்து சென்று, அங்கே காரில் ஏறிக் கொண்டு போய்விட்டார்.

ஆனால் நாங்கள் அவ்விதம் கூட்டத்தில் புகுந்துபோக முடியாமல் பின் தங்கி விட்டோம். கொஞ்சம் கூட்டத்தில் கலைசல் ஏற்படட்டும் என்று அரை மணி காத்திருந்து விட்டுப் புறப்பட்டோம். நாங்கள் சட்டசபை மண்டபம் போய்ச் சேர்ந்தபோது அங்கேயும் ஜனங்கள் ஏராளமாய்ப் புகுந்து விட்டார்கள் என்று தெரிந்தது. மண்டபத்துக்குள்ளே போக முடியாத காரணத்தினால் மேல் மச்சில் ஏறினோம்.

நல்லவேளையாக அங்கே ஒரு நல்ல ஹோட்டல் இருந்தது. ஹோட்டலில் ரஸ குல்லாவும் இருந்தது. தலைக்கு மூன்று ரஸ குல்லா சாப்பிட்டு இந்தியா சுதந்தரமடைந்த தினத்தைக் கொண்டாடத் தீர் மானித்தோம்.

அடாடா! வங்காளம் என்றால் வங்காளந்தான். கல்கத்தா என்றால் கல்கத்தாதான். ரஸகுல்லா என்றாலும் ரஸ குல்லாதான்!

வங்காளிகளைப் போல் தேச பக்தர்களும் கிடையாது. அவர்களை போல் ரஸிகர்களும் கிடையாது. ரஸகுல்லாவைப் போல் நயமான இனிப்புப் பண்டமும் கிடையாது.

சென்னை மாகாணத்தில் ஸ்ரீ ராம கிருஷ்ண - விவேகானந்தர் கொள்கைகள் இவ்வளவு அதிகம் பரவி இத்தனை மடங்கள் ஏற்பட்டிருப்பதற்கு ஒரு முக்கிய காரணம் ரஸகுல்லாதான் என்று நினைக்கிறேன்.

இந்த இனிப்பான கட்டத்திலேயே கட்டுரையை நிறுத்தி விட்டால் என்ன? ரொம்ப சரி, நிறுத்த வேண்டியதுதான். கல்கத்தாவில் அமைதி நிலவும் செய்தி வந்த பிறகு மற்ற விஷயங்களைப் பார்த்துக் கொள்ளலாம்.

வந்தே மாதரம்! ஜே ஹிந்த்!!

**(ஆகஸ்ட் 31, 1947, செப்டெம்பர் 7, 1947 கல்கி இதழ்களிலிருந்து)**

"கம்ப்யூட்டர் என்றால் என்ன? டி.சி.பி. என்பதன் விளக்கம்? சாப்ட் வேரில் லேட்டஸ்ட் டெக்னாலஜி? இண்டர் நெட்டில் ராணுவத் தகவல் பரிமாற்றம், மக்களின் தகவல் பரிமாற்றத் திலிருந்து எவ்வாறு வேறுபடுகிறது? அடுத்த நூற்றாண்டில் இணையத்தின் வளர்ச்சி எந்த இலக்கை அடையும்? அடைய வேண்டும்?" - இது போல் கம்ப்யூட்டர் தொடர்பான எந்தக் கேள்வி கேட்டாலும் பளிச்சென்று விளக்கமளிக் கிறான் பதினான்கே வயதான கோவிந்த் ஜாஜு.

'மைக்ரோ, சாப்ட்வேர் என்ஜினியரான முதல் ஆசியச் சிறுவன் ஜாஜு, தனது பதினோராம் வயதில் பத்தாம் வகுப்பையும், பதிமூன்றாம் வயதில் ப்ளஸ்டு படிப்பை யும் முடித்துவிட்டு தற்போது ராஜஸ்தான் பல்கலைக் கழகத்துக்குட்பட்ட அரசு கல்லூரியில் பி.காம் இரண்டாமாண்டு படித்து வருகிறான்!

"இங்கே ப்ளஸ்டு எழுது வதற்கே வயது நிர்ணயம் இருக்க இவனுக்கு மட்டும் இது சாத்ய மானது எப்படி?" ஜாஜுவின் தாய் விமலா ஜாஜுவிடம் கேட்டோம்.

"அது ஒரு எதேச்சையான நிகழ்வு. ஜாஜு, எல்.கே.ஜி. முதல் ஐந்தாம் வகுப்பு வரை கோவை நேரு வித்யாலயத்தில்தான் படித்தான். நான் சென்னையில் இருந்ததால் இதுவே எனக்கு வசதியாக இருந்தது. பிறகு என் கணவர், பிஸினஸ் காரணமாக ஜெய்ப்பூருக்கே அழைக்க, நாங்களிரு வரும் அங்கே போக வேண்டிய கட்டாயம். ஜெய்ப்பூரில் ஜாஜுவைப் பள்ளியில் சேர்க்க பல லட்சம் ரூபாய் நன்கொடை கேட்கவே, நாங்கள் மிரண்டு போனோம். என் கணவர் இத்தனை பணம் கொடுத்துத்தான் பள்ளிக்குச் சென்று படிக்க வேண்டுமா? தேவை யில்லை. இவன் வீட்டிலிருந்தே படித்துக் கொள்ளட்டும் என்று சொல்லிவிட்டார். அதனால் அவனுக்காக வீட்டிலேயே லைப்ரரி, கம்ப்யூட்டர், ஆய்வுக்கூடம் என்று சகல வசதிகளையும் செய்து கொடுத்தார். ஆனாலும் மற்றவர்களைப் போல் பள்ளிக்குச் சென்று படிக்க முடியவில்லையே என்கிற ஏக்கம் ஜாஜுவுக்கு.

"அப்போதுதான் டீ.வியில் ஒரு செய்தி வந்தது. தன் பதினேழாவது வயதில் பாலமுரளி அம்பார்டி டாக்டர் ஆனதும், அதற்காக அமெரிக்காவில் பட்டம் வழங்கிய நிகழ்ச்சியும் ஒளிபரப்பானது. அதைப் பார்த்த நான், சோர்ந்திருந்த ஜாஜுவிடம், 'நீ ஏன் இப்படி மிகச் சிறிய வயதில் சாதிக்கக் கூடாது?



• தாய், தாத்தாவுடன் ஜாஜு

# பில்கேட்ஸ்

நமக்கும் சாமி வரம் இருக்கு. வேண்டிய பொருள்களை வீட்டிலேயே வாங்கிக் கொள்ள வசதியும் இருக்கு!' என்றேன். நான் சொன்னதை அப்படியே கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டான்."

வீட்டிலிருந்தபடி ப்ளஸ்டு படிக்கும் போதே கம்ப்யூட்டரும் படித்து வந்திருக் கிறான். அதிலும் எம்.சி.எஸ்ஸில் ரொம்ப ஆர்வமாம். அதற்கான என்ஜினியரிங் தேர்வை வீட்டிலிருந்தே எழுதும் வரை

அந்தப் பரீட்சையில் 'மிகப் பொடியன்' தான்தான் என்பதே தெரியாதாம். அதில் இவன் 87.2 விழுக்காடு மதிப் பெண் பெற்றுப் பட்டம் பெற்றதும் பலருக்கும் ஆச்சர்யம். அதைப் பார்த்து அதிசயத்துப் போன மைக்ரோ ஸாஃப்ட் அதிபர் 'பில்கேட்ஸ்' வலிய வந்து, 'ஆட்டோகிராப்' (யாருக்குமே சுலபமாய் ஆட்டோகிராப் போட மாட்டாராம்) போட்டுத் தந்து இவனைத் தட்டிக் கொடுத்துப் பாராட்டினாராம்.

கோவையிலிருந்து ஜெய்ப்பூர் போகாதிருந்திருந்தால், அங்கும் அவர்கள் நன்கொடை கேட்டு இம்சிக்காது இருந்திருந்தால் தனக்கு இந்த சாதனை சாத்யமேயில்லை என்கிறான் பாலகன் கோவிந்த் ஜாஜு.

மேற்கொண்டு என்ன செய்வதாக உத்தேசம்?

"கம்ப்யூட்டர் படிப்பிற்காக மேலை நாடுகளுக்குச் சென்று இன்னும் பல நுணுக்கங்களைக் கற்றுத் திரும்பி வந்து தாய்நாட்டிற்குச் சேவை செய்ய வேண்டும்.. அதுதான் இப்போதைக்கு. ஏனென்றால் நான் கற்றது கைமண்ணளவு கூட இல்லை!" என சுருங்கச் சொல்லிச் சிரிக்கிறான் இந்த மாணவச் சாதனையாளன்!



• ஜாஜுவிடம் கேள்வி கேட்க வந்த மாணவ - மாணவிகள்

# பாராட்டிய கம்ப்யூட்டர் எஞ்ஜினியர்!

**ச**ரி, இந்த மாதிரி சாதனையை நம் தமிழ்நாட்டு மாணவர்கள் செய்ய முடியாதா என்ன? நமக்குள் தோன்றிய கேள்வியை, ஜாஜுவை கோவைக்கு அழைத்து வந்து பாராட்டிய நேரு மகா வித்யாலயக் கல்லூரிச் செயலாளர் மோகன் சந்த்திடம் கேட்டோம்.

"முடியாமல் என்ன? முடியும். இங்கேயும் நிறைய கோவிந்த் ஜாஜுகள் இருக்கிறார்கள். அதற்கான வாய்ப்புகளை இங்கே அரசு கொடுப்பதில்லை. நம் தமிழ்நாடு தவிர்த்து வேறு எந்த மாநிலத்திலும், எந்த வயதிலும் எந்தத் தேர்வும் எழுதலாம்; பட்டம் பெறலாம். இங்கே மட்டும்தான் பதினெட்டு வயதாக வேண்டியிருக்கிறது. என்ன செய்வது?" என்றவர், "இருந்தாலும் ஜாஜுவைப் பார்த்து, இங்குள்ள மாணவர்களும் உற்சாகமும் ஊக்கமும் பெற வேண்டும் என்பதற்காகத்தான் அவனை கோவைக்கு அழைத்து வந்து பாராட்டினோம். ஏதோ எங்களால் முடிந்தது!" என்றார்.

சந்திப்பு, படங்கள் : **கா.சு. வேலாயுதன்**

***அவன் மாநிறம்தான். ஆனால் அவளைக் கறுப்பு என்று நிரா கரித்தான்.***

***அவள் சிவப்பழகு க்ரீம் உப யோகிக்கத் தொடங்கினாள்.***

***ஆறு வாரங்கள். சிவப்பாகி விட் டாள்.***

***'இப்போ எனக்கு அவளைப் பிடிச்சிருக்கு!' என்றான் அவன் குதூகலமாய்.***

***'ஆனா இப்போ எனக்கு அவ னைப் பிடிக்கலை. அவன் கறுப்பு' என்றாள் அவள்.***

***அவன் சிவப்பழகு க்ரீம் உப யோகிக்கத் தொடங்கினான்.***

***– எழுதியவர் : எம். நர்மதா***

## ஆர். சூடாமணி



**வா**ர இதழிலிருந்து கண்களை உயர்த்தினான் கார்த்தி. எதிரே எம். நர்மதா நின்றிருந்தாள். கைகளில் பூ டிசைன் போட்ட மர ட்ரே. அதில் தம்ளர்களில் காப்பி. பெண் பார்க்க வந்த பையன் கோஷ்டிக்குக் காப்பி கொண்டு வருகிற, அவர்கள் பார்க்க வந்த பெண். நீலநிற சூரிதார் உடைக்கு மேல் பிரகாச முகம், உன்னிப்பான கண்கள், லேசாய் மின்னவிடும் புன்னகை.

கார்த்தி பான்ட்டும் ஸ்லாக்கும் பாக்கெட்டிலிருந்து எட்டிப் பார்க்கும் வெயில் கண்ணாடியுமாய் கால் மேல் கால் போட்டு அலட்சியமாய் அமர்ந்திருந்தான். வாளிப்பான உடல் வாகுக்கும் சீரான முக உறுப்புகளுக்கும் கம்பெனி உத்தியோகத்தின் இருபதாயிர ஊதியம் ஒரு கூடுதல் பொலிவு சேர்த்திருந்தது.

அவனும் அவன் தாயாரும் மட்டும்தான் வந்திருந்தார்கள். அவன் தகப்பனாருக்கு இப்போதுதான் காய்ச்சல் குணமாகியிருந்ததால் உடல் பலவீனம் வர விடவில்லை என்றும் ஒரே பெண் - இவனுக்கு மூத்தவள் - திருவான்மியூரிலிருந்து இவர்கள் இருக்கும் எழும்பூருக்கு இன்று வர வசதிப்படவில்லை என்றும் அவன் தாய் நர்மதாவின் பெற்றோருக்கு விளக்கிக் கொண்டிருந்தாள். அவனும் நர்மதாவும் சிறிது நேரம் நாட்டின் வட எல்லையில் நடைபெறும் சண்டை பற்றிப் பேசிக் கொண்டிருந்தபின் (அவள் அது பற்றிப் பேசுவதே அவனுக்குச் சற்று ஆச்சரியமாய் இருந்தது) விருந்தாளிகளுக்கு காப்பி கொண்டு வர அவள் எழுந்து உள்ளே போனாள். அவன் மேஜை மேல் ஃபேன் காற்றில் பக்கங்களை விசிறியாய்ப் படபடக்க விட்டுக் கொண்டிருந்த தமிழ் வாராந்தரியை எடுத்துப் புரட்டினான். அந்தக் கதை கண்ணில் பட்டது. சின்னதாயிருக்கவே படித்தான்.

இப்போது எதிரே புன்னகையோடும் காப்பியோடும் அவள். பார்வையை நிமிர்த்தியவன், "இது உங்க கதையா?" என்றான்.

''ஆமாம். இந்தப் பத்திரிகையில் வாரா வாரம் 'குட்டிக்

கதை'ன்னு ஒண்ணு போடறாங்க. அந்தப் பகுதிக்கு ஒரு கதை அனுப்பியிருந்தேன். இந்த வாரம் வெளியாகியிருக்கு.''

''ம்.''

''கதை பிடிச்சிருக்கா?''

நர்மதா கதை எழுதுவதுண்டு என்று முதலில் தரகர் சொல்லிக் கேட்டபோது சற்றுத் தயக்கமாய்த்தானிருந்தது. கதை எழுதுகிறவள் என்றால் தன்னைப் பெரிய அறிவுஜீவி என்று நினைத்துக் கொண்டு கணவனோடு சதா விவாதம் செய்பவளாய் இருக்கலாம். கார்த்திக்கு இந்த 'சமத்துவம்' பேசும் மாடர்ன் பெண்களென்றால் அலர்ஜி. அதனால்தான் வேலைக்குப் போகாத பெண்ணை மணக்க விரும்பினான். வேலை பார்க்கும் பெண் தலைக் கனம் உள்ளவளாய் இருப்பாள். நர்மதா எம்.ஏ. முடித்துவிட்டு மேலே படிக்காமல் ஏதோ மாதர் நல அமைப்பில் வால்ன்ட்டியராய் மட்டும் அவ்வப்போது பணியாற்றுகிறாளாமே தவிர வேலைக்கு என்று எந்த ஆபீசுக்கும் போகவில்லை. எனவே, ''நானும்தான் சம்பாதிக்கிறேன்'' என்று ஏட்டிக்குப் போட்டி பேச முடியாது.

# தரிசனம்



கதை எழுதுகிறாள்... ப்ச், இந்தப் பெண்கள் என்ன எழுதப் போகிறார்கள்! மனைவி வைர ஜிமிக்கி கேட்பாள். கணவன் வாங்கித் தருவதில்லை. அவன் ஊதாரிச் செலவு செய்பவனென்றும் மனைவி விஷயத்தில் மட்டும் கஞ்சனாக இருக்கிறானென்றும் அவள்

பொருமுவான். கடைசியில் தீபாவளிக்கு அவளுக்கு வைர ஜிமிக்கி பரிசளிப்பான் கணவன். அவன் ஊதாரியே இல்லை. மனைவிக்கு ஜிமிக்கி வாங்கத்தான் இத்தனை காலமும் ரகசியமாய் பணம் சேர்த்து வந்தான்! "என்னை மன்னிச்சிடுங்க" என்பாள் மனைவி. சுபம் சுபம். அல்லது, இளம் காதலர்கள். காதலி ஏழை. கடைசியில் காதலனின் வளமான எதிர்காலம் கருதி ஒரு பணக்காரப் பெண்ணுக்கு அவனை விட்டுக் கொடுத்து விட்டுக் கண்ணில் நீருடன் சென்று விடுவாள். இவை போன்ற கதைகள் எத்தனை வேண்டுமானாலும் எழுதட்டுமே! ரசித்துப் படிக்கலாம்.

ஆனால் இந்தக் குட்டிக் கதையைப்



**"நேத்திக்கு நிருபர்கள் கேட்டதற்கு தலைவர் சொன்ன பதில் நிருபர்களையே அதிர்ச்சிக்குள்ளாக்கிடுச்சு!"**

**"அப்படி என்ன சொல்லிட்டாரு?"**

**"உங்க கடின உழைப்புக்கு என்ன சாட்சின்னு கேட்டதற்கு வீட்டிற்கு வந்துபாருங்க என் சூட்கேசுகளே சாட்சின்னு சொல்லியிருக்காரு!"**

**– சென்னை எஸ். உஷாதேவி**

படித்த போது மனம் லேசாய் அதிர்ந்தது.

"கதை பிடிச்சிருக்கான்னேனே?"

"நீங்க எப்படி எம். நர்மதா? உங்கப்பா பேரு சண்முகம்தானே?"

"ஆமாம்."

"அப்போ நீங்க எஸ். நர்மதாவாத்தானே இருக்கணும்?"

"ஏன்?"

அவனுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. 'ஆமாம், அச்சுப் பிழை' என்ற பதில் எதிர்பார்த்திருந்தான்.

"ஏன், மிஸ்டர் கார்த்திகேயன்?"

"இல்லே... வழக்கம் அப்படித்தானே. கல்யாணத்துக்கப்புறம் ஹஸ்பண்ட் பேர். கல்யாணத்துக்கு முந்தி அப்பா பேர் அல்லது இனிஷியல்."

" 'எம்' என்கிறது மாயவரம். எங்க சொந்த ஊர். அப்போ அதானே என் அடையாளம்?"

அவன் எதுவும் சொல்லவில்லை.

"என் கேள்விக்கு நீங்க இன்னும் பதில் சொல்லலே."

"என்ன கேள்வி?"

"என் கதை பிடிச்சிருக்கா?"

"பிடிக்கலை."

அவன் எழுந்து நின்றான். "அம்மா, கிளம்புங்க."

பெரியவர்கள் திகைத்துத் திரும்பிப் பார்த்தார்கள்.

"என்ன கோவமிருந்தாலும் காப்பி குடிக்காம போகாதீங்க மிஸ்டர் கார்த்திகேயன். என் கதையை விட என் காப்பி உங்களுக்குப் பிடிக்கும்!" சிரித்துக் கொண்டே நர்மதா காப்பித் தம்ளர்களை விநியோகிக்கலானாள்.

அந்தச் சுவையான காப்பி அவன் நாவில் ஒரு வாரத்துக்குக் கசந்து கொண்டிருந்தது. சே, கடைசியில் எல்லாம் பெண்ணிய ரகம். 'சகுனம் சரியில்லை, மன்னிக்கவும்' என்று செய்தி சொல்லியனுப்பிய போது கூட அந்தப் பெண் சிரித்தாளாமே? தரகர் சொன்னார்.

"டே கார்த்தி, வாசல்ல ஏதோ வண்டி வராப்பல இருக்கே? போய்ப் பாரு." அம்மாவின் குரல் கேட்டது.

மாலை ஆறரை மணி. அவன் அலுவலகத்திலிருந்து திரும்பி, உடை மாற்றி, முகம் கழுவி, சிற்றுண்டி முடித்து, வேட்டி பனியனோடு சோபாவில் ஓய்வாய்ச் சாய்ந்திருந்த நேரம்.

எழுந்து சென்று பார்த்தான். 'கேட்'டுக்கு வெளிப்புறம் ஓர் ஆட்டோ நின்றிருந்தது. கையில் பெட்டியுடன் அவன் அக்கா மாலதி இறங்கினாள்.

"மீட்டருக்கு மேல முப்பது ரூபாம்மா. கொட்டிவாக்கத்திலேர்ந்து வருதில்ல?"

கொடுத்துவிட்டு மாலதி உள்ளே வந்தாள்.

"வாக்கா," கார்த்தி அவளிடமிருந்து பெட்டியை வாங்கிக் கொண்டான்.

"வா மாலு" அம்மாவும் முன் அறைக்கு வந்தாள். "பெட்டியோட வந்திருக்கியா? அப்பாடா, ரொம்ப சந்தோஷம். நாலு நாள்

தங்கற மாதிரி வான்னு எத்தனை காலமா சொல்லிக்கிட்டிருக்கேன்! இப்பத்தான் உன்னை அனுப்பி வைக்க உன் புருஷனுக்கு மனசு வந்துதாக்கும்!''

மாலதி திரும்பினாள். பொம்மை போன்ற சிறிய, கச்சிதமான உடலமைப்பு. களையான முகம். அந்த முகத்தில் இப்போது நோவு, ஒருவித இறுக்கம்.

''அவர் என்னை அனுப்பி வைக்கலே. நானாய் வந்தேன்... வந்துட்டேன்!'' குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தாள்.

அடுத்து வந்த நாட்களில் வீடு கொந்தளித்தது. விவாதம், கோபம், கண்ணீர், ஆவேசம்.

''அப்பப்போ காதில் விழுந்தது. நான் நம்பலே. திடீர்னு இன்னிக்கு வீட்டுக்கே அழைச்சு வந்துட்டார். முப்பது வயசு இருக்கும். என்னை விட அழகு. நல்ல உயரமா, நிறமா, கவர்ச்சியா இருந்தாள். 'தாலி கட்டிட்டேன், இனிமே இங்கதான் இருப்பா, ரெண்டு பேரும் அக்கா தங்கச்சி மாதிரி இருந்துக்குங்க அப்படின்னார் அலட்டிக்காம. துடிச்சுப் போய்ட்டேம்மா! இது அக்கா தங்கச்சி உறவா? சண்டை போட்டேன்.''

''அப்புறம்?''

''அவன் வெளிய போகணும்னேன். முடியாதுன்னார். கிளம்பி வந்துட்டேன்.''

பெரிய விஷயத்தைச் சிறிய வாக்கியங்களில் ஒரு சூத்திரம் போல் சொல்லி விட்டாள்.

வீட்டில் அனைவருக்கும் ஒரு தலைகீழ்ப் புரட்டல். சமாளித்துக் கொண்டபின் பெற்றோரின் குரல்கள். ''என்னம்மா இப்படிப் பண்ணிட்டே! இருந்து சாதிக்கணுமே தவிர வெளிய வந்துடறதா?''

''அவர் பண்ணது சரியா?''

''தப்புத்தான். நாங்கள்ளாம் வந்து எடுத்துச் சொல்றோம். மாப்பிள்ளையின் மனுஷங்களையும் சொல்லச் சொல்றோம். அதுக்காக...''

மாலதி தனக்குள் சுருங்கிக் கொண்டாள். அழுகையில் கனத்திருந்த கண்களில் நோவு குமுறியது.

கார்த்திக்குத் தாங்கவில்லை. அக்கா எவ்வளவு நல்லவள்! மெலிந்த, மென்மையான உருவம். அது வேதனையில் வெம்புவதா! இந்தத் துன்பத்தைத் தாங்கும் பலம் கூடக் கிடையாதே அவள் உடம்பில்! உடலைப் போலவே அவள் மனமும் மெல்லியது. அக்கா... என் அருமை அக்கா... இவளை இப்படி அழவிடும் அவன்...

கோபம் உச்சிக்கு ஏறியது.

''அக்கா, இவங்க பாட்டுக்கு ஏதோ சொல்லட்டும். நாம ரெண்டு பேரும் அங்கே போவோம். மாமாவைப் பார்த்துச் சுடச்சுட நாலு கேள்வி கேக்கறேன். என்ன நினைச்சுக்கிட்டார் மனசில?''

''டே, நீ போய் ஏதானும் சண்டை கிண்டை போடாதடா! மாலு மறுபடி அவர் கூட போய் வாழணும்.''

''நீங்க சும்மா இருங்கம்மா.''

மூன்றாம் நாள் மாலை சகோதரியுடன் தன் ஹீரோஹோண்டாவில் திருவான்மியூர்

# ஹே ராம்!

தம்மைத் தேடி வந்த இரண்டு சினிமா வாய்ப்புகளையும் மறுத்துவிட்டார் ஸ்ரீகிருபா. பத்தொன்பது வயதான இந்த 'மிஸ் ஃபெமினா'வைத் தேடி வந்த முதல் படம் கமல் ஹாசனின் ஹே ராம்! கமலின் மனைவியாக நடிக்கச் சொன்னார்களாம். கமல், ஷாருகான், ராணி முகர்ஜி போன்ற பிரபலங்களின் மத்தியில் தமக்குக் கிடைத்தது சாதாரண கேரக்டர்தான் என்பதால், ரசிகர்களின் மனத்தில் இடம்பெற முடியாது என்று மறுத்து விட்டாராம்.



• ஸ்ரீகிருபா

'மோக்ஸ்' என்கிற இன்னொரு படத்திலும் மனிஷா கொய்ராலா முதல் கதாநாயகி. இவர் இரண்டாவது கதாநாயகி என்பதால் மறுத்து விட்டார். ஹே ராமில் இவர் மறுத்த பாத்திரத்தில் வசந்தராதாஸ் நடிக்கிறார். ''என்ன பாத்திரம் என்பது பற்றியெல்லாம் எனக்குக் கவலையில்லை. சினிமா வாய்ப்புக் கிடைத்தவரையில் எனக்கு மிக்க மகிழ்ச்சி!'' என்கிறார் கர்நாடக இசைப் பிரியையான வசந்தராதாஸ்!



• வசந்தராதாஸ்

— மகேந்திரன்

சென்றான். கடற்காற்று குளுமையாய் வருடும் அழகிய செங்கல் வர்ண வீட்டின் தோட்டத்தில் இரண்டாம் மனைவியுடன் பேசியவாறு தென்னை மரங்களையும் சம்பங்கிச் செடிகளையும் தாண்டி நடந்து வந்து கொண்டிருந்தார் மாலதியின் கணவர்.

இவர்களைப் பார்த்ததும் நின்றார்.

"வாப்பா கார்த்தி. அக்காவை அழைச்சிட்டு வந்திருக்கியா? குட். மாலு கோவமாப் போனாலும் நிதானமாய் யோசிச்சு திரும்பி வந்துடுவாள்னு எனக்குத் தெரியும். உள்ள வா மாலு. இப்படிக் கோவிச்சுக்கிட்டுப் போகலாமா, சின்னப் பிள்ளைங்க 'டு' விடற மாதிரி? அசடு! வனஜா, மீட் மிஸ்டர்



''சாரி சார்; உங்க கல்யாணத்துக்கு என்னால வரமுடியாம போயிடுச்சு!''
''அதனாலென்ன; மொய்ப் பணத்தை இப்பக்கூட நீங்க தாராளமா தரலாம்!''

– யமுனா ரெங்கநாதன்

கார்த்திகேயன். மாலதியோட தம்பி. நீயும் உள்ளே வா கார்த்தி. அப்பாம்மா நல்லாயிருக்காங்களா?"

"ஷட் அப். என்ன மாமா இவ்வளவு பெரிய தப்புப் பண்ணிட்டு எதுவுமே நடக்காத மாதிரி பேசிக்கிட்டே போறீங்க? உங்ககிட்ட நியாயம் கேக்க வந்திருக்கேன்."

"என்ன நியாயம்?"

"அக்கா இருக்கும்போது நீங்க எப்படி இன்னொரு கல்யாணம்..."

"இது புருஷன் பெண்டாட்டி விவகாரம். நீ தலையிட வேணாம்."

"என் அக்காவுக்கு நீங்க துரோகம் பண்ணினா நான் சும்மாயிருப்பேன்னு நினைச்சீங்களா?"

"என்னடா பெரிய துரோகம்? உலகத்தில் யாரும் செய்யாததையா நான் செஞ்சிட்டேன்?"

"நீங்க என்னோடு வாழப் போறீங்களா இல்லை இவளோடு வாழப் போறீங்களான்னு முடிவாச் சொல்லிடுங்க, போதும்" என்றாள் மாலதி.

"ஏன், ரெண்டு பேரோடும்தான்! அன்னிக்கே சொன்னேனே?"

"நாம் போகலாம் வா கர்த்தி."

"கூல் டௌன் மாலு. என்ன பெரிசா அலட்டறே? நான் ஆம்பளை. நீதான் அட்ஜஸ்ட் பண்ணிக்கணும். போகப் போக உனக்குப் பழகிடும். வீட்டுக்குள்ளே போ. கார்த்தி, நீயும் உள்ளே வந்து காப்பி குடிச்சிட்டு நல்ல பிள்ளையா கிளம்பிப் போவியாம். உன் கல்யாண விஷயம் என்னாச்சு? அப்புறம் ஏதானும் பெண்ணைப் பார்த்தியா?"

"நீங்க கவர்ன்மென்ட் ஸர்வன்ட் மாமா! இந்த விஷயத்தை நான் வெளிய சொன்னா 'பிகமி'க்காக நீங்க கம்பி எண்ணணும். உங்க வேலை போயிடும்!" உணர்ச்சி மிகுதியில் குரல் வாங்கியது.

"போய்ச் சொல்லு. பேப்பரில் போடு. சமாளிக்க எனக்குத் தெரியும்." கிண்டலாய்ச் சிரித்தார். "யாரு கண்டா! விஷயத்தைக் கேட்டுட்டு பல ஆண்கள் என்கிட்ட பொறாமைப்படலாம்!"

"கார்த்தி, போகலாம்." மாலதி பைக்கை நோக்கித் திரும்பி நடந்தாள்.

**சா**வு விழுந்த வீடு போல் இருள் மூடிய சூழ்நிலையில் கடந்து கொண்டிருந்த நாட்களூடே அக்காவின் முகபாவம் ஓர் ஆச்சரியம். சலனமற்ற உறுதியில் நிலை பெற்ற கண்கள். நெருங்கலான உடம்பின் ஒவ்வோர் அணுவையும் இரும்பினால் செய்து வைத்தது போன்ற அமைதியான ஒரு திடம். அக்காதானா இவள்? கண்ணீரில் கரைந்து போய் விடுமோ இந்த மெலிவு என்று அவன் அஞ்சியிருந்த அதே அக்காவா? அவள் மீதிருந்து ஒரு திரை விலகினாற்போலிருந்தது. பெற்றோரின் "இல்லை மாலு, பொறுமையாயிருந்து திருத்தணும். பிரச்னைக்கு சுமுகமான வழி தேடலாம், அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வந்துடாதே" என்ற அறிவுரைகள் இந்தப் புதிய வளிடம் செயலற்றுப் போயின.

அவள் மிக நிதானமாய்ச் சொன்னாள்

"எனக்கு விவாகரத்து வேணும்."

அக்கா பத்தாவதுக்கு மேல் படிக்கவில்லை. உத்தியோகம் பார்க்கவில்லை. இவ்வளவு காலம் கணவனின் நிழலாகவே வாழ்ந்திருந்தாள். இப்போது உள்ளே ஆழத்தில் மிக அருமையானதும் நுண்மையானதுமான ஏதோ ஒன்று முறிந்து போனதால் மணமுறிவு கேட்கிறாள்.

"நாங்கள்லாம் உன்னைக் காப்பாத்த முடியாத காலம் வருதுன்னு வச்சிக்க. புருஷனையும் விட்டுட்டு எப்படிப் பிழைப்பே? வேலைக்குப் போகவும்தான் என்னடி தகுதி இருக்கு உனக்கு?"

"தோட்டிச்சியாய் சாக்கடை வாரிப் பிழைச்சுப்பேன். அநியாயம் செய்யறவனோடு வாழ மாட்டேன்" அமைதியாய்ச் சொன்னாள்.

கார்த்திக்கு அவள் காலில் விழ வேண்டும் போலிருந்தது. இது தரிசனம். அக்காவுக்குப் பெண்ணியத் தத்துவமெல்லாம் விரித்துரைக்கத் தெரியாது. அவள் பெண்ணியம் பேசவில்லை. பெண்ணாய் இருப்பதால் பேசுகிறாள். மனிதம் பேசுகிறாள்.

அவனுக்கு ஏதோ புரிய ஆரம்பித்தது. சம்பந்தமில்லாமல் எம். நர்மதாவின் முகம் மனசில் தோன்றியது.

"கார்த்தி!"

மாலையில் வாக்கிங் போய்விட்டு இருவரும் பாந்தியன் சாலை வழியே வீடு நோக்கி நடந்து வந்து கொண்டிருந்தார்கள்.

"என்னக்கா?"

"முதல்ல ஒரு நல்ல வக்கிலைப் பார்த்து யோசனை கேக்கணும்."

"என் கம்பெனி லாயர் மூலம் ஏற்பாடு செய்யட்டுமா?"

"செய்யலாம். அதுக்கு முந்தி... இந்த மாதர் சங்கங்களில் பெண் வக்கீல்களும் இருக்கலாமில்லையா? அந்த மாதிரி கிடைச்சா நல்லாயிருக்கும்னு நினைக்கறேன். பெண்ணுக்குப் பெண் அனுதாபத்தோடு புரிஞ்சுக்கிட்டு யோசனை சொல்லலாம். யார்கிட்ட விசாரிக்கலாம் இந்த சங்கங்கள் பத்தி?"

பளிச்சென்று நினைவு வந்தது. அந்த நர்மதா கூட ஏதோ ஒரு மாதர் அமைப்பில் தொண்டராக இருப்பதாய்ச் சொன்னார்களே... அவளை விசாரித்தால் தகவல் சொல்வாளா? அந்த அமைப்பிலேயே கூட ஒருவேளை சிறந்த பெண் வக்கீல் கிடைக்கலாம்...

இங்கே புதுப்பேட்டையில்தான் நர்மதாவின் வீடு. ஆனால் எந்த முகத்தோடு அவளைப் போய்ப் பார்ப்பது?

எனினும், தம்பி நிராகரித்தான் என்ற கோபத்தால் அக்காவுக்கு உதவ மறுக்கக்கூடிய பெண்ணாய் ஏனோ அவளை நினைக்க முடியவில்லை. அந்த முகத்தின் பிரகாசம்... சிரிப்பிலும் பார்வையிலும் அந்த ஆழங்கள்.... நிச்சயம் அவற்றினுள் எந்தச் சிறுமையும் பிழைத்திருக்க முடியாது.

"யாரையாவும் விசாரிச்சுச் சொல்றியா கார்த்தி?"

"சரிக்கா, விசாரிக்கறேன்."

அக்காவின் விஷயத்தைச் சொல்லுமுன் மாயவரம் நர்மதாவிடம் அவன் மிக முக்கியமாய் வேறொன்று சொல்ல வேண்டும்.

'உங்க கதை எனக்குப் பிடிச்சிருக்கு.'

---

"தலைவர் ரொம்பக் கோபமா இருக்காரே, என்ன விஷயம்?"

"மேடையில பேசும்போது, யாரோ ஒரு தொண்டர், 'நமது அண்ணன் மூன்றாவது அணியை உருவாக்கப் பாடுபட வேண்டும்'னு சொல்றதுக்குப் பதிலா, 'மூன்றாவது அண்ணியை உருவாக்கப் பாடுபடவேண்டும்'னு சொல்லிட்டாராம்!"

— மடுகரை யு. அரசுதேன்மொழி



அக்னிசர்மா பக்கம்

# நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

இரக சஞ்சாரங்கள் அவ்வளவு திருப்தியா இல்லீங்க. வார ஆரம்பத்துல நீங்க எதிர்பாராத பிரச்னைகள் சில தலை தூக்கும். மனசுல எப்பவும் ஒரு குழப்பம், கவலை வட்டம் போடும். அலைச்சலும் அசதியும் அதிகமா இருக்கும். ஏதாச்சும் முக்கியமான திட்டங்கள் வெச்சிருந்தீங்கன்னா, செயல்படுத்தறதுல சிக்கல்கள் வரவே செய்யும். குடும்பத்தாரோட அனுசரிச்சி போக வேண்டியது முக்கியம். வயசுல பெரியவங்களை எடுத்தெறிஞ்சு பேசாதீங்க. பயணங்களைத் தவிர்த்துடுங்க.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசிரிஷம் 2-ம் பாதம் வரை)*

நீங்க எந்தத் துறையைச் சேர்ந்தவரானாலும் இந்த வாரம் முன்னேற்றம் உறுதி. மத்தவங்க புகழ்ந்து பாராட்டறாப்பல சில காரியங்களைச் செய்து முடிப்பீங்க. குறிப்பா, அரசியல்வாதிகள் புத்திசாலித்தனத்தோட செயல்பட்டு, பெரும் புகழடைவாங்க. வெளிநாட்டுத் தொடர்பு உள்ளவங்களுக்கு அனுகூலமான செய்தி ஒண்ணு வந்து குஷிப்படுத்தும். பொருளாதாரப் பிரச்னை இருக்காது. தொழில் தொடங்கறவங்களுக்கும் எதிர்பார்த்த பண உதவி கண்டிப்பா கிடைக்கும். பெண்களுக்குத் தங்க யோகம் இருக்கும்.



**மிதுனம்** : *(மிருகசிரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்களை அறியாமலேயே மனசு ஆன்மிகத்துல தீவிரமா லயிக்கறதை உணருவீங்க. நீண்ட நாள் பிரார்த்தனைகளை நிறைவேத்த சரியான சமயம் இது. தொழில் துறைல இருக்கறவங்களுக்கு முன்னேற்றம் உறுதி. அரசு ஊழியர்களுக்கு இடமாறுதல் வரலாம். சிலருக்கு மட்டும் ஊதிய உயர்வும் கிடைக்கலாம். குடும்பத்துல வயசுப் பொண்ணுங்க இருந்தாங்கன்னா, தயங்காம கல்யாணப் பேச்சை இப்ப ஆரம்பிக்கலாம். எழுத்தாளர்களுக்கும் ஆன்மிக சொற்பொழிவாளர்களுக்கும் எதிர்பாராத புகழும் பரிசும் வந்து சேர்ற வாரம் இது.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

சாதாரணமான வாரம்தான். உங்க காரியங்கள் நடைபெற நிறையத் தடைகளைச் சந்திக்க வேண்டி வரும். உழைப்பு அதிகமாகவும் பலன் குறைவாகவும் அமையறதைப் பார்ப்பீங்க. பேச்சுல நீங்க படு எச்சரிக்கை காண்பிக்க வேண்டியது அவசியம். குறிப்பா யாரைப் பத்தியும் மரியாதையா நடந்துக்கங்க. கடன் குடுக்கறதும் வாங்கறதும் வேண்டாம். வெளியூர்ப் பயணம், ஸ்பெகுலேஷன், லாட்டரி, குடும்ப உறவுகள் - இந்த இட்டம் எதுவுமே இந்த வாரம் சுமுகமான பலன் தராது. எப்பவும் எச்சரிக்கையா நடந்துக்கங்க.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

ஆதாயமான காலகட்டம் இது. எடுத்த காரியங்கள்ல வெற்றி உறுதி. நண்பர்கள் தக்க நேரத்துல உதவி செய்து உங்க மனசைக் குளிர்விப்பாங்க. வெளிநாடு போற சான்ஸ் கூடி வரும். குடும்பத்துல ஏதோ ஒரு விசேஷம் நடக்கப் போவுது. சுபச் செலவுகளுக்குத் தயாரா இருங்க. இரும்பு சம்பந்தமான தொழில் செய்யறவங்களுக்கும் கணக்கு வாத்தியார்களுக்கும் இந்த வாரம் பண வரவு பிரமாதமா இருக்கும். பெண்களுக்கு வேலை வாய்ப்பு, பதவி உயர்வுன்னு குஷியான சமாசாரங்கள் உண்டு.



**கன்னி** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

மனசுல குழப்பம் நிறைய இருக்கும்போது புதிய காரியங்கள் எதையும் தொடங்காதீங்க. ரொம்ப அவசியம்னா நாலு பேர் கிட்ட கருத்துக் கேளுங்க. நிதானம் ரொம்ப முக்கியம். குறிப்பா மளிகை, ஜவுளிக் கடைக்காரங்க உஷாரா இல்லாட்டா பொருளிழப்பு உண்டாயிடும். கோர்ட்ல வழக்கு ஏதும் இருந்துச்சுன்னா, வாய்தா வாங்கப் பாருங்க. தீர்ப்பு சாதகமா இருக்காது இப்ப. அரசியல்வாதிகள் எச்சரிக்கையா இருக்கணும். கல்லடி, சொல்லடி பட வாய்ப்பு இருக்கு. வெளியிடங்கள்ல சாப்பிடறதை அவாய்ட் பண்ணுங்க. ஜுரம், தலை வலி வர்ற வாய்ப்பு இருக்கு.



மீன ராசிக்காரரான கமலின் புதிய முயற்சிகள் வெற்றி யடையுமாம். பணவரவும் திருப்தியா இருக்குமாம்.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

குழந்தைப் பேறில்லாதவங்களுக்கு அந்த வாய்ப்பு கூடிவர்ற சமயம் இது. மகான்கள் தரிசனம் கிடைக்கும். பண வரவு ஏராளமா இருக்கும். கடல் வாணிபம் செய்யறவங்களுக்கும் மீனவர்களுக்கும் கொழுத்த லாபம் கிடைக்கும். சுப காரியங்கள் நடக்கறதுக்கான சூழல் ஏற்படும். சில பெரிய மனிதர்களோட தொடர்பு கிடைக்கும். அழகா பயன்படுத்திக்கிட்டு முன்னேறப் பாருங்க. கல்வியாளர்களுக்குப் புகழ் உறுதி. வெளியூர்ப் பயணம் இருக்கும். வேற்று மொழிக்காரர்கள் தக்க சமயத்துல உதவுவாங்க. பொதுவா இது ஆதாயமான வாரம் தான்.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

பிரமாதமான பலன்களை எதிர் பார்க்க முடியாது. ஆனா உங்க செயல்கள் திருப்தி தரும் விஷயமாவே அமையும். சிலர் புதிய முயற்சிகள்ல அபார வெற்றிபெற சான்ஸ் இருக்கு. பழைய நண்பர்களோட உறவு புதுப்பிக்கப்படும். ஆனா, சகோதரர்கள் நடுவுல சண்டை உண்டாகும். வீட்டுல அமைதி நிலவும். அதே சமயம் சில சில்லறை மனஸ்தாபங்களையும் தவிர்க்க முடியாது. பணத்தை சிக்கனமா செலவு பண்ணுங்க. மகன்/மகள் உடல் நலத்துல கவனம் செலுத்துங்க. மனைவிமார்கள் விரும்பற காரியத்தைச் செய்து தர்றது மூலமா, வீட்டுல குதூகலத்தைக் கொண்டு வரலாம்.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

வெற்றி வாய்ப்புகள் கதவைத் தட்ட்ற நேரம். உங்களோட அயரா உழைப்பு, மேலதிகாரிகளோட பாராட்டைப் பெறும். மனசுல புதிய திட்டங்கள் உருவாகும். எதிரிகள் காணாமப் போயிடுவாங்க. வழக்குகள் சாதகமா தீர்ப்பாகும். சிலருக்குத் திருமண நேரம் கூடிவரும். மனசுக்குப் பிடிச்ச பெண்/பையன் அமைவாங்க. காதல் அனுபவம் பரம சுகமா இருக்கும். சிலருக்கு வெளி நாடு போற ஆசையும் வாய்ப்பும் உண்டானாலும் தற்சமயம் அதைத் தள்ளிப் போட வேண்டியது அவசியம். இரவு கண்விழிச்சி வேலை பார்க்கறதை தவிர்த்துடுங்க.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

விருந்து, கேளிக்கைன்னு ஜாலியான பொழுதா போகும். பெரும்பாலான நேரத்தை எதிர்காலம் பத்தின வண்ணக் கனவுகள் காணறதுல செலவு பண்ணுவீங்க. சிலர் வீடு வாங்குவாங்க. டூவீலர், கார் வாங்கற யோகமும் இருக்கு. மனைவி/காதலி ஆசைப்படறதையெல்லாம் செய்து முடிக்கற ஜோர்ல கைப் பொருளை தாராளமா இழப்பீங்க. சினிமா, எழுத்துத் துறைல இருக்கறவங்களுக்குப் புதிய வாய்ப்புகள் கூடிவரும்.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உடல் ஆரோக்கியம் சீரா இருக்கும். மதிப்பும் கௌரவமும் உயரும். எதிர்ப்புகள் அடங்கி, உங்க கொடி உயரப் பறக்கும். அரசு விவகாரங்கள்ல நல்ல திருப்பம் உண்டாகும். நிர்வாகத் துறைல இருக்கறவங்களுக்கு வளர்ச்சி உறுதி. கம்ப்யூட்டர் ஸாஃப்ட்வேர் பிஸினஸ் பண்றவங்களுக்கு ஆர்டர் மலை மலையா வந்து விழும். சினிமா, வர்த்தகம் எல்லாமே ஆதாயமாத்தான் அமையும். வெளிநாட்டுத் தொடர்புள்ளவங்களுக்கும் ராணுவத்தினருக்கும் வெற்றி வாய்ப்புகள் பிரகாசமா இருக்கும். பெண்கள் வீட்டு உபயோகப் பொருள்கள் பல வாங்குவாங்க.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

வாரத் தொடக்கம் அனுகூலமாவே இருக்கும். புதிய முயற்சிகள் வெற்றி அடையும். பணவரவு திருப்தியா இருக்கும். பெண்களால் ஆதாயம் உண்டு. இரும்பு சம்பந்தப்பட்ட துறைல இருக்கறவங்களுக்கு வருமானம் ஜோரா இருக்கும். ஆனா, வாரக் கடைசில நண்பர்களோட பகை, எதிரிகள் தொல்லை, பார்ட்னரோட மனக்கசப்புன்னு கொஞ்சம் படுத்தும். பயணங்களைத் தவிர்த்துடுங்க. பர்ஸை ஜாக்கிரதையா வெச்சிக்கங்க. பிக் பாக்கெட்ல கொஞ்சம் இழக்க வாய்ப்பு இருக்கு.

# 'தந்தை வீட்டைக் காப்பேன்' என்கிறாரே வைகோ?



● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி.

*? தந்தை வீட்டை (தி.மு.க.) யார் தகர்க்க முயன்றாலும் எந்நேரமும் நாங்கள் வேலாக, ஈட்டி முனையாக, அரணாக இருந்து காப்போம் என்கிறாரே வைகோ?*

! அப்படி ஒரு நிலை தோன்றும்போது, ஈட்டி முனை அரணாக இருப்பது கிடக்கட்டும். இப்போது தொகுதிப் பங்கீடு விஷயத்தில் நெருஞ்சி முள்ளாகக் குத்தி வேதனைப்படுத்தியிருக்கிறாரே!

● க. பூங்கொடி, சித்தோடு.

*? கட்சியை சுத்தம் செய்ய பிளவு பயன்படும் என ஜனதாதள தலைவர் ஜி.ஏ. வடிவேலு கூறியிருப்பது பற்றி...?*

! பிளவா? கட்சிக் கட்டடமே தகர்ந்து தூசி எழும்போது எதை சுத்தம் செய்வது?

● கே. வி. சூர்யா, மயிலாடுதுறை.

*? கர்நாடகாவில் ஜனதா தளம் உடைந்ததால் யாருக்கு லாபம்...?*

! சந்தேகமில்லாமல் பா.ஜ.க.வுக்குத்தான்.

● நெர்மல் குருநாதன், மேட்டூர் அணை-1.

*? அரசியல்வாதி டாக்டர் கிருஷ்ணசாமி, அரசியல்வாதி சுப்ரமண்யம் சாமி - இவர்களைப் பற்றி உங்கள் கருத்து...?*

! கி. சாமி - வேண்டாம்டா சாமி!
சு. சாமி - போதுமடா சாமி!

● அவ்வை. கே. சஞ்சீவி பாரதி, கலிங்கியம்.

*? 'ஜெயலலிதா சொன்னால் உயிரை விடவும் தயார்' என்கிறாரே செங்கோட்டையன்...?*

! எந்த அரசியல்வாதியும் உயிரை விட வேண்டாம். ஊழலை விட்டாலே போதும்.



• ...சாமி!

• மூள்!



• இட்டட....



• ஆ வேண்டாம்டா!

நீங்கள் கேட்டவை — தராசு

● ரஞ்சனி நாராயணன், பெங்களூர் - 82.

*? தமிழக அரசியல் மைனஸ் சினிமா; கேபிள் சானல்கள் மைனஸ் சினிமா - எப்படியிருக்கும்...?*

! நிஜமாகவே நன்றாயிருக்கும். ஏனெனில், அப்போதுதான் சாடிலைட் சானல்காரர்கள் யோசித்துச் செயல்படுவார்கள். சினிமா, மேக்-அப் இன்றி அரசியல்வாதியின் உண்மை சொரூபம் வெளிப்படும்.

● புளியரை கணேசன், சென்னை - 30.

*? கேப்டன் பதவியை சச்சின் இனி திறம்பட வகிப்பாரா...?*

! சந்தேகம்தான். அதற்குரிய மனநிலை அவருக்கு இருப்பதாகத் தோன்றவில்லை. மாறாக, இந்தக் கூடுதல் பொறுப்பு அவரது ரன் எடுக்கும் ஆற்றலையும் பாதிக்கக்கூடும்.

● ஆர். சுப்பாராவ், திருக்கோவலூர்.

*? 'டாக்டர் கிருஷ்ணசாமியின் கடந்த காலக் கதைகளை நாங்கள் அறியோம்' என்று த.மா.காவின் தலைவர் தனுஷ்கோடி ஆதித்தன் கையை விரிக்கிறாரே?*

! பாவம்! தெரியாத்தனமாய்த் தப்பு பண்ணிவிட்டுத் தவிக்கறாங்க சார்!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? த.ரா.கா. பேரணி – ம.தி.மு.க. மாநாடு – ஒப்பிடுங்களேன்...

! சென்னையைத் தலைகீழாய்க் கவிழ்த்தது பேரணி;

காஞ்சியை ஒரு கலக்குக் கலக்கியது மாநாடு!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

? எக்கட்சிக்கும் பெரும்பான்மை கிடைக்க விட மாட்டோம் என்று கான்ஷிராம் கூறியுள்ளாரே?

! அப்பா! எவ்வளவு பெருந்தன்மை! இத்தகைய அரசியல்வாதிகள் இருக்கிற வரையில் இந்தியாவின் எதிர்காலம் குறித்துக் கவலையே இல்லை, போங்கள்!

● ஆர்.ஆர். சாமி, திருவண்ணாமலை.

? நர்மதை நதியில் கட்டப்படும் அணையால் ஆபத்து என அருந்ததி ராய் அரசுக்கு எதிராகப் போராட்டம் நடத்தி வருகிறாரே?

! அருந்ததி ராய் மட்டுமல்ல. மேதா பட்கர்தான் வழிகாட்டி. குஜராத் அரசு மிரளும் அளவுக்கு மக்கள் ஆதரவு அந்த இயக்கத்துக்கு மகோன்னதமாகச் சேர்ந்திருப்பதுதான் மிகவும் மகிழ்ச்சியான விஷயம். விழிப்புணர்வை விதைக்க, வளர்க்க முடியும் என்பதற்கு சாட்சி.

• குருரை!



• விதைக்க,





• வளர்க்க...!

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

? ஓய்வு பெற்ற நீதிபதி மோகன் தலைமையில் அமைக்கப்பட்டுள்ள விசாரணைக் கமிஷன், நெல்லை சோகத்தின் உண்மை நிலையை வெளிக்கொண்டு வருமா?

! வரும். காலந்தாழ்த்தியேனும் உண்மை வெளிப்படும். ஆனால் அதிலிருந்து நாம் பாடம் கற்பதென்பதுதான் நடக்காது! அப்படி நடக்குமேயானால் இன்று ஒரு மோகன் கமிஷனுக்கு அவசியமே ஏற்பட்டிராது.

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி. ❑

? அரசியலில் யாருடைய ஆதிக்கம் இருப்பதாகக் கருதுகிறீர்கள்?

! கட்சிகளைக் காட்டிலும் அவர்களுக்குப் பின்னால் நின்று இயக்குபவர்கள் ஆதிக்கம்தான்! தமிழகத்தின் அ.தி.மு.க. உதாரணம் ஒருபுறமிருக்க, குஜராத்தில் பஜ்ரங் தள் படுத்தும் பாடு (கலவரங்கள்) பி.ஜே.பி. அரசை முழி பிதுங்கச் செய்து விட்டதே!



• சுத்தம்!



• கூடுதல் களம்!

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்.

? வைராக்கியம் – பிடிவாதம் – வித்தியாசம் கூறவும்.

! போன வாரம் 'குறையொன்றுமில்லை' படிக்கவில்லையா..? வைராக்கியம் – என்ன சோதனைகள் குறுக்கிட்டாலும் எடுத்த உறுதியான முடிவில் தளராதிருப்பது. பிடிவாதம் – என்னதான் எடுத்துச் சொன்னாலும் எடுத்த தவறான முடிவில் உறுதியாய் இருப்பது!

● நா. ராஜேஷ், ஆதம்பாக்கம்.

? இசை கேட்பதால் நம் மனம் சாந்தி அடைகிறது என்கிறார்களே?

! சந்தேகமென்ன! 'கண்கள் பனித்திடப் பொங்கும் கீதம் – கல்லும் கனியும் கீதம்...' – கம்மாவா சார்!

● வி. பரமசிவம், மதுரை – 10.

? சோனியா வெளிநாட்டவர் என பிரசாரம் செய்வதை விடுத்து, சாதனைகளை மட்டுமே சொல்லி பாரதிய ஜனதா தேர்தல் பிரசாரம் செய்யப் போகிறதாமே?

! அது வெறும் கையை முழம் போடுகிற சாதனையாக இருக்குமே!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? நீலன் திருச்செல்வம் படுகொலை...?

! மீண்டும் புலிகளின் கோரத் தாண்டவம்! ஒரு நல்ல அரசியல்வாதியை, நடுநிலையாளரை, பாலமாக இருந்திருக்கக்கூடியவரை பலியிட்டிருக்கிறார்கள். இலங்கைத் தமிழர் பிரச்னை தீர்ந்து விடக்கூடாது என்பதில் உறுதியாய் இருக்கிறார்கள் புலிகள்.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
எம். அசோக் ராஜா,
ஸ்ரீ கணபதி ஏஜென்சீஸ்,
பெல் நகர், திருச்சி - 620 015.

✉ தலையங்கத்தில் மூப்பனாரின் நிலையைத் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறீர்கள். மத வாதத்தையும் ஊழலையும் எதிர்க்க வேண்டும் என்று சொல்லி தற்சமயம் மதவாத முஸ்லீம் லீகோடும் ஜாதி வெறி உள்ள கிருஷ்ணசாமி யுடனும் கூட்டுச் சேர்ந்திருப்பது சட்டிக்குப் பயந்து அடுப்பில் விழுந்த கதைதான்!
மதுரை – 7, எஸ். திருமலை.

✉ சிறுதொழில் குறித்தான அனைத்து விவரங் களையும் தெளிவாகத் தொகுத்து அளித்திருந்த சிறப்பு இணைப்புப் பகுதி மிகுந்த பயனுள்ளது. சிறுதொழில் துறையில் நுழைபவர்களுக்கு இது ரொம்பவும் உபயோகப்படும் என்பதில் துளியும் சந்தேகமில்லை.
மொரட்டுப்பாளையம், க. நா. இராஜேஸ்வரன்.

✉ கவிதை ஸ்பெஷல் + சிறுதொழில் ஸ்பெஷல் என டூ-இன்-ஒன்னாக வழங்கி அசத்தி விட்டீரே, போற்றிப் பாதுகாக்கப்பட வேண்டிய பொக்கிஷம்.
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ ஆண்டு மலர் மிக அற்புதம். கல்கி நினை வுச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசுச் சிறு கதையான 'ஈனத் தொழில்' மிகவும் சிறப்பான தாக இருக்கிறது. தேர்ந்தெடுத்த எழுத்தாளர் களுக்கு என் மனமுவந்த நன்றி. கதை எழுதிய கண்ணனுக்கு வாழ்த்துக்கள்.
கோவை – 3, பாரதி தேவராஜன்.

✉ 'கவிதை ஸ்பெஷல்' என்பதால் வட்ட மேஜை கடிதங்களை நான்கு கால் பக்கங்களில் பிரித்துப் போட்டிருக்கிறீர்களோ? புதுக் கவிதை களில் வாக்கியங்களைப் பிரித்து எழுதுவது போல.
சென்னை – 14, அய்யாறு வாசுதேவன்.

✉ 'கவிச்சக்கரவர்த்தி என்று சொல்லிக் கொள்ள வெட்கமாக இல்லையா?' என்ற உங் கள் கேள்வி சற்று கடுமைதான். அதையும் சந் தோஷமாக ஏற்றுக் கொண்டு, 'பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள் அரை டஜன் பேர் சேர்ந்து தான் எனக்கு அந்தப் பட்டத்தைக் கொடுத்தார் கள்' என்று குறிப்பிட்டிருக்கிறாரே! கம்பருக்கு அந்தப் பெயர் உண்டென்பது ஏனைய வேந்தர் களுக்குத் தெரியாது போலிருக்கிறது!
சென்னை – 28, அஸ்வதி மணாளன்

✉ மின்மினியின் இரண்டாவது இன்னிங்ஸா வது அவருக்குப் பிரகாசமான எதிர்காலத்தைத் தரட்டும். வாழ்த்துக்கள்.
திருச்சி – 8, தி. மா. தமிழழகன்.

✉ முதல் பரிசுக் கதை 'ஈனத்தொழில்' சிறந்த தேர்வு! 'சேற்றில் செந்தாமரை' 'நத்தைக்குள் முத்து' போல் சிறைக்குள் சிறுகதைச் சிற்பி? மனதை நெகிழச் செய்த கதை.
திருவாரூர், ஆரூர் அரசு.

சிறைக்குள் ஒரு சிறுகதைச் சிற்பி!

✉ பா. ராகவனின் மாயக் கயிறு படித்தேன். பிதுர்ரார்ஜித சொத்தின் அர்த்தம் புரிந்தது!
சேத்துப்பட்டு, இரா. பார்த்திபன்.

✉ 'அந்தப்புரம்' பட விமர்சனம் கச் சிதம். எல்லோரும் பிரகாஷ்ராஜைப் பற்றி மட்டும் ஓகோ என பாராட்டிக் கொண்டிருக்கையில், கல்கி மட்டும் தான் மறக்காமல் சௌந்தர்யாவின் நடிப்பையும், பார்த்திபனின் கலக்கலை யும் குறிப்பிட்டிருந்தது!
பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ சிறுதொழில் கட்டுரையில் தோல் தொழிற்சாலைகளின் கழிவுகளால் (சுற்றுப்புறச் சூழலுக்கு) கேடு விளை விப்பதாகக் கருதி, உச்சநீதிமன்றம் விதித்ததடை சமீபத்தில்தான் நீக்கப் பட்டிருக்கிறது என்று நான் கூறியதாக வெளியாகியுள்ளது. இது சரியல்ல. தற் பொழுதும் மாசுக் கட்டுப்பாட்டு வாரி யத்தின் விதிமுறைகளுக்கு உட்பட்டுத்தான் தோல் பதனிடுதல் அனுமதிக்கப்பட்டுள்ளது.
சென்னை – 61, க. ரவி, ஹை-பாஷன் லெதர் புராடெக்ட்ஸ் கம்பெனி.

## டாப் 10

கடந்த பொதுத் தேர்தலில், அதிகபட்ச வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்ற டாப் 10 வேட்பாளர்களின் பட்டியல் இது:

முதலிடம் பெற்றவர் சுமார் மூன்றரை லட்சம் வாக்கு வித்தியாசத்தில் குஜராத் மாநிலம் ராஜ்காட் தொகுதியில் நின்று வெற்றி பெற்ற கதிரேயா வல்லபாய். (பா.ஜ.க.)

இரண்டாமிடம்: காசிராம் ராணா (பா.ஜ.க.). குஜராத் மாநிலம் சூரத் தொகுதி. மூன்று லட்சம் வித்தியாசம்.

மூன்றாமிடம்: அசங்பா சங்தம்(காங்கிரஸ்). நாகாலாந்து. இரண்டு லட்சத்து தொண்ணூறாயிரம் வோட்டு வித்தியாசம். அடுத்த ஏழு இடங்களைப் பிடித்தவர்களின் பெயர்கள்:

ரூப் சந்த் மர்மு(மார்க்சிஸ்ட்)
எல்.கே. அத்வானி (பா.ஜ.க.)
இந்திரஜித் குப்தா (சி.பி.ஐ)
நிலொனந்தா (மார்க்சிஸ்ட்)
சரத்பவார் (காங்கிரஸ்)
சோம்நாத் சாட்டர்ஜி (மார்க்சிஸ்ட்)
பரந்பே விஸ்வனாத் (எஸ்.எச்.எஸ்.)



• எல்.கே.அத்வானி

## பழைய கணக்கு: எல்.கே. அத்வானி!



• சேடப்பட்டி முத்தையா

1970-76- டெல்லியிலிருந்து ராஜ்ய சபைக்கு.

1976-82- குஜராத்திலிருந்து ராஜ்ய சபைக்கு.

1982-88 - ம.பி.யிலிருந்து ராஜ்ய சபைக்கு.

1988-89- ம.பி.யிலிருந்து ராஜ்ய சபைக்கு.

1989 - புதுடில்லி தொகுதியிலிருந்து லோக் சபாவுக்கு.

1991 - காந்தி நகர், புதுடில்லி இரண்டு தொகுதிகளிலும் போட்டியிட்டு வெற்றி (லோக் சபா).

1996 - பொதுத் தேர்தலில் போட்டியிடவில்லை.

1998 - காந்திநகர் தொகுதியிலிருந்து லோக் சபாவுக்கு.

1999 - ?

## பாட்டிபோட்ட வோட்டு

1991ல் பத்தாவது மக்களவைத் தேர்தலின் போது, பாட்னாவில் கிரிதித் என்ற இடத்தைச் சேர்ந்த ஆறாவது வாக்குச் சாவடியில், ஒரு பெண்மணி வாக்களித்தார். அவருக்கு வயது 122. இது

# தேர்தல்

பாட்டிபோட்ட வோட்டு என்று விம்கா சாதனைப் புத்தகத்தில் இடம் பெற்றுள்ளது.

## மை...

**1961**ம் வருடத் தேர்தலில்தான் அழிக்க முடியாத மையை வோட்டுப் போட்டதற்கு அடையாளமாக விரலில் இடும் முறை ஆரம்பிக்கப்பட்டது.

## வியப்பு!

அருணாசலப் பிரதேசத்தின் மலைப் பகுதி ஒன்றில் மூன்றே மூன்று வாக்காளர்களுக்காக ஒரு வாக்குச் சாவடி அமைக்கப்படுகிறது. மேற்கு அருணாசல பாராளுமன்றத் தொகுதியில் உள்ள சாக்கு என்ற இடத்தில் அமைக்கப்படும் இந்த வாக்குச் சாவடிக்கு சென்ற பாராளுமன்றத் தேர்தலின்போது ஒரு பாதுகாப்பு அதிகாரி உட்பட எட்டுப் பேர் தேர்தல் பணிக்காக அனுப்பப்பட்டனர்.

• பி.ஹெச். பாண்டியன்

## கேள்வி நேரம்!

ஜெ, நெல்லை பாராளுமன்றத் தொகுதியில் போட்டியிட தமக்கு வாய்ப்புக் கொடுத்ததில் குஷியோடு இருக்கிறார் பி.ஹெச்.பாண்டியன். "தொகுதிக்கு உங்கள் தேர்தல் வாக்குறுதி என்ன?" என்றோம்.

"கடந்த சில வருடங்களாக நான் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்ற உறுப்பினராகவோ அல்லது பாராளுமன்ற உறுப்பினராகவோ இல்லையே தவிர, சேரன்மாதேவி தொகுதி தவிர நெல்லையின் மற்ற பகுதி மக்களோடும் தொடர்ந்து தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறேன். பெரிய பிரச்னைகள் என்றால் குடி தண்ணீர், சாலைவசதி, பேருந்து வசதி. நெல்லை டிப்போவில் போய்ப் பார்த்தால் இருநூறுக்கும் மேற்பட்ட பஸ்கள் தினசரி பிரேக்டவுன் ஆகி நிற்பதைப் பார்க்கலாம். நெல்லை மக்கள் என்னைத் தேர்ந்தெடுத்தால் சேரன்மாதேவி தொகுதியை எப்படி வளப்படுத்தினேனோ அதே போன்று நெல்லைப் பாராளுமன்றத் தொகுதியிலும் பல வளர்ச்சிப் பணிகளை நிறைவேற்றுவேன்!"

## ஆலோசனைப் பகுதி!

"புரட்சித் தலைவியின் போர்ப்படைத் தளபதி தினகரனை பெரியகுளத்தில் வெற்றிபெற வைத்து வெற்றிக் கனியை அம்மாவின் காலடியில் சமர்ப்பிப்பேன்."

– பெரிய குளத்தில் சேடப்பட்டி பேச வேண்டியது.

## சாதனை!

அனைத்திந்திய அளவிலும் மாநில அளவிலும் கூட ஒரே ஒரு கட்சியின் தேர்தல் சின்னம்தான் கடந்த நாற்பதாண்டுகளுக்கும் மேலாக மாறாமல் இருக்கிறது. அதுதான் தி.மு.க.வின் உதயசூரியன் சின்னம்!

# மேடை

சன் டீவில இனி தினசரி திகில் ஸீரியல்ஸ்னு அனவ்ன்ஸ் பண்ணிட்டிருக்காங்க. ராத்திரி பத்து மணிக்கு மேல ஆவி, பேய், கத்தி, ரத்தத்தோட முனியாண்டி விலாஸ் விருந்து. குடும்ப மெகா ஸீரியல்ஸ் (அல்லது மெகா குடும்ப ஸீரியல்ஸ்) வ்யூவர்ஸுக்கு போரடிக்கிற அளவுக்கு ஜவ்வு தட்ட ஆரம்பிச்சுட்டதால இந்த அதிரடி மாற்றம்னு சொன்னான் டீவில இருக்கற என் பாய் ஃப்ரெண்ட் ஒருத்தன். 'நிஜமில்லை'ன்னு தெரிஞ்சும் விரும்பி பய உணர்வை – திகில் உணர்வை அனுபவிக்கறதுக்கு சைக்யாட்ரிஸ்ட்ஸ் பல காரணங்கள் சொல்றாங்க. 'அழணும் போல இருக்கு', 'உன்னை அறையணும் போல இருக்கு'ன்னெல்லம் சொல்றதில்லையா, அது மாதிரி, 'கொஞ்சம் திகிலடைஞ்சி பார்க்கணும்போல இருக்கு'ன்னு அடி மனசு எப்பவாச்சும் ஆசைப்படுமாம்.



# யானை மிதித்தா பாரதி இறந்தார்?

இதையெல்லாம் டீவி காரங்க ஆராய்ச்சி பண்ணிப் பார்த்திருக்க மாட்டாங்க, ஷ்யூரா. மர்மதேசத்தோட வெற்றி இப்படி டைவர்ட் பண்ணியிருக்கு. 'கருப்பு'க்கு அப்புறம் ரெண்டு சிவப்பு, நாலு நீலம், மூணு பிங்க் வந்து ஒரு ரவுண்ட் ஆனதும் மறுபடியும் ட்ராக் மாறிடுவாங்க. இப்பல்லாம் டீவி ஸீரியல்ஸோட சப்ஜெக்டை நிர்ணயிக்கறது வ்யூவர்ஸோ, ப்ரொட்யூஸர்ஸோ, டைரக்டர்ஸோ இல்லையாம். ஸ்பான்ஸர்ஸ்! இந்த மலேரியா சீக்கிரம் விட்டுடும்னுதான் நான் நினைக்கறேன்.

பை த வே, தூர்தர்ஷன்லேயும் ஒரு மெகா புரட்சி பண்ண ஆரம்பிச்சிருக்காங்க. முன்னெல்லாம் முத்தமிழ் மன்றத்துல தமிழறிஞர்கள் சங்கத் தமிழ்ல முறுக்கு கடிச்சிட்டிருப்பாங்க இல்லை? அதுல ஒரு அதிரடி மாற்றம். தற்செயலா லாஸ்ட் வீக் டிவி பார்க்க உட்கார்ந்தா, கவிஞர் ஞானக்கூத்தனும் இளமணி கதிர் இளையபெருமாளும் சங்கர நாராயணனும் காண்ட்டம்பரரி லிட்ரேச்சர் பத்தி பேசிட்டிருந்தாங்க.

காந்தி, நேரு, பாரதியார் மாதிரி அமரரானவங்க பேர்களை மட்டும்தான் பேட்டிகள்ல சொல்லலாம்னு ரேடியோ, டீவில எல்லாம் ஒரு மரபு வெச்சிருந்தாங்க.

இந்த பேட்டில 'பெண் கவிஞர்கள்ல க்ருஷாங்கினி நல்லா பண்ணிட்டிருக்காங்க'ன்னு ஞானக்கூத்தன் கூலா சொல்றார்; எடிட் பண்ணாம டெலிகாஸ்ட் பண்ணியிருக்காங்க! சமகால எழுத்துகள் பத்தி சங்கரநாராயணனும் பாபுலர் மேகஸின்ஸ் பத்தி இளைய பெருமாளும் உரக்க சிந்திச்சதை அபூர்வமா அலசி பண்ணியிருக்கறது ஆச்சர்யமாகவும் சந்தோஷமாகவும் இருந்தது.

தொடர்ந்து ஆர். வெங்கடேஷ், தமயந்தி, சுந்தரபுத்தன்னு இளம் எழுத்தாளர்களெல்லாம் இதுல பேசப் போறாங்களாம். என்ன ஆயிட்டிருக்கு டிடிக்கு?!

• • •

பாரதியாரைப் பத்தி அம்ஷன் குமார் ஒரு ஒன் அவர் டாகுமென்டரி எடுத்திருக்கார்.

அம்ஷன், கோடம்பாக்கத்து சம்பந்தமில்லாத தீவிர சினிமா விசுவாசிகள்ல ஒருத்தர். 'சினிமா ரசனை'ன்னு ஒரு புஸ்தகம் எழுதியிருக்கார்.

ஃபிலிம் சேம்பர்ல இந்த டாகுமென்டரி பார்க்கறதுக்கு செமை கூட்டம். ஜெயகாந்தன், அசோகமித்திரன், எடிட்டர் லெனின், சினி. விஸ்வநாதன், ரா. அ. பத்மநாபன்,

பெ.சு.மணி மாதிரி பாரதி ஆய்வாளர்கள், சுமி மாதிரி சுப்ரீம் ஸ்டார்ஸ்னு ஹவுஸ்ஃபுல்!

பாரதியோட பத்திரிகை அனுபவங்கள், பிரிட்டிஷ் கவர்ன்மென்ட் அவரை அரெஸ்ட் பண்ணதுக்கு எடுத்துக்கிட்ட முயற்சிகள், அவருக்கு எதிரா ப்ரொட்யூஸ் பண்ண டாகுமென்ட்ஸ், சார்ஜ் ஷீட் உட்பட எல்லாத்தையும் பார்வைக்குக் கொண்டு வந்திருக்குங்கற முறைல இந்தப் படம் முக்கியமானதா எனக்குப் பட்டுது.

பட், ஒன் அவர் படத்துக்கு சப்ஜெக்ட் போறலைங்கறதுதான் கடைசியா தோன்றின விஷயம்.

பாரதியார் கூடப் பழகினவங்கன்னு ரெண்டு பேர் தம்மோட அனுபவங்களைச் சொன்னாங்க. ஆச்சர்யமா இருந்தது. பாரதி ஸெண்டினரி செலிபரேஷன்ஸ் போதுகூட

# சுமி சூப்பர்மார்க்கெட்

இவங்க ஃபேஸையோ, வாய்ஸையோ கேட்டதில்லை!

பை த வே, இந்த டாகுமென்டரில ரெண்டு விஷயம் எனக்குப் பெரிய குறையா பட்டது. கேமரா அண்ட் ம்யூஸிக்.

சினிமாக்கு கேமரா ஒர்க் பண்றதுக்கும் இது மாதிரி டாகுமென்டரிக்குப் பண்றதுக்கும் மைன்யூட் டிஃபரன்ஸ் இருக்கு. கேமரா மேன் தரன், ஜிலுஜிலுப்பான லைட்டிங்ல, கடையம், நெல்லை நதிப் பகுதிகளைக் காட்டும்போது எந்த ஸெக்கண்ட்ல பாரதியார் 'சின்ன சின்ன ஆசை'ன்னு மதுபாலா மாதிரி குதிச்சிண்டு வந்துடப் போறாரோன்னு பயமா இருக்கு. நூறு வருஷம் முன்னால வறுமைலயும் இறைமைலயும் வாடி வாழ்ந்த ஒருத்தரைத் தேடிப் போகிற உருக்கம் கலந்த பரவசத்தை டைரக்டர் உணர்ந்திருந்தா இந்த ஜிலுஜிலுப்பு வந்திருக்காது.

'வியப்பு மிகும் புத்திசையில்
விபத்தகுமென் கவிதையினை –
வேந்தனே நின்
நயப்படு சன்னிதிதனிலே நான் பாட,
நீ கேட்டு
நன்கு போற்றி;
ஜயப்பறைகள் சாற்றுவித்து,
சாலுவைகள், பொற்பைகள், ஜதிபல்லக்கு
வயப் பரிவாரங்கள் முதற் பரிசளித்துப்
பல்லூழி வாழ்க நீயே'ன்னு எட்டயபுரம் ராஜாவுக்கு ஓலைத் தூக்கு எழுதினவர் லைஃப், கலர்ஃபுல்லா இருந்ததா சொல்றதுக்கில்லை.

தென், ம்யூஸிக். எல். வைத்யநாதன் தன் க்ரூப் ஆர்டிஸ்ட்ஸ் அத்தனை பேரையும் யூஸ் பண்ணியே தீர்றதுன்னு முடிவு பண்ணியிருக்கக்கூடாது. எல்லா இன்ஸ்ட்ருமென்ட்ஸும் எல்லா நேரத்துலேயும் அலறுது. இது பாரதிக்கு உவப்பா இருக்காது. அவர் வணங்கின காளிக்கு வேணுமானா சரி.

திருவல்லிக்கேணி கோயில் யானை மிதிச்சே பாரதி இறந்தார்னு அவர் இறந்த நாள்லேருந்து டெக்ஸ்ட் புக் சொஸைடியோட புக்ஸ் சொல்லிட்டு வருது.

அதைப் பலமா மறுத்து, 'தீராத வறுமையும் மாறாத போதைப் பழக்கமுமே பாரதியின் உயிரைப் பறித்தன'ன்னு சொல்லி முடியுது இந்தப் படம். படம், டிவில டெலிகாஸ்ட் ஆறதை டிலே பண்றதுக்கோ, தடை பண்றதுக்கோ இது ஒரு காரணமாயிடுமோன்னு தோணுது.

• • •

மெட்ராஸை விட்டு எங்கியும் நகர மாட்டியா சுமின்னு ஆதம்பாக்கம் சோமசேகரன் கேட்டதனால (ம்க்கும்! அன் எக்ஸ்பெக்டட் கோயின்ஸிடன்ஸ்.) லாஸ்ட் வீக் ஒருநாள் பிள்ளையார்பட்டிக்குப் போயிட்டு வந்தேன்.

என்னோட இந்தச் சின்ன வாழ்நாள்ல இவ்ளோ சுத்தமான கோயிலை நான் பார்த்ததே இல்லை. ஸ்டார் ஓட்டல் மாதிரி பளிச்சுனு வெச்சிருக்காங்க.

நல்ல உயரமும் ஆகிருதியுமான பிள்ளையார்கிட்டேயிருந்து நிறைய அருள் – கம் – ஆசி வாங்கிட்டு வந்தேன்.

"வாசகர் திருக்கடவூர் அபிராமி தாசனுக்குப் பிடிக்காட்டாலும் எனக்குப் பிடிச்சிருக்கு உன் லேங்வேஜ்! நீ எழுது சுமி"ன்னு மானசீகமா அவர் என்கிட்ட சொன்னதால உடனே என் ஸ்டைல்ல அவருக்கொரு 'போற்றி' எழுதிட்டேன்:

அபிராம தாசனுக்கு
ஆகாத போதினிலும்
அபிராமி புத்திரனே, புள்ளையாரே –
ரெடிமேடாய்
என் தமிழில் பொங்கி வரும்
ஜாலமெலாம் நீயெனக்கு
அன்புடனே அளித்திட்ட கிஃப்ட்.

(கல்கி கவிதை ஸ்பெஷலுக்கு என்கிட்ட ஏன் கேட்கலைன்னு யாராச்சும் எடிட்டரை ஒரு பிடி பிடிங்கப்பா.)



• நேருக்கு நேர் நிகழ்ச்சியில்...

# உணவுப் பழக்கமே பல நோய்க்கு மருந்து!

தனது நேயர்களின் மருத்துவம் சார்ந்த சந்தேகங்களுக்கு விளக்க மளிக்க பல்வேறு மருத்துவ நிபுணர் களையும் அழைத்து வந்து நேயர் களோடு 'நேருக்கு நேர்' நிகழ்ச்சி யொன்றை ஏற்பாடு செய்திருந்தது கோவை வானொலி. ''சரியான உணவுப் பழக்கத்தைக் கைக் கொண் டாலே பல நோய்கள் நம்மை அண் டாது!'' என்று பூஜ்யஸ்ரீ தயானந்த சரஸ்வதி ஸ்வாமிகள் பேசினார். அங்கே நாம் கேட்ட சில மருத்துவ டிப்ஸ்:

● முப்பத்தைந்து வருடத்திற்கு முன்பு ஒருவர் மாரடைப்பால் இறந் தால் முனியடித்து விட்டது என் பார்கள். இப்போது அது முனியு மில்லை, முனியாண்டியுமில்லை என உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. புகை பிடித்தல், மன உளைச்சல், சர்க்கரை வியாதி, அதிக எடை, முறையற்ற உணவுப் பழக்கம், ஆகியவை இல்லா திருந்தாலே மாரடைப்பு தவிர்க்கப் படும்.

● கிரகணத்தின் போது கர்ப்பிணி கள் எச்சரிக்கையாய் இருக்க வேண் டும் என்பது பழைய பாட்டி கதை அல்ல. அச்சமயம் தோன்றும் புற ஊதாக் கதிர்களால் கருப்பை பாதிக் கப்பட வாய்ப்பு உண்டு. இதனால் பிறக்கும் குழந்தைக்கு இதய வால்வு பழுதுபடக் கூடும்.

● ஜன்னி கண்டவர்கள் புலால் உணவைக் கட்டாயம் தவிர்க்க வேண் டும். இதனாலேயே நாற்பது சதம் நோய் குணமாகி விடும். புலால் உண்ணுவதால் மனிதர்களுக்கு விலங்கியல் தன்மை வந்து விடுகிறது என்பது அறிவியல் உண்மை.

● பக்கவாதம் வந்தால் ஒருவருக்கு சரியாகி விடு கிறது. வேறொருவருக்கு சரி யாவதில்லை. இது மூளை யில் ரத்தக் குழாய் கசிவின் அளவைப் பொறுத்தது!

● 'ஃபாஸ்ட் ஃபுட்' சீக்கிரமே ஜீரணமாகி 'வெளியே' போய் விடும். இதனால் சிலருக்கு இரவில் விழிப்பு வந்து வயிற்று வலியும், பசியும் ஏற்பட்டு விடும். இரவில் அடிக்கடி வலி வந்து சிறுநீர், மலம் கழிக்க நேர்ந்தால் அவர்களுக்கு அமிலம் அதிகம் சுரப்பதாக அர்த் தம். உடனடியாக அவர்கள் மருத் துவ ஆலோசனை பெற வேண்டும். குடல்புண் இருக்கிறதா என சோதித்து நார்ப் பொருள் உணவு களை (கைக்குத்தல் அரிசி, பழங் கள்) உண்ண வேண்டும்.

● உலகிலேயே அதிக சர்க்கரை வியாதி உள்ளவர்கள் இந்தியர்கள் தான். உண்ணும் உணவிற்கும், செய் கின்ற வேலைக்கும் உள்ள முரண் பாடே சர்க்கரை வியாதி. சாப்பாடு கூடாது என்றால் ஆறு தம்ளர் ராகிக் கஞ்சி குடிப்பது என்பது நம் நகரவாசிகளிடம் கூட உள்ள கெட்ட பழக்கம். ஒரு தம்ளர் ராகிக் கஞ்சியில் ஆறு இட்லிக்குச் சம மான சர்க்கரை உள்ளது. அறியா மைதான் இங்கே சர்க்கரை வியாதி யாக உருவம் கொள்கிறது.

● இருதய வால்வு ஆபரேஷன் செய்து கொண்ட பெண்களும் கர்ப்பம் தரிக்கலாம். இரண்டு வால்வுகளிலும் ஆபரேஷன் செய்து கொண்ட பெண்ணுக்குக் கூட சுகப் பிரசவம் ஏற்பட்டிருக்கிறது. என்ன? மருந்துகள் கையாள்வதில் மட்டும் கவனமாக இருக்க வேண் டும்.

தொகுப்பு, படம் : **கேயெஸ்வி**

**எங்களிடம் ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறும்
அனைவருக்கும் எங்களது வாழ்த்துக்கள்**

**ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி**



# P.R. JEWELLERY

**GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES**
**102, USMAN ROAD, T. NAGAR, CHENNAI - 600 017.**
**PH: 4344442. TUESDAY HOLIDAY**



**P.R. ஜுவல்லரியில் ராசிக்கல் மோதிரம் வாங்கி அணிந்துபயன்பெறுங்கள். ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 400/-**

**(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)**

*குறிப்பு: எங்கு ஜோதிடம் பார்த்தாலும் எங்களிடம் வந்து ரூ. 400/-க்கு ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறுங்கள். ஒரிஜினல் கல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.*

---



நகைக் கடைக்கு நிறைய அனுபவம் தேவை. எனக்கு 20 வருட அனுபவம் உள்ளது. P.R. ஜுவல்லரி நிறுவனம் தொடங்கி 13 ஆண்டுகள் ஆகிறது. எங்கள் கடைக்கு நிறைய வாடிக்கையாளர்கள் உள்ளனர். ஆர்டரின் பேரில் வைர நகைகள், தங்க நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள் சிறந்த முறையில் செய்து தருகிறோம். பரிசுப் பொருட்கள் ரூ. 50 முதல் ரூ. 10,000 வரை கிடைக்கும். அனைத்து ராசிக் கற்களும், ஸ்படிக மாலைகள், ஸ்படிக விநாயகர், ஸ்படிக லிங்கம், பவழ விநாயகர், பவழ மாலைகள், முத்து மாலைகள் அனைத்தும் கிடைக்கும்.

ராஜாக்கள் காலத்தில் இருந்தே வைரங்கள், வைடூரியங்கள், இரத்தினங்கள், நவரத்தினங்கள் உபயோகத்தில் உள்ளன. தற்போது 5 வருடமாக அனைவரும் ராசிக்கற்களை விரும்பி வாங்குகிறார்கள். எந்த ஜோதிடராக இருந்தாலும் ஒருவருக்கு இராசிக்கல் தேர்ந்தெடுக்க அவரது ராசிப்படியும், நடப்பு திசைப்படியும், என் படியும்தான் எழுதித் தருகிறார்கள். இதில் ராசிப்படி அணிவதுதான் மிகச் சிறந்தது. உதாரணமாக, நாம் கோவிலுக்குச் சென்று அர்ச்சனை செய்யும் பொழுதும், வீட்டில் நடைபெறும் ஹோமங்களின் போதும் ஜென்ம நட்சத்திரம், இராசி சொல்லித்தான் அர்ச்சனை செய்கிறோம். அதனால், அதன்படி அணிவதுதான் மிகச் சிறந்தது. அனைவரும் நவரத்தின மோதிரம் அணியலாம். மிகவும் நல்லது. இது 9 கிரகங்களின் பலனைத் தரும். 6 கிராம் தங்கத்தில் நவரத்தின மோதிரம் ரூ. 6,250/-

<u>நவரத்தினங்களின் பலன்கள், விலை விபரங்கள், அணிபவர்கள் வழிபட வேண்டிய ஸ்தலங்களின் விபரங்கள் :</u>

1. சூரியன் – மாணிக்கம் (RUBY) அறிவு விருத்தியாகும். நல்ல உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்லும். தைரியத்தையும் துணிச்சலையும் தரும். செல்வம் தரும். சிம்மராசிக்காரர்களும், சூரிய தசை நடப்பவர்களும் அணியலாம். 1 CARAT விலை ரூ. 1500/- ஆகிறது. வெள்ளியில் அணிவது சிறந்தது. 20 Centகல் வைத்து மோதிரம் ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் சூரியனார் கோவில். தஞ்சை மாவட்டம். கும்பகோணத்திலிருந்து 12 கி.மீ. தொலைவில் உள்ளது.

2. சந்திரன் – முத்து (PEARL) ஞாபக சக்தி, செல்வம், வாக்கில் வலிமை, பலவித வசதிகள் ஏற்படும். கடக ராசிக்காரர்களும், சந்திரன் தசை நடப்பவர்களும் அணியலாம். 1 CARAT விலை ரூ. 100/-. வெள்ளியில் அணிவது சிறந்தது. 2 காரட் முத்து வைத்து மோதிரம். ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் திங்களூர். தஞ்சை அருகில் உள்ளது.

3. குரு – புஷ்பராகம் (PUSPARAGAM) வசதி, சுபகாரியங்கள், நன்மதிப்பு, செல்வம் ஆகியவை பெருகும். தனுசு ராசி, மீன ராசிக்காரர்கள் மற்றும் குருதசை நடப்பவர்கள் அணியலாம். வெள்ளை, மஞ்சள் ஆகிய வண்ணங்களில் கிடைக்கும். தங்கத்திலும், வெள்ளியிலும் அணியலாம். 4 கிராம் தங்கத்தில் ரூ. 2300/- ஆகும். வெள்ளியில் ரூ. 400/- ஆகும். வழிபட வேண்டிய ஸ்தலம் ஆலங்குடி கும்பகோணத்தில் இருந்து 15 கி.மீ. தொலைவில் உள்ளது.

4. ராகு – கோமேதகம் (GOMEDAGAM) தடைபடும் காரியங்கள் நிறைவேறும். ராகு தசை நடப்பவர்கள் அணியலாம். வெள்ளியில் அணிவது சிறந்தது. 1 CARAT விலை ரூ. 250/- மோதிரம் விலை ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் திருநாகேஸ்வரம் கும்பகோணத்தில் இருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

5. புதன் – மரகதப் பச்சை (EMERALD) கல்வி, செல்வம், ஞானம், ஆரோக்கியம், அதிர்ஷ்ட வாய்ப்புகள் ஏற்படும். மிதுன ராசி, கன்னிராசிக்காரர்கள் மற்றும் புதன் தசை நடப்பவர்கள் அணியலாம். 1 CARAT விலை ரூ. 1500/- வெள்ளியில் அணிவது சிறந்தது. 20 Cent கல் வைத்து வெள்ளி மோதிரம் ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் திருவெண்காடு, மயிலாடு துறை அருகில் உள்ளது.

6. சுக்கிரன் – வைரம் (DIAMOND) புகழ், செல்வம், அனைத்துக் காரியங்களிலும் வெற்றி கிடைக்கும். துலா ராசி, ரிஷப ராசிக்காரர்கள் மற்றும் சுக்ர தசை நடப்பவர்கள் அணியலாம். தங்கத்தில் அணிவது சிறந்தது. 1 CARAT விலை ரூ. 35,000/- 5 Cent வைரம் வைத்து 4 கிராம் தங்கத்தில் மோதிரம் ரூ. 4,250/- வழிபட வேண்டிய ஸ்தலம் கஞ்சனூர், கும்பகோணத்தில் இருந்து சூரியனார் கோவில் வழியில் 20 கி.மீ. தொலைவில் உள்ளது.

7. கேது – வைடூரியம் (CATSEYE) வியாபாரம் பெருகும். நிறைய வருமானங்களைக் கொடுக்கும். கேது தசை நடப்பவர்கள் அணியலாம். வெள்ளியில் அணிவது சிறந்தது. 1 CARAT விலை ரூ. 1000/- 20 Cent கல் வைத்து மோதிரம் விலை ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் பெரும்பள்ளம் (வாணகிரி) மயிலாடுதுறை – பூம்புகார் வழியில் தர்மகுளம் அருகில் உள்ள நாகநாதசுவாமி கோவிலில் உள்ளது.

8. சனி – நீலம் (SAPPHIRE) அறிவு, மன அமைதி, பெயர், புகழ், செல்வம் ஆகியவை தரும். மகர ராசி, கும்பராசிக்காரர்கள் மற்றும் சனி தசை நடப்பவர்கள் அணியலாம். 1 CARAT விலை ரூ. 1500/- வெள்ளியில் அணிவது சிறந்தது. 20 Cent கல் வைத்து மோதிரம் ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் திருநள்ளாறு. காரைக்காலுக்கு அருகில் உள்ளது.

9. செவ்வாய் – பவழம் (CORAL) மனதில் துணிவு, திருஷ்டியைப் போக்கும். செல்வம் மேலும் பல நன்மைகள் கூடும். மேஷ ராசி, விருச்சிகராசிக்காரர்கள், செவ்வாய் தசை நடப்பவர்கள் அணியலாம். 1 CARAT விலை ரூ. 100/- வெள்ளியில் அணிவது சிறந்தது. 2 CARAT பவழம் வைத்து மோதிரம் ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் வைத்தீஸ்வரன் கோவில். மயிலாடுதுறையில் இருந்து 14 கி.மீ. தொலைவில் வடக்கில் உள்ளது.

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம். விலை ரூ. 400/- இதை அணிவதால் படிப்பு, ஞாபகசக்தி, வேலை வாய்ப்பு, வியாபாரம், செல்வ வளம் பெருகும். நம்பிக்கை, உழைப்பு, முயற்சி செய்தால் ராசிக்கல் மோதிரம் அணிந்து 100 சதவீத வெற்றி பெறலாம். எங்களிடம் ஜாதகம் கொண்டு வந்தால் என்ன கல் போட வேண்டும் என சொல்கிறோம். கட்டணம் கிடையாது. ஜாதகம் இல்லாதவர்கள் பிறந்த தேதி, நேரம் ஆகியவற்றைக் கொண்டு வந்தால் கம்ப்யூட்டர் மூலம் ஜாதகம் கணித்து தருகிறோம். கட்டணம் ரூ. 50/- எங்கு ஜாதகம் பார்த்தாலும் எங்களிடம் வந்து ராசிக்கல் மோதிரம் வாங்கிப் பயன்பெறுங்கள். நாங்கள் தரும் கல் ஒரிஜினல் என முழு உத்தரவாதம் தருகிறோம். தபால் எழுதினால் முழு விவர பாம்லெட் இலவசமாக அனுப்புகிறோம்.

**ADVT.**

"மராத்தியில் நான் பெற்ற புகழை விட, தமிழில் என் படைப்புகளை மொழி பெயர்த்து கா.ஸ்ரீ.ஸ்ரீ அடைந்த புகழ் அதிகம். அதற்கு அவர் தகுதியானவருங்கூட!" - சொன்னவர் காண்டேகர்.

மராட்டி நாவல் என்றால் காண்டேகர்தான்; மொழி பெயர்ப்பு என்றால் கா.ஸ்ரீ.ஸ்ரீ தான் என்று தமிழ் வாசகர்களைத் தம் எழில் கொஞ்சும் நடையால் கட்டிப் போட்ட கா.ஸ்ரீ.ஸ்ரீ அமரராகி விட்டார். *(28.7.99)*

# கா.ஸ்ரீ.ஸ்ரீ.

''கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் மொழி பெயர்ப்புகளால் எனக்குத் தற்கால இலக்கியத்தில் ஆர்வம் ஏற்பட்டது'' என்று கலைஞரே ஒரு முறை குறிப்பிட்டிருப்பதும் ''அவர் தமிழகத்து காண்டேகர்'' என்று அண்ணா புகழ்ந்துரைத்ததும் கடந்த கால சரித்திரம்.

நேர்மை, எளிமை, தூய்மை, பன்மொழிப் புலமை, ஆன்மீக நாட்டம் என உயர்ந்த லட்சியங்களுடனே தமது இறுதி மூச்சு வரை (87 வயது) வாழ்ந்து மறைந்த அமரர் கா.ஸ்ரீ.ஸ்ரீனிவாஸாசார்யா, பாரதி, உ.வே. சாமிநாதையர், கல்கி போன்றோரின் எழுத்துகளால் கவரப்பட்டவர்.

''இந்திக்கு இணையாக வேறெந்த இந்திய மொழியிலும் இலக்கிய வளம் இல்லை'' என்று ஒரு காலத்தில் இந்தி இலக்கியவாதிகள் மார் தட்டி வந்தார்கள்.

''இந்தியை விடத் தமிழ் சிறந்தது'' என்று வாதாடியதோடு மட்டுமல்லாமல், தமது அருமையான மொழி பெயர்ப்புகள் மூலம் அதை நிரூபித்தும் காட்டியவர் கா.ஸ்ரீ.ஸ்ரீ. 'இந்தியச் சிறுகதைகள்' என்ற தொகுப்பு நூல் இந்தியில் வெளியான போது அதில் கல்கி, புதுமைப்பித்தன், பி.எஸ். ராமையா, கு.ப.ரா, வ.வே.சு. ஐயர் போன்றோரின் படைப்புகளை இடம் பெறச் செய்தார். இதில் முத்தாய்ப்பான விஷயம் - பாரதியின் 'தராசு' (கட்டுரைகள்) படைப்பை அப்படியே இந்தியில் மொழி பெயர்த்து, இந்தி வாசகர்களைக் கிறக்கம் கொள்ளச் செய்ததுதான்!

1940-50 - பத்து வருட கால கட்டத்தில் காண்டேகரின் பதிமூன்று நாவல்களையும் நூற்றைம்பது சிறுகதைகளையும் தமிழாக்கிய ராட்சஸ சாதனை அவருடையது!

''சமூக அமைப்பு முறையிலே மிகப் புரட்சிகரமான மாறுதல் வேண்டும் என்பதற்கான போர் முரசு, காண்டேகரின் கதைகள்'' என்று அறிஞர் அண்ணா குறிப்பிட்டு சிலாகித்தது, மொழி பெயர்ப்புக்குக் கிடைத்த வெற்றி.

காண்டேகரின் படைப்புகளிலேயே கா.ஸ்ரீ.ஸ்ரீ.யை அதிகம் கவர்ந்தது எது?

''யயாதிதான்! புராணப் பாத்திரமான யயாதியை, இக்காலத்திய மித மிஞ்சிய வேட்கை வெளியிலாழ்ந்த மனிதனாக அவர் சித்திரித்திருக்கிறார். புராணக் கதையை அடிப்படையாகக் கொண்டு அற்புதமான நவீனம் படைக்க முடியும் என்று முதன்முதலில் நிரூபித்தவர் காண்டேகர்!'' என்று புகழாரம் சூட்டிய கா.ஸ்ரீ.ஸ்ரீ., மொழி பெயர்ப்புகள் மட்டுமல்லாமல் தாமே சிறந்த சிறுகதைகளையும் நாவல்களையும் படைப்பவராக இருந்தார். 'காந்தம்', 'நீலமாளிகை', 'அன்னபூரணி'யையெல்லாம் யாரால் மறக்க முடியும்?

''இலக்கியம் என்றால் சமூகப் பணியும் ஆன்மீகப் பணியும் உள்ளிட்டதுதான்'' என்பதே அவரது தீர்மானம். இறுதி மூச்சு வரை அதிலிருந்து இம்மியும் அவர் நகரவில்லை!

— வாஷிங்டன் ஸ்ரீதர்

# குறையொன்றுமில்லை - 29

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

ஸ்வாமி தேசிகன் இல்லறத்திலிருந்த படியே பற்றற்று வாழ்ந்ததைச் சொன்னேன்.

அவரிடத்திலே ஒரு பிரும்மசாரி வந்து, தான் கல்யாணம் பண்ணிக் கொள்ள பணம் வேண்டும் என்று கேட்டானாம். அவரிடத்தில் எங்கேயிருக்கிறது பணம்?

உடனே அவர், 'அம்மா, இது இன்றைய பரீக்ஷையா?' என்று எண்ணமிட்டபடி ஸ்ரீஸ்துதி சொல்ல ஆரம்பித்தார். சொன்னவுடனே நவநிதிகளும் வந்து குவிந்தன! அந்த பிரும்மசாரியைப் பார்த்து, எவ்வளவு வேண்டுமோ எடுத்துக் கொண்டு போ என்றார்! அவனும் வேண்டியதை வாரிக்கொண்டு போனான்.

மிச்சமிருந்த செல்வத்தை என்ன பண்ணுவது?

"உன்னை யார் இங்கே அனுப்பினார்களோ அவர்களிடமே கொண்டுபோய்க் கொடுத்துவிடு" என்று சுவாமி தேசிகன் சொல்லிவிட்டார்.

தனக்கென்று அதிலிருந்து ஒரு துளி எடுத்துக் கொண்டாரா, என்றால் இல்லை!

அவர் பிரார்த்தனை பண்ணின உடனேயே கொட்டுகிறது. ஆனால் எதிலேயும் பற்றற்ற நிலையிலேயே அவர் இருக்கிறார்.

மஹாலக்ஷ்மி அவரிடத்தில் விசேஷ காருண்யத்துடனிருந்தாள்.

ஆதி சங்கர பகவத் பாதாள் கனகதாரா ஸ்தோத்திரம் சொன்னதும் அப்படித்தான். துவாதசி அன்றைக்கு... ஒரு குடும்பம் படுகிற கஷ்டத்தைப் பார்த்து கனகதாரா ஸ்தோத்திரத்தைச் சொன்னார். கனகவர்ஷம் கொட்டியது.

அதே மாதிரி வித்யாரண்யர்–வேத பாஷ்யக்காரர்–அவருக்கும் கனகதாரை கொட்டிற்று. அவர் என்ன பண்ணினார்? பூர்வாசிரமத்திலே மஹாலக்ஷ்மியை ஸ்தோத்திரம் பண்ணினார். 'ஸ்ரீஸ்தவம்' என்று பெயர் ஸ்தோத்திரத்துக்கு. உடனே மஹாலக்ஷ்மி பிரத்யக்ஷமானாள்.

ஐச்வர்யம் வேண்டும் என்று மஹாலக்ஷ்மியிடம் அவர் கேட்டார். 'இந்த ஜன்மாவிலே அது உனக்குக் கிடைப்பது அரிது. அடுத்த ஜன்மாவிலே அனுக்கிரஹம் பண்ணுகிறேன்' என்று மஹாலக்ஷ்மி சொல்லிவிட்டாள்!

இவர் பார்த்தார், அடுத்த ஜன்மா என்பதை இந்த ஜன்மாவிலேயே வரவழைக்க வேண்டும் என்று முடிவு செய்தார். அதை எப்படிச் செய்வது...?

சன்யாஸ ஆசிரமத்தை மேற்கொண்டார்.

சன்னியாஸ ஆசிரமம் என்பது இரண்டாவது ஜன்மா.

சன்னியாஸம் ஏற்றுக் கொண்டார் வித்யாரண்யர். மறுபடியும் மஹாலக்ஷ்மியை ஸ்தோத்திரம் பண்ணினார். அவளும் பிரத்யக்ஷமானாள். ஐச்வர்யம் வேண்டும் என்று கேட்டார்.

"மறு ஜன்மாவில் அல்லவா தரேன் என்றேன்" என்றாள் மஹாலக்ஷ்மி.

"இது மறு ஜன்மமாயிற்றே"... மஹாலக்ஷ்மியையே மடக்கி விட்டார்!

"கொடுத்தேன்" என்றாள்.

ஏகமாகக் கொட்டுகிறது– கனகவர்ஷம்!

"போதுமா?" என்று கேட்கிறாள்!

"போதும்!" என்கிறார் அவர்.

"நான் வரட்டுமா?" என்று கிளம்பிப் போய்விட்டாள் அவள்.

அவர் இத்தனை செல்வத்தையும் பார்த்தார். 'மோசம் போனேனே!' என்று இரண்டு கைகளையும் தலையில் அடித்துக் கொண்டார்.

இது மொத்தமும் இதற்கு முன்பு இருந்த

ஆசிரமத்திலே இருந்தால் பயன்படும். ஆனால், இதையெல்லாம் கையாலேயே தொடக் கூடாத ஆசிரமத்தையல்லவா ஏற்றிருக்கிறார்!

எதையும் கையாலேயே தொடுவதற்கில்லையே என்று யோசித்தார்.

விஜயநகர சமஸ்தானத்திலே ஹரிஹரபுக்கரிடம் அதைக் கொண்டு போய்க் கொடுத்து ஆஸ்தான குருவாக இருந்து வேதத்துக்கெல்லாம் பாஷ்யம் எழுதினார்.

ஆதி சங்கரர் சொன்னது, வித்யாரண்யர் சொன்னது, சுவாமி தேசிகன் சொன்னது என்று மூன்று சுலோகங்களையும் நாம் சொன்னால் நிதி கொட்டுகிறதா? என்றால் இல்லை!

ஏன் கொட்டுவதில்லை என்று கேட்டால் அவர்களுக்கிருந்த வைராக்கியம் நமக்கு இல்லை.

உலக க்ஷேமத்துக்காகப் பிரார்த்திக்கிறார்கள் மகான்கள்-பற்றில்லாமல். நாம் கேட்கிறபோது, நமக்கு வேண்டும் என்றுதானே கேட்கிறோம்! அந்த சங்கோச ஞானம் நமக்கு இருக்கிற வரையில் கனக வர்ஷத்தைப் பார்க்க முடியுமா?

ஆகையினால், நம்முடைய நிலை என்ன என்பதை நாம் உணர வேண்டுமல்லவா!

மகான்களுடைய நிலையைப் பற்றி சுவாமி தேசிகன் சொல்கிறார்:

அகஸ்திய முனிவர் இருக்கிறாரே... குறு முனிவர் அவர். அவர் ஒருமுறை சமுத்திர ஜலம் மொத்தத்தையும் 'அச்சுதாயனம:' என்று ஆசமனியம் பண்ணிவிட்டார்! அனந்தாய நம: கோவிந்தாய நம: என்று சொல்ல தீர்த்தமே இல்லை.

இதை மேகங்களெல்லாம் பார்த்தனவாம்...



'இந்த அகஸ்தியர் இப்படி சமுத்திர ஜலம் மொத்தத்தையும் ஒரே அச்சுதாயநம: விலேயே தீர்த்துவிட்டாரே! அதைப் போல் நாமும் பருக வேண்டும்' என்று முடிவு செய்தனவாம்!

சமுத்திரத்துக்கு மேலே, வெள்ளையாக இருந்த மேகங்களெல்லாம் போயின... கொஞ்சம் நீரை உண்ட உடனே எல்லாம் கறுத்துப் போய் விட்டன! கிடுகிடுவென்று ஒரு காற்று அடித்தது. இங்கே பூலோகத் துக்குக் கொண்டு வந்து, உண்ட நீரை மேகங் கள் கொட்டிவிட்டன! இன்றைக்கு வரையி லும் அந்தக் காரியத்தை மேகங்கள் பண்ணு கின்றன. ஆனால், அவற்றால் அகஸ்தியர் ஆக முடியவில்லையே.

அகஸ்தியர் பண்ணினார் என்பதால் ஒரு காரியத்தை நாம் பண்ணிவிட முடியுமா?

மகான்களின் அனுஷ்டானம் நமக்கு வராது; அவர்களுடைய வைராக்கியமும் நமக்கு இல்லை. பரம வைராக்கிய நிதிகளாக அவர்கள் இருந்தார்கள். அப்பேர்ப்பட்ட வைராக்யம்!

**பி**ராணாயாமத்துக்கு ஒரு பெருமை யுண்டு. சுவாஸ சம்பந்தமான வியாதிகள் அனைத்தையும் நீக்கிவிடும். ஸ்த்ரீகளும் பண்ணலாம் பிராணாயாமத்தை. அதற்கு யார் வழிகாட்டினார்கள் என்றால், கௌசல்யா தேவி வழிகாட்டியிருக்கிறாள்– தசரதர் பத்னி.

வால்மீகி வர்ணிக்கிறார் பாருங்கள்:

கௌசல்யை இருக்கிறாளே. அவள் நித்யம் பிராணாயாமத்தினாலே தியானம் பண்ணுவாள். வேறொரு ஸ்தோத்திரமும் சொல்ல மாட்டாள். பிராணாயாமம் ஒன்றே ஸ்தோத்திரம்!

சுவாஸம் சம்பந்தமான பிணிகள் நீங்கு வதால், ரத்த ஓட்டம் சரீரத்தில் ஏற்படும். பிராணாயாமம் நன்றாகப் பண்ணக் கூடிய வர்களுக்கு ஹ்ருதய நோயே வராது. அது மாத்திரமல்ல.... பார்வை நன்றாக, கடைசி வரை தெரியும்.

அஷ்டாங்க யோகத்திலே பிராணா யாமம் என்பது மூன்றாவது ஸ்தானத்திலே இருக்கிறது. நித்தியமே நியமப்படி முப்பது பிராணாயாமம் பண்ணி விட்டோமானால் நமக்கு ஏற்படக் கூடிய ஆரோக்கியம் சொல் லும் தரமன்று.

'பிராணன்' என்பதும் அவன் இன்னருள் தான். பகவானுடைய அனுக்கிரஹத்தினால் தான் பிராணாயாமம் சித்திக்க வேண்டும்.

உடலில் வாயுக்கள் நன்றாக வேலை செய்ய பிராணாயாமம் உதவுகிறது. கெட்ட வாயுக்கள் நீங்கச் செய்கிறது.

கொட்டாவி விடுவதற்கு ஒரு வாயு; கண் சிமிட்டுவதற்கு ஒரு வாயு, நாடித் துடிப்புக் குக் காரணமான ஒரு வாயு, கை கால்களை நீட்டி மடக்குவதற்கு ஒருவாயு... இவையெல் லாம் சரியாக வேலை செய்யாவிட்டால் கை கால்களை நீட்ட முடியுமா? இமை கொட் டுதலே ஏற்படாமல் போய்விடும்!

அது மட்டுமல்ல... இந்த வாயுக்கள் சரியாக சலனம் பண்ணாமல் போனால் நம்மால் சரியாக உட்கார முடியாது!

பிராணன் போன பிற்பாடு கூட நம் சரீரத்தில் ஐந்து வாயுக்கள் இருந்து கொண் டிருக்கின்றன!

ஆனால் வாயுக்களுக்கு முக்கியமான காரணம் பிராணன்தான். பிராணன் இல்லையென்றால் மற்ற இந்த்ரியங்களால் பிரயோஜனமென்ன!

உபநிஷத் சொல்கிறது– 'பிராணன் அல்லவா இந்த சமஸ்த பூதங்களுக்கும் பெருமையளிக்கிறது?' என்று.

ஒவ்வொருவருக்கும் ப்ரியதமமான விஷயம் பிராணன் அல்லவா? அப்படிப் பட்ட பிராணனைக் கொடுத்து நம்மை ரக்ஷிக்கக் கூடியவன் விஷ்ணு. ஒன்பது வித வாயுக்களுக்கும் காரணமாயிருக்கக் கூடிய வன் விஷ்ணு.

அதற்குமேல் பாருங்கள்–

கண் பார்வை நாம் இருக்கிற வரையில் இருக்க வேண்டும்; அதற்கு மூல காரணமாய் இருக்கக் கூடியவன் விஷ்ணு. செவிப்

## அருள்வாக்கு

**வெ**ண்ணெய் பரப்பிரம்மம் மாதிரி. சுத்த ஸத்வ வெளுப்பாக இருப்பது. துளி உருக்கினால், அந்த வெளுப்பும் போய் ஸ்படிகம் மாதிரி colourless ஆகிவிடுகிறது. 'வெண்ணெய்' என்பதில் 'வெண்' என்கிற அடையாளமும் போய் 'நெய்' மாத்திரம் நிற்கிற நிலை. எந்தக் கலரிலும் அது சேராது. அதன் ருசியும் இப்படித்தான். மதுரம், மதுரம் என்று சொன்னாலும் வெண்ணெய் வாஸ்தவத்தில் தித்திப்பு இல்லை– சர்க்கரை, தேன் மாதிரி இல்லை. ஷட்–ரஸம் என்கிற ஆறு சுவைகளில் அது எதுவும் இல்லை. அதன் கலர், ருசி

புலனுக்கு மூல காரணமாக இருக்கக் கூடிய வன் விஷ்ணு.

மனம் சலிக்காமல் இருக்க வேண்டு மானால் அதைக் கண்ட விஷயங்களில் அலையவிடக் கூடாது. எப்போதும் சலனப் பட்டுக்கொண்டே இருக்கக் கூடாது. எப் போதும் சம்சயப்பட்டுக் கொண்டே இருக் கக் கூடாது. சந்தேகப்படக்கூடாது. விய சனத்தையே எப்போது பார்த்தாலும் சொல்லக் கூடாது. 'பகவான் அனுக்கிரஹத் தில் நான் சௌக்கியமாக இருக்கிறேன்' என்று சொல்ல வேண்டும். கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாலும் அப்படித்தான் சொல்ல வேண்டும். அப்படியொரு வாக்கு நம்மிடத் திலே எப்போது வருகிறது என்று பரமாத்மா பார்த்துக் கொண்டேயிருக்கிறான்.

ஆழ்வார் சொல்கிறார் பாருங்கள்:

'வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன் பால் மாளாத் காதல் நோயாளன் போல்'- இப்படி குலசேகராழ்வார் பகவானை மருத்துவன் என்கிறார்!

வேதமும் அதையேதான் சொல்கிறது: முதல் மருத்துவன் பரமாத்மா. மருந்தாகவும் மருத்துவனாகவும் இருக்கக் கூடியவன் பகவான்தான் என்கிறது.

ஒரு டாக்டர் சஸ்திர சிகிச்சை பண்ணு கிறார். அவர் பெரிய கத்தி எடுத்துக் கொண்டு வருகிறார். அந்தக் காலத்தில் சூடு போடும் சிகிச்சையும் உண்டு!

கத்தியினாலே அறுத்தாலும் சூடு வைத்தாலும் மருத்துவன்பால் நோயாளிக்கு மாறாத காதல் உண்டு. இவர் நமக்கு நல்லது தான் பண்ணுகிறார். இதனால் நாம் ஆரோக் கியமாக இருக்கலாம் என்று மருத்துவரை நம்பி அவரிடத்திலே அன்போடு இருக் கிறார்.

அந்த மாதிரி, 'வித்துவக்கோட்டம் மானே! நீ என்னைப் பலவாறு படுத்தி இந்த சம்சார பந்தத்திலே தள்ளி என்னை வதைத் தாலும் நான் உன்னை விடமாட்டேன்' என்கிறார் ஆழ்வார்.

நம்மைத் திருத்துவதற்குப் பல விதமான பரீக்ஷைகளையெல்லாம் பகவான் பண்ணு கிறான்.

பரீக்ஷையில் தேறினோமானால் அவனு டைய அனுக்கிரஹத்துக்குப் பரிபூரண பாத்திரர்களாகி விடுவோம்.

ஆகையினால், கஷ்டமும் நமக்கு வராமல் யாருக்கு வரும்? பகவானே கஷ்டப்பட்டிருக் கிறானே! கஷ்டத்துக்கு நான் பாத்திரமா னேனே என்று யார் நினைக்கிறானோ அவனைத்தான் பரமாத்மா விரும்புகிறான்.

ராமாயணத்திலே பகவான் எத்தனை கஷ்டம் அனுபவித்திருக்கிறான்! அவன் பட்ட கஷ்டத்தை நாம் அனுபவிக்கிறோமா உலகத்திலே?

இங்கேயிருந்து ஒருத்தர் பூரி க்ஷேத்திரத் துக்குப் போகிறார். அங்கே பகவான் கட்டை யிலே இருக்கிறான்! எல்லா ஊர்களிலும் சிலா ரூபமாக இருப்பவன்– கல்லிலே இருப்பவன் கட்டையிலே இருக்கிறான்!

ஏன் கட்டையிலே இருக்க வேண்டும்? என்று அந்த யாத்ரிகருக்குச் சந்தேகம் வந்தது.

(தொடரும்)



எல்லாம் சாந்தம் என்றுதான் சொல்ல வேண்டும். ஸம்ஸார ஆட்டம்போக, எதிர்த் திசையில் பலவிதமான ஸாதனைகளில் அழுகை, மயிர்க் கூச்சு, பாட்டு, நர்த்தனம் என்று ஒரே ஆட்டமாக ஆட்டிச் சிலுப்பிய பின் உண்டாகிற இந்தப் பரம சாந்தத்தை நாம் அடைகிறபோது நம்மைத் தனக்குள்ளேயே கொண்டு போய் வைத்துக் கொள்கிற பரமாத்மாதான் கிருஷ்ணன்.

வெண்ணெய் ஜலத்திலிருந்து கொண்டே அதில் ஒட்டாமலிருக்கிற மாதிரி–பால் ஜலத்தோடு அப்படியே கலந்து விடும்; அப்படியில்லாமல் வெண்ணெய் தனியாக மிதக்கிறதே, அந்த மாதிரி–நாம் லோகத்திலிருந்து கொண்டே அதில் ஒட்டாமலிருந்தால் நம்மை அவன் எடுத்து அப்படியே முழுங்கித் தனக்குள் வைத்துக் கொண்டு விடுவான். ஆக நம் உள்ளம்தான் அவனுக்கு வேண்டிய வெண்ணெய், 'நவநீத சோர்', 'சித்த சோர்' என்று இரண்டு விதமாயும் அவனையே சொல்வதால் என்ன ஏற்படுகிறது? நம் சித்தம் தான் அவன் அபஹரிக்கக்கூடிய நவநீதமாக மாறவேண்டும் என்றே ஏற்படுகிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**




அவள் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறாள், நெஞ்சில் சுமையேதுமின்றி.

தாமிரபரணி தூரத்தே மினுமினுத்தது வெள்ளிச் சரிகையாய். ஆற்றங்கரை மேட்டு வளைவுகளை மறைக்க சலவைத் தொழிலாளர்கள் போர்த்திய வண்ணப் புடைவைச் சதுரங்கள். அதற்குக் காவலாய் பக்கத்தே அமர்ந்து அசைபோடும் எருமைகள். குழி பறிக்கும் கைகளால் ஊற்றுத் தோண்ட, கரையில் பொங்கும் நதியைக் குடத்தில் அடைக்கும் பெண்கள். இடுப்புக் குடத்து நீர் தளும்பி வழிந்து, குளித்து உடுத்திய ஈரப்புடைவை, நடையைச்



தம் எத்தனை நதிகள் இருக்கின்றன, குழந்தைகளே? கடவுளே, சிறுவயதில் கணக்குப் பாடம் சொல்லித் தந்த அந்த டீச்சரின் குரல் இன்னும் ஞாபகம் இருக்கிறது. வாயில் புடைவைக் கஞ்சி மொரமொரப்பு மணக்கும் கணக்கு டீச்சர்.

தூரத்தில் ஓடும் ஆற்றைப் பார்த்துக் கொண்டு மொட்டை மாடியில் மாமர நிழலில் அவள். இலைகளில் ஊடுருவித் தரையில் வெயில் இழைத்த கோலம் காற்றில் மெல்ல அசைந்து நகர்ந்தது. நதியில் மூங்கிக் குளித்துக் குளிர்ந்து வரும் மென் காற்று உடலைத் தழுவியது. இதைப் போல் சுகம் வேறு உண்டா?காற்று தன் விரல் களைக் கூந்தலுக்குள் நுழைத்து, மென்மை யாய் அலைத்துக் கோதுவது அதை விடச்

# நதி

சுகம்தான். வெள்ளிக்கிழமை தோறும் அம்மா சாம்பி ராணிப் புகையிட்டுச் சீராட்டிய நீளக் கூந்தல், கீமோ தெரப்பியினால், இல்லை என்று ஆன இந்தச் சில மாதங்களுக்குள் ளேயே காற்றில் கூந்தலாடும் சுகம் மறந்து விட்டது. சுகங்களை விடச் சுமைகளே மனத் தில் நீடித்துத் தங்கும் போல.

இரு மார்பகச் சுமையையும் இழந்தது முதலில் பெருஞ்சுமையாய் இருந்தது. அவள் குடும்ப டாக்டர் சந்தேகப்பட்ட போது அவள் நம்பவில்லை, நம்ப விரும்பவில்லை. மூன்று ஸ்பெஷலிஸ்டுகள் பார்த்துவிட்டு, அவர்கள் எடுத்த மேம்மோக்ராம் எக்ஸ்-ரேக்கள் அனைத்தும் ஒவ்வொன்றின் நகல் போல் தெரியவும், ஒப்புக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. திடீர் அதிர்ச்சி

சிக்கல்படுத்தும் நளினம். அங்கங்கே, கழிவு எண்ணெய்ச் சிதறல்களின் கண்ணைப் பறிக் கும் வர்ண ஜாலங்கள், வானவில்லைக் கிரக ணிக்கும் வக்கிர ஆபாசமாய். நீர்ப்பரப்பில் மிதக்கும் சிகரெட், பீடித் துண்டுகள், கருகும் நுரையீரல் ரகசியங்களைப் பரிமாறி ஏளன மாய்ச் சிரித்துக் கொண்டு. பிற்பகல் வெக் கையில் நடுங்கும் கானல் நீரினூடே இங் கிருந்து அவ்வளவும் கண்ணுக்குத் தெரிய வில்லை. உணர முடிந்தது.

இது அவள் சிறு வயதில் மூச்சடக்கி முங்கிய அதே நதி இல்லை. இது புதிது. சிறிது நேரத்துக்கு முன் அவள் பார்த்த தாமிரபரணி இப்போது கடலில் சங்கமித் திருக்கும். ஒரு புது தாமிரபரணி. ஒவ்வொரு நொடியிலும் ஒரு புத்தம் புதிய தாமிரபரணி. அப்படியென்றால் இந்த உலகத்தில் மொத்

காஞ்சனா தாமோதரன்

யென்று இல்லை. ஒவ்வொரு நாளும் காலையில் விழிக்கும் போது, நினைவு சரியாகத் தெளியுமுன், ஏதோ ஒன்று உலகத்தில் சரியில்லாதது போல் உணர்வு. சில நிமிடங்களில் இந்த விஷயம் நினைவில் பிடிபட்டு விடும்... அவளுக்கு மார்பில் புற்றுநோய். இந்தத் தலைப்புச் செய்திக்குப் பின் தினசரி நிகழ்ச்சிகள் எப்போதும்போல் தொடரும்.

சாவைப் பற்றி அப்போது நினைக்கவில்லை. நினைக்க வேண்டிய தேவையிருக்கும் என்று தெரியாது. இப்போது தெரியும். தனியே பிறப்பதும் தனியே இறப்பதும் இயல்பு. அதுவும் தெரியும். ஆனால் இறக்கப் போகிறோம் என்று தெரிந்ததும்தான் அந்தத் தனிமையின் தன்மையே புரிந்தது. உலகமே இரண்டு பிரிவாய் இன்று. இறக்கப் போகும் அவள் தனியே ஒரு பிரிவில், அவள் இறப்புக்காகக் கவலைப்பட்டுக் காத்திருக்கும் பிறர் இன்னொரு பிரிவில். அவர்கள் யாருக்கும் அவள் உணர்வுகள் முழுக்கப் புரியப் போவதில்லை. ஆனால் புரிந்து கொள்ள முயல்வது இயல்பு. புரிந்தது போல் பேசுவது கடமை. அவர்களுக்காகவாவது இறந்துதான் ஆக வேண்டும். சீக்கிரமே. இந்தப் போலியற்ற நாடகத்தை எவ்வளவு நாள்தான் தாங்கிக் கொள்வது?

திவ்யாவிடம் சொல்வதா வேண்டாமா என்பது பெரிய கேள்விக்குறியானது. பதினான்கு வயதில், முதல் புடைவையும் நகையும் கேள்விகளும் கனக்க, ஆறு மாதங்களுக்கு முன் நடந்த மஞ்சள் நீராட்டு விழாவில் குங்குமச் சிமிழான அந்தக் குழந்தை முகம் நினைவுக்கு வந்தது. சாகப் போகும் தாய் உயிரோடிருக்கும் போதே அவளோடு சேர்ந்து அழுவதற்கு திவ்யாவுக்கு உரிமை உண்டு. தாயின் மார்புப் புற்றுநோய் இனி அவளுக்கும் தொடரும், சந்ததிகளுக்கும் வர வாய்ப்புண்டு என்பது அவளுக்குப் புரிய வேண்டும். முப்பத்தைந்து வயதுக்கு மேல் இரண்டு வருடத்துக்கு ஒரு முறையாவது மேம்மோக்ராம் எக்ஸ்-ரேக்கள் எடுத்து, நோய் முற்றுவதற்கு முன் கண்டு பிடித்தால் உயிர் நீடிக்க முடியும் என்பதைத் தெரிய வைக்க வேண்டும். கூடவே இருந்து மௌனமாய்க் கொல்லும் இந்த நோயைப் பற்றி ஒரு பெண் என்ற முறையில் திவ்யாவும் தெரிந்து கொள்ளத்தான் வேண்டும். திவ்யாவிடம் அவளே சொன்னாள், அவர் முன்னிலையில். திவ்யா உடைந்துதான் போனாள். ஆனால் அணைத்து ஆறுதல் சொல்லித் தேற்ற தாய்மையின் கரங்கள் இன்னும் உயிரோடிருந்தன.

அவரும் பாவம். அவளுக்கு வயது நாற்பது, அவருக்கு நாற்பத்தி மூன்று. அன்பும் ஆசையும் இன்னும் உயிர்ப்புடன். வேட்கையோடு அவர் அவளை அணைக்கையில் திடீரென்று சின்னத் தடங்கலாய் அந்தக் கட்டி. அங்கே இருந்திருக்கக் கூடாத ஒரு கட்டி. கண்கள் சந்தித்துக் கொள்ளாமல் பேச்சு ஆரம்பித்தது. நிச்சயம் இது 'அது'வாக இருக்க முடியாது. 'அதன்' பெயரை இருவராலுமே உச்சரிக்க முடியவில்லை. இது வெறும் ரத்தக்கட்டாக இருக்கலாம். அவள் எங்காவது இடித்துக் கொண்டிருக்கலாம். எப்போதும் குழந்தை மாதிரி வேகமாக ஓடிக் கொண்டிருந்தால் அப்படி இடித்துக் கொள்ள வாய்ப்பு அதிகம் உண்டு. இனி அவள் உரக்கப் பாடிக் கொண்டே வீடு முழுவதும் ஓடும் கெட்ட பழக்கத்தை விட்டுவிட வேண்டும். இந்தச் சப்பைக்கட்டுகள் முடிந்ததும் அவர் அவளை டாக்டரிடம் போகச் சொன்னார். நிச்சயமாகக் கவலைப்பட ஒன்றுமிருக்காது. ஆனால், பார்த்தால் நல்லது தானே!

மூன்று தரம் அவள் டாக்டரிடம் போவதை ஒத்திப் போட்டாள். கோபமே வராத அவருக்குக் கோபம் வந்தது. அவளுக்கு அந்தக் கோபம் ஒரு விதமான நிம்மதியைத் தந்தது. அவரது பலவீனத்தில் ஒரு தாற்காலிக பலம் அவளுக்கு. தன் பயத்தை மறந்து இது 'அது'தான் என்று நிச்சயமான அன்றிரவு இருவரும் பேசவில்லை. அவளாகவே அவரை இறுக அணைத்து உயிர்க்க வைத்தாள், ஒரு மூர்க்கத்தனத்துடன்.

முதலில் வலது பக்கம். சில மாதங்கள் கழித்து அடுத்ததும் போக வேண்டியிருந்தது. மீண்டும் குழந்தை உருவம், அதன் முழுமையின்றி. அந்த இரண்டுங்கெட்டான் வயதில் எந்த உறுப்பின் வளர்ச்சி அவளைக் கூச்சப்பட்டுக் கூன் போட்டு நடக்கச் செய்ததோ, அதே உறுப்பின் இன்மை இப்போது மனதைக் குறுகச் செய்தது. பெண்மையின் ஓர் அழகிய அடையாளம் இல்லாமல் குறைபட்ட உடலோடு அவள், உடைந்து போன கவிதை வரியாய். வேதனையில் பொசுங்கிச் சுருண்டது மனம்.

எல்லாம் அவள் சாகப் போகிறாள் என்று டாக்டர் சொல்லும் வரைதான். அன்று நல்ல மழை. நர்ஸ் இறுக்கி மூடிய கண்ணாடி ஜன்னலுக்குப் பின் அடைபட்டுக் கிடந்த அவளுக்கு மழை மண்ணைக் கிளறி எழுப்

பூம் வாசம் புலப்படவில்லை. அதை அவளாகவே கற்பனையில் நுகர்ந்து கொண்டாள்... அவள் இறக்காமலிருந்தால் இருந்திருக்கக் கூடிய வாழ்வைப் போல். வெளியே விழும் மழைக் கொப்புளங்களோடு அவளது ஞாபகக் குமிழிகள் போட்டியிட்டன. அப்பா, அம்மா, தம்பி, தங்கை, அவர், திவ்யா. நல்ல வாழ்க்கைதான். ஒரு விதத்தில் பார்த்தால் முழுதாக வாழ்ந்து முடித்தாகி விட்டது. முடிவு... அவளின் முடிவு. அந்த வார்த்தையின் முற்றுப்புள்ளி நெற்றிப் பொட்டில் தெறித்து வலித்தது. அதுவரை தொண்டைக் குழியில் அடக்கம் செய்து வைத்திருந்த அழுகை பொங்கிப் பாய்ந்தது பிரவாகமாய்.



ஓவென்ற சத்தமாய், பெரும் விம்மலாய் வெடித்து வரும் அழுகை. ட்ரிப் ஏற்ற முன்னங் கைக்குள் செருகியிருந்த இன்ட்ராவீனஸ் ஊசியைப் பிடுங்கி எறிந்து விட்டு, தரையில் முழங்காலிட்டு, முகத்தைக் கட்டில் மெத்தையில் புதைத்து, இரு கைகளாலும் ஓங்கி மெத்தையை அறைந்து அறைந்து கதறியோலமிடும் அழுகை. அவள் ஆத்திரத்தை, இயலாமையை, சுயபரிதாபத்தை, துயரத்தை, அத்துயரத்தின் தனிமையை, மெல்ல மெல்ல முழுதுமாய்க் கரைத்து, நுரையாய் அடித்துச் சென்ற அழுகை.

இந்த அந்தரங்கச் சுத்தி முடிந்ததும், எதிர்பாராத உணர்ச்சியொன்று மனத்தில் நிறைந்தது. நிர்மலமான சந்தோஷம், சாயங்கால மழை முடிந்ததும் மலரும் மஞ்சள் வெயிலாய். மனத்தில் இனம் புரியாத விடுதலை உணர்வு. சிறுவயதில் அப்பாவின் கைவட்ட அணைப்பிற்குள் நின்று விரல் வலிக்க நூல் பிடித்துப் பட்டம் விடுகையில் கைக்குள் படபடத்த காற்றின் சுதந்தரம் போல்.

எங்கிருந்தோ மனத்தில் ஒரு பலம். இனி இந்த ஆஸ்பத்திரி வாசமும் டாக்டர்களும் வேண்டாம். அடித்துச் சொல்லி விட்டாள். வலிக்கு அவளே மருந்து ஏற்றிக் கொள்ளலாம். திவ்யாவுக்கு இனி கோடை விடுமுறை. கடைசி நாட்களைச் சொந்த ஊரில்தான் கழிக்க வேண்டும். வாழையிலை வாசத்தோடு டால்டா வழிய வழிய சூடான லக்ஷ்மி விலாஸ் அல்வாவை... நயினார் குளத்தில் பச்சைப் பாசிப்பட்டு மீது நெய்த நீலப்பூக்களை... நெல்லையப்பர் கோவிலின் ஆயிரங்கால் மண்டபத்து இருளில் பயந்து ஒளிந்திருக்கும் தன் சின்னப் பாதச் சுவடுகள்... அந்தத் தாமிரபரணித் தண்ணீரை... மீண்டும் ஒரு முறை அனுபவிக்க வேண்டும்.

அவள் நினைவிலிருந்து மீண்டாள். மாலை வெயிலில் பொன்னிறமாய். மாமரப் பொந்தில் இரு கிளிகள் மும்முரமாய்ப் பேசிக் கொண்டிருந்தன. மாடிக் கைப்பிடிச் சுவரில் செதுக்கிய காரை அன்னாசியின் மேல் ஒரு பச்சை வெட்டுக்கிளி. பக்கத்தில் அசையும் தென்னை மரத் தலையில் இளநீர்க் கொத்து. அதன் மேல் பிச்சிப்பூ பற்களில் கவ்விய வாதாங்கொட்டையோடு ஓர் இளம் அணில். கீழே தோட்டத்தில் பூத்துக் குலுங்கும் மஞ்சள் பூக்கள், மஞ்சளிலேயே இத்தனை வகையா என்று வியக்கும்படி. கீச்சுக் குரல் குஞ்சுகள் புடைசூழ எதையோ கொத்திக் கொண்டு அலையும் கோழி. வாசலில் நின்று பூக்காரியிடம் பேரம் பேசும் பக்கத்து வீட்டுப் பெண்ணின் நிறைமாத கர்ப்பம். சுற்றிலும் உயிர்ப்பின் சாட்சியங்கள், இறப்பின் மறுபக்கமாய்.

கீழிருந்து திவ்யா அவளைக் கூப்பிடுவது கேட்டது. அவள் எழுந்து வீட்டுக்குள் நடந்தாள். அந்தி வேளையின் நிழல்கள் தாமிரபரணி மேல் நீண்டு கிடந்தன. இதுவரை அங்கே இருந்திராத ஒரு புது தாமிரபரணி. காலத்தைப் போலவே. ●

*''ஹெல்மெட் வாங்கணும்னு சொல்றீங்களே, புதுசா ஸ்கூட்டர் வாங்கியிருக்கீங்களா?''*

**''இல்ல, என் மனைவி புதுசா பூரிக் கட்டை வாங்கியிருக்கா; அதனால தான்!''**

– ஆர். சித்ரா

**எம்.**ஜி.ஆர்., கமலஹாசன் என எத்தனையோ பேர் ஆசைப்பட்ட விஷயம் அது. சமீபத்தில் அமரர் கல்கியின் படைப்புகள் நாட்டுடைமை ஆனபோது, கண்ணில் தென்பட்ட டிவி தொடர் தயாரிப்பாளர்களெல்லாம் கூட, பொன்னியின் செல்வனைத் தொடராக்கப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். இன்று வரை யாருக்கும் சாத்தியமாகவில்லை. திரையில் முடியாததை மேடையில் சாத்தியமாக்கி விட்டார்கள் மேஜிக் லாண்டன் குழுவினர்.

ஐந்து பாகங்கள்; சுமார் இரண்டாயிரம் பக்கங்கள்; மிகுந்த சிக்கலான முடிச்சுகளும் திருப்பங்களும் சஸ்பென்ஸ்களும் ஏராளமான பாத்திரங்களும் கொண்ட சோழ சரித்திரம். எங்கெங்கிருந்தோ புறப்படும் பாத்திரங்கள், பாகம் பாகமாகக் கடந்து வந்து ஒன்றன் மீது ஒன்று கவியும் (எழுத்தில் மட்டுமே சாத்தியமாகக்கூடிய) அதிசயம். துரோகம், சூழ்ச்சி, வீரம், காதல், பாசம், நகைச்சுவை என மனித உள்ளம் வெளிப்படுத்தக்கூடிய சகல பரிமாணங்களையும் உள்ளடக்கிய ஒரு சரித்திர காலப் பதிவு. எது சரித்திர நிகழ்வு, எதில் கற்பனைக் கலப்பு என்று இலேசில் கண்டுபிடித்து விட முடியாத வார்ப்பு. வேறெந்த வடிவிலும் மறுபதிவு செய்வதற்குப் பெரும் சிக்கல்களையும் சங்கடங்களையும் சவால்களையும் மட்டுமே தரக்கூடிய கதைப் பின்னல்.

இருப்பினும் சுமார் நான்கு மணி நேர நாடக சுருக்குப் பையில் இந்த ராட்சஸக் கலைப் படைப்பை எப்படியோ திணித்திருக்கிறார் இயக்குநர் பிரவீண். நவீன நாடகக் கலை நுட்பத்தின் அத்தனை சாத்தியங்களையும் பயன்படுத்தி, பிரமிப்பூட்டும் செட், ஒளியமைப்பு உதவியுடன், ஆரம்பித்த பத்திருபது நிமிடங்களுக்குள் பார்வையாளர்களைச் சோழர் காலத்துக்கு அழைத்துப் போய்விட முடிந்திருக்கிறது என்கிற வகையில் இயக்குநரின் உழைப்பு மிகுந்த பாராட்டுக்குரியதாகிறது.

அடுக்கடுக்காகச் சம்பவங்கள் வந்து குவியும் வேகத்தைச் சமாளிக்க இரு கூத்தாடிகள் உதவி செய்கிறார்கள். கல்கி பாஷையில் சொல்வதென்றால் பத்து காட்சிகளுக்கொருதரம், திரைமறைவுச் சம்பவங்களைப் பற்றிய 'பூர்வ கதை' சொல்கிறவர்கள்.

வசனங்களைப் பொறுத்தவரை இயக்குநருக்குச் சிரமமே இருந்திருக்க முடியாது. மேடையில் இடம்பெறும் காட்சிகளுக்கேற்ப, அந்தந்த அத்தியாயங்களில் கல்கி கையாண்டிருக்கும் வசனங்களை அப்படியே உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

புயலின் மொழியையும் தென்றலின் மொழியையும் மொழிபெயர்த்தது போலப் பேசும் நந்தினியும் குந்தவையும் மட்டும் நாடகத்தில் மிகுந்த அவஸ்தைப்பட்டிருக்கிறார்கள். அந்த லாகவம் எத்தனை முயன்றும் இருவருக்கும் ஸ்கூடவில்லை. நந்தினியாக நடித்தவருக்குத் தமிழ், சீடையாகத் தென்படுகிறதென்றால் குந்தவைக்கு அது



• மல்லுக்கட்டும் ஆழ்வார்க்கடியான்

சூயிங்கம். நாடகத்தைப் பொறுத்தவரை, ஆழ்வார்க்கடியானின் நகைச்சுவையை மிஞ்சுகிறது இந்த இருவரின் தமிழ் 'சல்லாபம்'.

மற்றபடி பழுவேட்டரையர்களும் அநிருத்தரும் வந்தியத்தேவனும் நம்பியும் பாண்டியனின் ஆபத்துதவிப் படையினரும் மந்திரவாதி ரவிதாஸனும் கண்ணிலும் செவியிலும் நிற்கிறார்கள். உழைப்பு, ஒவ்வொரு அணுவிலும் தெரிகிறது.

படகு போவது, யானை வருவது, மூடு பல்லக்கில் நந்தினி நகர்வது என மேடையில் காட்டிவிட முடியாத சில விஷயங்களைச் சற்றும் எதிர்பார்க்க முடியாதபடி சாத்தியமாக்கியிருக்கும் கலை இயக்குநர் தோட்டாதரணியைப் பாராட்ட வேண்டும். உண்மையில், நாவலில் வேண்டுமானால் கதாநாயகன் வந்தியத்தேவனாயிருக்கலாம். நாடகத்தில் அது தோட்டாதரணிதான். சில 'ஸ்டண்ட்' காட்சிகளும் தத்ரூபமாக அமைந்திருக்கின்றன.

நான்கு மணி நேர நாடகத்தைத் தயாரிப்

பது போலவே, உட்கார்ந்து பார்ப்பதும் ஒரு அசுர சாதனைதான் என்பதை உணர முடிந்தது. பொன்னியின் செல்வனின் கதை கட்டுமான சூட்சுமம் அறிந்தவர்களுக்கு மிகுந்த விறுவிறுப்பையும் ஆர்வத்தையும் எதிர்பார்ப்பையும் தருகிற இந்நாடகம், கதையை இதுவரை படிக்காதவர்களுக்கு என்னவித மான உணர்வைத் தரக்கூடும் என்பது சற்று ஆராயப்பட வேண்டிய விஷயம்.

சோழர் – பாண்டியர் பகை, சோழ ராஜ்ஜியத்தில் எழுந்த ஆட்சியுரிமைப் பிரச்னை போன்ற சரித்திர உண்மைகளின் மீது எழுப்பப்பட்ட இக்கதை, அதன் வரலாற்றுப் பின்னணி தெரியாதவர்களுக்குக் குழப்பம் தரக்கூடும்.

நாவலில் கல்கி, கதையோட்டம் கெடாமல் சரித்திரப் பின்னணியையும் ஆங்காங்கே சொல்லிக் கொண்டு போய்

# சுருக்குப் பையில் ராட்சஸத் திணிப்பு!



விடுவதால் வாசிப்பில் குழப்பம் நேர வாய்ப்பில்லை. நாடக வடிவில் அது சாத்தியமில்லாததால் புதிய 'நேயர்'களுக்குச் சற்று சங்கடம் உண்டாகக்கூடுமோ என்று தோன்றுகிறது.

ஆனாலும் அதிகபட்ச சிரத்தை, அதிகபட்ச உழைப்பு, அதிகபட்ச நேர்த்தியில் உருவாகியிருக்கும் நாடகம் இது. இன்று வெளிவரும் பல திரைப் படங்களில் கூடக் காணக் கிடைக்காத நேர்த்தி. இதை ரசிகர்கள் எப்படி எதிர்கொள்ளப் போகிறார்கள் என்பது, நலிந்து வரும் தமிழ் நாடக மேடையின் விதியையே மாற்றக்கூடிய ஒன்றாக இருக்கக்கூடும்.

மொத்த குழுவினரையும் வாழ்த்த வேண்டியது நம் கடமையாகிறது – ஒரே ஒரு சந்தேகம் இறுதிவரை சுற்றி வந்தாலுங்கூட.

ஓடக்காரி பூங்குழலி (Darling of the Novel அல்லவா!) இத்தனை குண்டாகவா இருந்திருப்பாள்?

— ஔரங்கசீப்

படங்கள் : ஸ்ரீஹரி

* குந்தவையும் வந்தியத்தேவனும்



• இளசுகளின் கார்கில் நிதி...

# இஞ்சி கருப்பழகி!

## ஒரே கேள்வி

தேர்தல் வந்தால் யாருக்கு வோட்டுப் போடுவது என்பதுதான் பிரச்னையாயிருக்கும்; யார் வோட்டுப் போடுவது என்பதே பிரச்னையாகி விட்டதே? தாக்கரே வோட்டுரிமை சம்பந்தமாக மாநில தலைமைத் தேர்தல் அதிகாரி டி.சங்கரனைப் பார்த்துவிட்டு வெளியே வந்த குழுவின் தலைவரான மனோகர் ஜோஷி எழுப்பிய கேள்வி, சிந்தனையாளர்களைக் குத்திக் கிளறிக் கிழிக்கிறது! – "கிரிமினல்களையும், சட்ட விரோதமாக செயல்படுபவர்களையும் நாம் வோட்டளிக்க அனுமதிக்கிறோம்; அப்படியிருக்கையில், பால் தாக்கரே ஏன் வோட்டுப் போடக் கூடாது?" – ஜோஷி ஸார்... நீங்க எங்கியோ போயிட்டீங்க... (போகப் போறீங்க!)

## சோனியா மேனியா

மஹாராஷ்ட்ராவைப் பொறுத்தவரை, காங்கிரசைப் பிடித்த ஏழரை நாட்டு சனி, விடவே மாட்டேனென்கிறதே? சரத்பவார் பிரிந்து போய்ச் சொதப்பியதில், இப்போது பேர் சொல்லும்படியாக ஒரு தலைவர் பாக்கி இல்லை; சவான், அந்துலே, போஸ்லே போன்ற ஒன்றிரண்டு ஒப்புக்குச் சப்பாணிகளிடம், கிராமப்புற வோட்டர்களை ஈர்க்கும் திறன் இல்லை. எல்லோரும் 'சோனியாவே கதி' என அவர் வரவை எதிர் நோக்கியிருக்கிறார்கள். லோக் சபா, அசெம்ப்ளி, இரு தேர்தல்களும் சேர்ந்து கொண்டதில் இன்னும் குழப்பமாகி விட்டது. முறையே 48+288 வேட்பாளர்களுக்கும் பிரசாரம் செய்ய, சோனியாவால் எங்கிருந்து நேரம் ஒதுக்க முடியும்? பிரசாரக் கமிட்டியின் தலைவரான சுரேஷ் கல்மாடிதான், "கவலையே படாதீர்கள்; பவாரால் நம்மை அசைக்கவே முடியாது; தலித்துகளும் முஸ்லிம்களும் நம் பக்கம்தான்" என்று தைரிய டானிக்கை புகட்டிக் கொண்டிருக்கிறார். பவாரின் தொகுதியான பாராமதிக்கு அருகிலுள்ள, "போர்" (Bhor) என்ற இடத்திலிருந்து தேர்தல் பிரசாரத்தைத் துவங்க இருக்கிறார் சோனியா; 'போர'டிக்காதிருக்க வேண்டுமே?

## 'நாயமா' இது?

ஏற்கெனவே மும்பை ரயிலில் பயணிப்பவர்கள் நாய் படும்பாடு படுகிறார்கள். அது போதாதென்று, நாய்களை விட்டே பாடுபடுத்தும்படி செய்து விட்டார்களோ ரயில்வேக்காரர்கள்? டிக்கட் இல்லாமல் பிடிபட்டால், டபாய்ப்பவர்களைப் பிடிக்க, அந்தேரி ஸ்டேஷனில், நாய்களையே ஏவி விட்டார்கள். இந்த "Operation Fortress" – கருத்தேவைப்

பட்டது, 150 டி. சிக்கன், 60 போலீஸ், 2 டாபர் மென் ரக நாய்கள். கார்கில் கலெக்ஷனைத் தோற்கடித்து விட்டது நாய்களின் கலெக்ஷன் – இரண்டே நாளில் 51,000 ரூபாய் அபராதம். கௌண்டர்களிலும் 20% அதிக டிக்கட் விற்பனை! ஆனால் மனித உரிமைக் கழகங்களும் மிருக உரிமைக் கழகங்களும் போட்ட கூக்குரலில், நாய்களே அரண்டு விட்டன. 'நாஜித்தனமாக இருக்கிறதே' என்று, ரயில்வே மினிஸ்டர் நாயக்கே விசனப்பட்டு, நாய்களுக்குத் தடை விதித்து விட்டார்!

## 'கார்' சேவை

**கா**ர்கில் ஜவான்களுக்கு எத்தனையோ



• பிங்கி விரானி

பேர் நிதி திரட்டினார்கள்; ஆனால் எங்கள் மும்பைக் குழந்தைகள் போலாகுமா? ஸ்நேஹா, ப்ரதீக், ஆதித்யா முதலான ஒரு 40 இளசுகள் தினமும் கார்களைக் கழுவி 53,000 ரூபாய் சேர்த்து அத்வானியிடம் சமர்ப்பித்திருக்கிறார்கள். இன்னும் சிலர், பிளாட்ஃபாரங்களில் அமர்ந்து 'ஷூ பாலிஷ்' போட்டுச் சேர்த்த காசை அளித்திருக்கிறார்கள். எல்லாம் செழிப்பும் கொழுப்புமான பின்னணி உடையவர்கள்தான்; காரில் சுற்ற ஆசைப் படாமல், காரைச் சுற்ற (சுத்தப்படுத்துவதற்குதான்) ஆசைப் பட்டிருக்கிறார்களே… பாராட்ட வேண்டாமா?

## மும்பையைப் பிடித்த மும்மூர்த்திகள்

**க**டந்த காலத்தில் குறிப்பிடுமளவுக்கு மும்பையின் நிலை மோசமாகி விட்டதா என்ன? "அருணாஸ் ஸ்டோரி" புகழ் பிங்கி விரானி, தமது அடுத்த நாவலுக்கு "Once was Bombay" எனப் பெயரிட்டிருக்கிறார். ஒரு காலத்தில் 'பட்டு' போல் இருந்த நகரம், இன்று அண்டர்வர்ல்டின் ஆதிக்கத்தால் பட்டுப் போயிருக்கும் அவலத்தை விஸ்தாரமாக விவரிக்கிறார். மும்பையின் பல இடங்களின் பெயர்க் காரணங்கள், ஒரு சுவையான போனஸ் – "பெண்டி (வெண்டை) பஜார், ஒரு காலத்தில் வெண்டைக்காய் தோட்டமாயிருந்ததாம்; சின்ச் (புளி) போக்ளியில் ஒரே புளிய மரங்களாம்; வடாலாவில் ஆல (வட்) விருட்சங்களாம் – ஆனால் மும்பையின் எல்லா அவலத்துக்கும் காரணம், ஜின்னா, அத்வானி, பால் தாக்கரே ஆகிய மூவரும்தான் என ஒரே போடாகப் போட்டு விட்டாரே? பிங்கி, "வீரானி"தான்!

## இஞ்சி கடுப்பழகி

**க**டுப்படிக்க வைத்துவிட்டது இஞ்சியின் விலை; கிலோ ரூ. 80 என்று டாலர் விலை சொன்ன கறிகாய்க்காரர்களிடம் சண்டைக்கே போய் விட்டனர் மும்பை வாசிகள். கேரளாவிலிருந்து சப்ளை இல்லையாம்! ஆனால்

• நாய்கள் பரிசோதித்த பயணிகள்!



இதென்ன வெங்காயமா? விலை யேற்றத்துக்காக அரசையே கவிழ்ப்பதற்கு? பச்சைமிளகாய், கொத்தமல்லி வகையறாக்களை வைத்துக் கொண்டு சமாளித்தால் போயிற்று என நினைத்தால்… இதென்ன…? அநியாய 'டோல்' வசூலிப்பை எதிர்த்து, லாரி, ட்ரக்காரர்கள் வேறு ஸ்ட்ரைக்கை துவங்கி விட்டார்களே…? ஹூம், இஞ்சி வாங்காமலே இஞ்சி தின்ற என்னவோ போலாகி விட்டனர் மும்பைக்காரர்கள்.

— ஜெயஸ்ரீ ராஜ்

# அவசரத் மணமகள் தேவை

மேள சத்தம் கேட்டது. முகூர்த்த தினங்கள் ஆரம்பித்து விட்டன.

ஒரு வித எரிச்சலுடன் புரண்டு படுத்தேன்.

கல்யாண மண்டபத்துக்குப் பக்கத்து வீட்டில் குடி வந்தது தப்பு என்று மனசு முனகியது.

முதல் கேசட் நாதஸ்வரம். அப்புறம் 'என்னைத் தாலாட்ட வருவாளா' என்று விடியற்காலையில் ஸ்பீக்கர் அலறும். காலையின் சொகுசுத் தூக்கம் அவுட்.

அறைக் கதவைத் திறந்து எட்டிப் பார்த்தேன்.

என் உயரத்திற்கும் குறைவான காம்பவுண்டு சுவர். அந்தப்" பக்கம் கல்யாண மண்டபம். சிரமமின்றி நிகழ்ச்சிகளை கண்டு களிக்கலாம்.

சமையலறை துல்லியமாகத் தெரியும். எல்லா வித வாசனைகளும் வீசும். சுவரை ஒட்டிய இறுதி மூலையில் வரிசையாய் பாத்ரூம்கள். வரிசையாய் அவஸ்தை மனிதர்கள் தெரிவார்கள்.

'இந்த மாதம் இன்னும் எத்தனை முகூர்த்தங்கள்' என்று அலுப்புடன் பிரஷ்ஷைக் கையிலெடுத்த அந்த வினாடியில் என் வாழ்வையே திசை திருப்பும் சம்பவம் நிகழ்ந்தது.

காம்பவுண்டு சுவரை மீறித் தெரிந்த முகம் எனக்குப் பரிச்சயம் இல்லாதது.

"ஸார்."

முதலில் எவரையோ என்று நினைத்தவன் குரலின் அழுத்தம் ஸ்பீக்கர் இரைச்சலை மீறிக் கேட்க, திரும்பினேன்.

"இந்தாங்க காப்பி."

பில்டர் காபியின் மணம்.

"எனக்கா!"

"பிடிங்க ஸார். எனக்கு நிறைய வேலை இருக்கு ஆங்... அப்புறம்... டிபன் ரெடியானதும் கொண்டு வரேன். நீங்க எட்டு மணிக்குத் தானே கிளம்பணும்?"

அடக்கடவுளே. இது என்ன புதுக் குழப்பம்.

"ஸார். நீங்க தப்பா... நான் இங்கே குடியிருக்கிறவன்" மறுக்க முயன்றேன்.

"உங்க பேர் சிவராமகிருஷ்ணன்தானே."

"ஆமா."

"அப்ப காபியைப் பிடிங்க. டிபன் தர வரும்போது டபரா செட்டை வாங்கிக்கறேன்."

போய் விட்டான்.



அதிர்ஷ்டம் காம்பவுண்டு சுவரை மீறி அடிக்கிறதா? எடுத்துக் குடிக்கலாமா? வேறு பிரச்னைகள் வருமா?

ஊசலாடும் மனதை காபி ஆசை வென்றது. வாய் கொப்பளித்து காபி குடித்ததும் உடம்பு முழுக்க புத்துணர்ச்சி பரவியது.

இங்கே ஒரு தகவல் சொல்ல வேண்டும். பக்கத்துக் கல்யாண மண்டப நீளத்துக்கு நான் குடியிருக்கிற வீடும் அமைந்திருக்கிறது. மெயின் வாசலில் சொந்தக்காரர் குடியிருக்க, வீட்டின் வலது பக்க நடைபாதை வழியாய் வந்தால் எனக்கு அமைந்த வாடகை போர்ஷன்.

என்னைத் தவிர இன்னொரு நபரும் அடுத்த போர்ஷனில் குடியிருக்கிறார். பாதி நாட்கள் டூரில் இருப்பார். மீதி நாட்களில் பாதி சொந்த ஊருக்குப் போய் விடுவார். எதற்காக இந்த அறைக்கு மாசம் ஐநூறு தருகிறார் என்று எனக்கே புரியாத புதிர்.

# 1

குளித்துவிட்டு வந்தேன்.

நன்றாக விடிந்து விட்டது. நாளை கல்யாணம். இன்று மாப்பிள்ளை அழைப்பு என்று பக்கத்து மண்டபம் நிகழ்ச்சி நிரல் மனத்தில் ஓடியது.

பெண் வீட்டார் வந்து விட்டார்கள். பெண்ணின் மாமாவோ... யாரோ ஒருத்தர் 'இந்தக் கல்யாணமே அவர் நடத்தி வைப்பது' என்கிற பொறுப்புணர்வுடன் அலைந்து கொண்டிருந்தார்.

மணி ஏழு. எட்டு மணிக்குக் கிளம்பினால் போதும். வாசற்படியில் நின்று இவ்வளவும் அவதானித்துக் கொண்டிருந்தேன்.

விடியலில் தெரிந்த அதே முகம் மீண்டும் முகம் காட்டியது.

"காபி நன்னா இருந்துதா?"

"ம்."

டபரா செட்டை நீட்டினேன்.

"இந்தாங்கோ டபன். இன்னொரு டோஸ் காபி கொண்டு வரேன்."

என்னால் இதற்கு மேல் பொறுக்க முடியவில்லை.

"ஸார். நீங்க யார்னே எனக்குத் தெரியலே. தப்பா.. எனக்கு உபசாரம்.. ப்ளீஸ்.. வேண்டாமே. யாராவது பார்த்து.. உங்க மேல.. பிரச்னை..."

துண்டு துண்டாய் வார்த்தைகளை உதிர்த்தேன்.

"டபனைப் பிடிங்கோ. இன்னும் அஞ்சே நிமிஷத்துல உங்க குழப்பம் தீரும்!" போய்விட்டார். •

**ரிஷபன்**

இட்லி, பொங்கல், வடை, கேசரி. தனியே தம்ளரில் சட்னி, சாம்பார்.

இன்று என்ன ஆச்சு, என் கிரகங்களுக்கு?

டிபனை சாப்பிட்டு கை கழுவியபோது காபி தம்ளர் நீண்டது.

இந்தத் தடவை வேறு முகம்.

"என்னைத் தெரியறதா... சிவா."

புன்னகை மின்னிய பார்வை.

"நீ... நீங்க."

"சங்கரன்."

என்னுடைய கிளாஸ்மேட். ஸ்கூல் பைனல் வரை ஒன்றாய்ப் படித்தோம். பின்னர் நான் கல்லூரி வாசலைத் தொட்ட போது சங்கரன் 'சரஸ்வதி வந்தனம்' செய்து விட்டு படிப்பிலிருந்து விலகிக் கொண்டான்.

"நான் இப்போ கல்யாண காண்ட்ராக்ட் எடுக்கறேன்."

விசிட்டிங் கார்டை நீட்டினான். ஃபோன் நம்பருடன் விலாசம்.

என்னுடைய டிஸ்டிங்ஷன். இன்றைய ஒற்றை அறை வாசம். காமன் பாத்ரூம் டாய் லட். மாதச் சம்பளத்திற்கு நாயாய் உழைத்து. பெருமூச்சு வெளிப்பட்டது.

"நேத்தே பார்த்துட்டேன். நீ இங்கே குடியிருக்கேன்னு புரிஞ்சுது. ஒரு சர்ப்ரைஸ் தரலாம்னு காத்திருந்து, மார்னிங் காபில ஆரம்பிச்சேன்" என்றான் சிரிப்புடன்.

"தேங்க்ஸ் சங்கர்."

"அதுக்குள்ளே சொல்லாதே. நைட் டின்னர். அப்புறம் நாளைக்கு. எல்லாம் முடியட்டும்."

"எதுக்கு வீண் சிரமம்."

"பேசாதே. என்னோட சமையல் பிடிக் கலியா."

"சேச்சே."

"சித்ரா. இப்ப எப்படி இருக்கா?"

"அவளை இன்னும் ஞாபகம் வச்சிருக் கியா?"

"சங்கரன் வெட்கமாய்த் தலையசைத் தான்.

"ரெண்டு குழந்தைகள். இங்கே இல்லே. சிங்கப்பூர் போயிட்டா."

"நல்லா இருந்தா சரி" என்றான் முழு மன சாய்.

அவனை வினோதமாய்ப் பார்த்தேன். காதலித்தவளை கைப்பிடிக்க முடியாமல் போனாலும், 'எங்கிருந்தாலும் வாழ்க' மனப் பான்மை சற்று அதிசயிக்க வைத்தது.

"சாயங்காலம் எப்ப வருவே? ஃபர்ஸ்ட் கிளாஸ் டிபன் இருக்கு."

"வேணாம் சங்கர். நான் வர எட்டு மணி யாகும்."

"சரி. சாப்பாடு இங்கேதான். புரிஞ்சுதா" தம்ளரை வாங்கிக் கொண்டு போனான்.

இன்னொரு தடவை பெருமூச்சு விட் டேன்.

இரவு எட்டரை மணிக்கு வீடு திரும் பியபோது ஜானவாசக் கார் அலங்கரித்து நிறுத்தப்பட்டிருந்தது. கூட்டம் அதிகரித் திருந்தது.

பட்டுப் புடைவைகள், நகைகள் என்று சூழலே ஜாஜ்வல்யமாகிக் கொண்டிருந்தது.

சங்கரைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

எனக்குள் தடுமாற்றம். அவனை நம்பிச் சாப்பிடாமல் வந்து விட்டேன். மண்டபத்தி லிருந்து சாப்பாடு அனுப்புவது என்ன இருந் தாலும் அத்தனை சுலபம் இல்லை.

அரை மணி நேரம் கழிந்திருக்கும்.

கதவைத் திறந்து வைத்துக் கொண்டு அமர்ந்திருந்தேன். அதுவும் அலுப்புத் தர, எழுந்து கதவை வெறுமனே மூடிவிட்டு வாசலுக்கு வந்தேன்.

ஜானவாசக் கார் இல்லை. கூட்டமும் குறைந்திருந்தது. ஏதாவது கோவிலிலிருந்து

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆




**"கடித உறைமேல ஃப்ரம் அட்ரஸ் எழுதற இடத்துல உன்னுடைய அட்ரஸை எழுதாம சந்தனம் பூசறியே... ஏன்?"**

**"இது மொட்டைக் கடுதாசியாச்சே!"**

**– ஸ்ரீதர்**

அழைப்பு இருக்கும். அங்கே போயிருப்பார்கள்.

பத்து நிமிஷம் நின்றேன்.

இனி காத்திருப்பது வீண். கடை வீதிக்குப் போனால் இட்லிக் கடை ஆரம்பித்திருக்கும். பர்ஸை எடுத்துக் கொண்டு கிளம்ப எண்ணி அறைக்குத் திரும்பினேன்.

கதவைத் திறந்தால்... விளக்கு அணைந்திருந்தது. போட்டு விட்டுத்தானே போனேன்.

ஸ்விட்சைப் போட முயன்றபோது ஒரு பெண்ணின் கரம் என்னைத் தடுத்தது.

இருட்டிலும் புலப்பட்ட பெண்ணின் ஸ்பரிசம்.

அலறியிருப்பேன். உள்ளுணர்வு தடுத்து விட்டது.

"யா... யாரு?"

"ப்ளீஸ். லைட்டைப் போடாதிங்க."

மண்டப வெளிச்சம் லேசாய் ஜன்னல் வழியே கசிந்தது. இதற்குள் அந்த அரையிருட்டிற்கு விழிகள் பழகி அவளைப் பார்த்தேன்.

பட்டுப் புடைவையில் இருந்தாள். அலங்கரிக்கப்பட்டவள்.

எனக்குள் யூகங்கள் கிளர்ந்தன. சந்தேகத்துடன் பார்த்தேன்.

"நீ..."

"கல்யாணப் பெண்தான். எனக்குத்தான் நாளைக்கு மேரேஜ்."

"இங்கே... எதுக்கு?" என்றேன் புரியாமல்.

"எனக்கு இஷ்டமில்லே. எங்கப்பா, அம்மா என் பேச்சைக் கேட்கலே. மிரட்டி இழுத்துக்கிட்டு வந்துட்டாங்க. இத்தனை நாளா... வீட்டுல அடைச்சு வச்சிருந்தாங்க."

அடிப்பாவி. என்னை சிக்கலில் மாட்டி விடத் தீர்மானித்தாயா?

"உன்னைத் தேட மாட்டாங்களா?"

"தேடட்டும். நல்லாத் தேடட்டும்."

"நீ இங்கே இருக்கிறதை..."

"நிச்சயமா. நான் இங்கே இருப்பேன்னு நினைக்க மாட்டாங்க. நீங்க மட்டும் எனக்கு ஹெல்ப் பண்ணா."

மிக மெல்லிய குரலில்தான் பேசிக் கொண்டிருந்தாள்.

அவளின் வார்த்தைகள் ஒவ்வொன்றும் எனக்குள் பிரளயம் தந்தன.

"எனக்கு பயம்மா இருக்கு" என்றேன் கவலையுடன்.

"ப்ளீஸ். ஹெல்ப் பண்ணுங்க. அவங்க டென்ஷன் ஆகி... ஏதாச்சும் ஒரு முடிவு எடுத்துருவாங்க. ஒரு வேளை என் தங்கையைக் கூட கல்யாணம் பண்ணிக் கொடுத்துரலாம். நீங்க மட்டும் உதவினா எனக்கு நான் விருப்பப்பட்ட வாழ்க்கை கிடைக்கும். ப்ளீஸ்..."

குழந்தைத்தனமாய்ப் பேசுவது போலிருந்தது.

பெண்ணைக் காணோம் என்றதும் அப்படியே விட்டு விடுவார்களா? பக்கத்தில் தேட முயன்றால்... என் அறையில் அவளைக் கண்டு பிடித்தால். போலீஸ் வரை புகார் போய் விட்டால்.

"சிவராமகிருஷ்ணா!"

அதே சமயம் குரல் வெளியிலிருந்து சத்தமாய்க் கேட்டது.

(தொடரும்)

## ராஜ குடும்பத்தின் கோபத்தைக் கிளறியவர்!



• சித்தராமையா

கர்நாடகத்தின் துணை முதல்வராயிருந்த சித்தராமையாவின் பதவியை, முதல்வர் ஜே.எச். பட்டேல் பறித்தபோது மனங்கொள்ளா மகிழ்ச்சியடைந்தவர், மைசூர் அரச குடும்பத்தைச் சேர்ந்த பிரமோதா தேவிதான்! தாம் வணங்கும் சாமுண்டீஸ்வரிதான் சித்தராமையாவுக்கு இத்தண்டனையை வழங்கியிருப்பதாகவும் கூறுகிறார்.

அப்படியென்ன கோபம்? மைசூர் அரண்மனையைக் கர்நாடக அரசு தம் வசம் எடுத்துக் கொண்டதற்கு சித்தராமையாதான் பெரிதும் காரணம் என்று பிரமோதா தேவி நம்புவதுதான்! இதன் காரணமாக, சித்தராமையா எந்தத் தொகுதியில் போட்டியிட்டாலும் தாம் அவரை எதிர்த்துப் போட்டியிட்டுத் தோற்கடிக்கப் போவதாகவும் சபதம் எடுத்திருக்கிறார் தேவி!

— மகேந்திரன்













Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager; Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax : 2345621
Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 950/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 /99* Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka